# சைவசித்தாந்த மெய்ப்பொருளியல்

(இந்து நாகரிகம் - உயர் தர வகுப்பு, பல்கலைக்கழக உள்வாரி, வெளிவாரி பட்டப்படிப்பு மாணவர்களுக்குரியது)


திருமதி. கலைவாணி இராமநாதன், M.A.
சிரேஷ்ட விரிவுரையாளர்,
இந்து நாகரிகத்துறை,
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்.



அச்சிட்டோர் :
கார்த்திகேயன் (பிறைவேட்) லிமிட்டெட்,
501/2 காலி வீதி,
கொழும்பு - 06,
தொலைபேசி : 595875.

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | சைவசித்தாந்த மெய்ப் பொருளியல்<br>Realistic Philosophy of<br>Saivasiddhanta. |
| முதற் பதிப்பு<br>First Edition | .<br>: | தை, 1998<br>January,1998 |
| பதிப்புரிமை | : | ஆசிரியருக்கே |
| வெளியீடு | : | திருமதி. கலைவாணி இராமநாதன், M.A<br>இந்து நாகரிகத்துறை,<br>யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்,<br>இலங்கை.<br><br>சுதுமலை வீதி, தாவடிச் சந்தி<br>கொக்குவில்,<br>யாழ்ப்பாணம். |
| நூலின் விலை | : | 175/= |
| அச்சிட்டோர் | : | கார்த்திகேயன் (பிறைவேட்) லிமிட்டெட்<br>501/2, காலிவீதி, கொழும்பு- 6.<br>ஸ்ரீலங்கா, 1997 |


*திரிகரண சுத்தியும்*
*காரிய சித்தியும் தருவாய்*



*ஓம் சிவகுமாராய தஸ்மை ஸ்ரீ*
*குருவே நமஹ*

# காணிக்கை

எனது சைவசித்தாந்த ஞானாசானாகிய அமரத்துவமடைந்த மதுரைக் காமராஜர் பல்கலைக்கழகம் முன்னாள் வட மொழித்துறைத் தலைவரும் பேராசிரியருமாகிய

கலாநிதி **கோ. சுந்தரமூர்த்தி ஐயர்** M.A., Ph.D.
அவர்கட்கு,

இச் சிறு நூலினை அன்புடன்
காணிக்கையாக்குகிறேன்.

## நூலின் உள்ளே.....

# ஆசியுரை

பேராசிரியர். கலாநிதி. பொ. பாலசுந்தரம்பிள்ளை
துணைவேந்தர், யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்

யாழ்ப்பாணப் பல்கலைக்கழக இந்து நாகரிகத்துறையில் சிரேஷ்ட விரிவுரையாளராக இருக்கும் திருமதி கலைவாணி இராமநாதன் ''சைவ சித்தாந்த மெய்ப் பொருளியல்'' என்னும் நூலை எழுதி வெளியிடுவதையிட்டு மிகுந்த மகிழ்ச்சி அடைகின்றேன். இவர் ஏலவே (1) வேதபாரம்பரியமும் சைவசித்தாந்தமும் (2) இந்து தர்மமும் வர்ண தர்மமும், ஆகிய இரு நூல்களையும் மற்றும் பல ஆய்வுக் கட்டுரைகளையும் எழுதியுள்ளார். அண்மைக்காலமாக சைவசித்தாந்தத்தில் ஆய்வுகள் மேற்கொண்டும், எழுதியும், பேசியும் வருகின்றார். மதுரை காமராஜ் பல்கலைக்கழகத்தில் மூன்று வருடங்களுக்கு மேலாக கலாநிதிப் படிப்பிற்காக ஆய்வை மேற்கொண்டிருந்தார். இவரது மேற்பார்வையாளர் மரணமானதினால் சிறிது தாமதம் ஏற்பட்டாலும், கலாநிதிப்பட்டத்துக்கான ஆய்வும் முடிவுறும் நிலையிலிருப்பதாக அறிகின்றேன்.

சைவசித்தாந்தத்தில் பொதுவில் பலர் ஈடுபாடு கொண்டிருப்பினும் ஆழ்ந்த புலமையும், அங்கீகரிக்கப்பட்ட கல்வித் தகைமையும் கொண்டோர் மிகவும் அரிது. பல்கலைக்கழகத்தில், இக் கற்கை நெறியை விருத்தி செய்வதற்கு இது பெரும் தடையாக இருக்கின்றது.

திருமதி. இராமநாதன் இந்துநாகரிகக் கற்கைநெறியை இருபது வருடங்களுக்கு மேலாக பல்கலைக்கழகத்தில் கற்பித்து வருகின்றார். இக் கற்கைநெறியை விஞ்ஞான ரீதியில் புதிய பரிமாணத்தில் விருத்தி செய்வதற்கு இவர் பெரும் பங்காற்றி வருகின்றார்.

திருமதி. இராமநாதன் இந்து நாகரிகம் தொடர்பாக மேலும் பல ஆய்வுகள், பாடநூல்கள், பொதுமக்களுக்கு ஏற்ற எளிமையான சமய நூல்கள் போன்றவற்றை எழுத வேண்டுமெனக் கேட்டுக் கொள்வதுடன், எனது நல்லாசிகளை வழங்குவதில் மகிழ்ச்சியடைகிறேன்.

திகதி:
12.10.1997.

அன்புடன்
பேராசிரியர். பொ. பாலசுந்தரம்பிள்ளை.

# நூன்முகம்

பேராசிரியர், கலாநிதி, சி. பத்மநாதன்.
பல்கலைக்கழக மான்ய ஆணைக்குழு - பிரதித்தலைவர்.
20, வாட்பிளேஸ், கொழும்பு-07.

'சைவசித்தாந்த மெய்ப்பொருளியல்' என்னும் இந் நூலின் ஆசிரியர் திருமதி. கலைவாணி. இராமநாதன் யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத்தில் இந்து நாகரிகத்துறையில் முதுநிலைவிரிவுரையாளராக இருக்கின்றார். சைவ சித்தாந்த நூல்களை நெடும் காலமாகப் பயின்று ஆராய்ந்தவர். அதனைப் பல்கலைக்கழக மாணவர்கட்குப் பல வருடங்கள் கற்பித்ததன் விளைவாகத் தான் பெற்ற புலமையையும் அடிப்படையாகக் கொண்டு இந்நூலை எழுதியுள்ளார். இந்நூலில் ஐந்து அத்தியாயங்கள் அடங்கியுள்ளன. சைவசித்தாந்தத்துவத்தின் தோற்றம் வளர்ச்சி, அடிப்படைக் கோட்பாடுகள் என்பன இந்நூலிலே ஆராயப்பட்டுள்ளன. ஆசிரியர் தனது கருத்துக்களை சுருக்கமாகவும் தெளிவாகவும் முன்வைத்துள்ளமை இந்நூலின் சிறப்புக்களில் ஒன்றாகும். இந்து நாகரிகம் கற்கும் மாணவர்கட்கும் அறிவை நாடுபவர்கட்கும் ஆராய்ச்சியாளருக்கும் துணைபுரியக்கூடிய நூலாக இது அமைகின்றது.

இந்து சமய மரபிலே அடங்கிய வழிபாட்டு நெறிகளிலே சைவம் மிகப் புராதனமானது. அது ஏறக்குறைய 2000 ஆண்டுகட்கு முற்பட்ட வரலாற்றைக் கொண்டது. வரலாற்று ரீதியாக நோக்குமிடத்து சைவம் வேதங்கட்கும் முற்பட்டது. ஆயினும் வைதீக சிந்தனைகளினாலே அது வளம் பெற்றுள்ளது. 'சைவ சமயம்' வைதீக சமயம் என்று கொள்வது மரபாகி விட்டது. எமது திருமுறைகளும் இதனை வலியுறுத்துகின்றன. மெய்கண்ட சாத்திரங்கட்கும் இக்கருத்து அடிப்படையானது.

சைவ சமயத்தில் காஷ்மீர சைவம், வீரசைவம், சைவசித்தாந்தம் என மூன்று பெரும் பிரிவுகள் உள்ளன. இவற்றுள் காஷ்மீர சைவம் ஒரு வகையிலே சங்கரவேதாந்தத்துடன் உடன்பாடு கொண்டது. சைவசித்தாந்தத்திற்கும் தென்னிந்திய வைஷ்ணவசம்பிரதாயத்திற்கு மிடையில் சில பொதுப்பண்புகள் காணப்படுகின்றன. இப்பொதுப் பண்புகளைப் பற்றிய ஆய்வுகளில் கவனம் செலுத்துவதும் ஒரு அவசியமான

தேவையாகவுமுள்ளது. திருமதி. கலைவாணி போன்றவர்கள் இதிலும் கவனம் செலுத்த வேண்டும். இப்போது சமயங்கள் தொடர்பாக பல தவறான எண்ணங்கள் எம்மிடையே நிலவி வருகின்றன. வித்துவார்த்தமான ஆராய்ச்சிகளின் மூலமே சிந்தனைகளைத் தெளிவு படுத்தமுடியும். திருமதி. கலைவாணி அவர்கள் கொழும்புப்பல்கலைக்கழகத்தில் இந்து நாகரிகத்தை முதல் முதல் பயின்று சித்தி பெற்ற மாணவர்களில் ஒருவராவார். இத்துறையிலே அவர்களைப் பயிற்றுவித்த ஆசிரியர்களில் ஒருவராக இருப்பதால் இந்நூன்முகத்தை எழுதுவதில் மகிழ்ச்சியடைகிறேன். அத்துடன் அவரது ஆய்வுப்பணிகள் மேன்மேலும் வளர்ச்சியடைதற்கு எனது நல்லாசிகளையும் வழங்குகிறேன்.

11.12.1997. பேராசிரியர், கலாநிதி, சி. பத்மநாதன்.

# அறிமுகவுரை

**பேராசிரியர். வி. சிவசாமி.**
தலைவர், வடமொழித்துறை, யாழ். பல்கலைக்கழகம்.

இந்திய மெய்யியல் வட்டங்களில் முக்கியமான ஒன்றாகவும், தமிழகத்திற்கே சிறப்பான மெய்யியலாகவும், இன்றும் உயிரோட்டமுள்ள வாழும் மெய்யியலாகவும் சைவசித்தாந்தம் திகழ்கின்றது. இது சிவசம்பந்தமானதாகவும், அனைத்திந்திய மெய்யியல் பாரம்பரியத்திற்குரிய தன்மையும் கொண்டியங்குகின்றது. ''திராவிட மூளையின் சாரம்'' என இதனை ஆங்கில நாட்டவரான அருட் திரு. ஜி. யு. போப் அவர்கள் சிறப்பித்துப் பாராட்டியுள்ளார். இதனைச் சைவசமயத்திலிருந்து பிரித்துப்பார்க்க முடியாது. அவ்வாறு நோக்குவது இதன் இயல்புக்கும், வரலாற்றிற்கும் முற்றிலும் முரண்பட்டதாகும்.

மேலும் 'சித்தாந்தம்' என்பது 'முடிந்த முடிபு' எனப் பொதுவாகக் கொள்ளப்படினும், அக்கருத்து நன்கு பொருத்தமானதா என்பதும் உற்று நோக்கற்பாலது. ஏனெனில் ஒரு கருத்தினை முடிந்த முடிபெனக் கொள்ளும் போது, அதற்குப் பின் அதிலே வளர்ச்சி ஏற்படுவது அரிதாகும். 'சித்தாந்தம்' என்பதற்கு 'நன்கு நிறுவப்பட்டது' என்ற கருத்தும் உண்டு. கௌதம நியாயசூத்திரம் கூறுவது போல, ''பல கோணங்களிலிருந்தும் ஆராயப்பட்டுத் தர்க்கரீதியாக நிறுவப்படுவதே சித்தாந்தமாகும்''. எனவே, இக் கருத்திலே இப்பதம் எந்த அறிவியலுக்கும் பொருத்தமாகும்.

இம் மெய்யியலுக்குரிய மூல நூல்களாகத் தமிழிலுள்ள சைவத் திருமுறைகளும், மெய்கண்ட சாத்திரங்களும், வடமொழியிலுள்ள வேதங்களும், சிவாகமங்களிலுள்ள ஞானபாதம் பகுதிகளும், சத்யோஜோதி முதலியோர் எழுதியுள்ள அஷ்டப் பிரகரணங்களும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை. இவற்றைவிட இன்றுவரை மேற்குறிப்பிட்ட நூல்கள் பலவற்றிற்கு எழுதப்பட்டுள்ள உரைகளும், விளக்கங்களும் உள்ளன. இம் மெய்யியல் தமிழகத்திலன்றி, ஈழத்திருநாட்டிலும், குறிப்பாக யாழ்ப்பாணத்திலும் நீண்டகாலமாக நிலவிவந்துள்ளது. யாழ்ப்பாணத் தமிழ் அரச காலம் தொட்டு இங்கு ஒரு சிறப்பான சைவசித்தாந்த மரபு நிலவி வந்துள்ளது. இவ் அரசின் ஆதரவில் எழுதப்பட்ட பரராஜசேகரம் போன்ற வைத்திய நூல்களிற் கூட சைவசித்தாந்தத்தின் தாக்கத்தைக் காணலாம். மேலும் திருநெல்வேலி ஞானப்பிரகாசசுவாமிகள் காலம் தொடக்கம் (கி. பி. 16 - 17ம் நூ.) யாழ்ப்பாணத்துச் சைவத் தமிழறிஞர்களில் ஒரு சாரார் சைவசித்தாந்த மூலநூல்கள் சிலவற்றிற்கு உரைகள் அல்லது விளக்கங்கள்

மட்டுமன்றி, இவ் அறிவியல் பற்றித் தனி நூல்களிலும் எழுதியுள்ள னர். யாழ்ப்பாணத்துச் சைவமும், தமிழும் தூய்மையானவை என்ற கருத்துத் தமிழகத்திலும் நிலவி வந்துள்ளது. யாழ். பல்கலைக்கழ கத்திலே சைவசித்தாந்தம் பற்றி விரிவாக இந்துநாகரிகம், மெய்யி யல்துறைகளிலும், ஓரளவு தமிழ்துறையிலும் கற்பிக்கப்படுகிறது, ஆராயப்படுகிறது. இங்கு கற்பிக்கும் விரிவுரையாளர்களிற் சிலர் சைவசித்தாந்தம் பற்றிச் சில நூல்களும், கட்டுரைகளும் எழுதிவரு கின்றனர்.

மேற்குறிப்பிட்டோரின் வரிசையிலே இந்துநாகரிகத்துறை சிரேஷ்ட விரிவுரையாளரான திருமதி. கலைவாணி இராமநாதனும் ஒருவராவர். இவர் தமது இந்துநாகரிகச் சிறப்புக்கலைமாணிப் பட்டத்திற்கும், பட்டப்பின் படிப்புக்களுக்கும் (முதுகலைமாணி, கலாநிதிப்பட்டங்களுக்கும்), சைவசித்தாந்தம் பற்றி நன்கு கற்று, ஆராய்ச்சி செய்தும், பட்டதாரி மாணவர்களுக்குக் கற்பித்தும் வருகிறார். இவர் தற்பொழுது ''சைவசித்தாந்த மெய்ப்பொருளியல்'' எனும் நூலை எழுதி வெளியிட்டுள்ளார். இந்நூலிலே, சைவசித் தாந்தக்காட்சிக் கொள்கை, திருமந்திரத்தில் சைவசித்தாந்தம், அஷ்டப்பிரகரணமும் சைவசித்தாந்தமும், என்பவற்றை உள்ளடக் கிய ஐந்து ஆய்வுக்கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. இவை ஆசிரியரின் சைவசித்தாந்த மெய்யியலறிவையும், ஆய்வுத்திற னையும் எடுத்துக்காட்டுவன. இவர் தமது கருத்துக்களைப் பெரும்பாலும் மூலநூல்களைக் குறிப்பிட்டு எழுதியுள்ளார். அண்மைக்காலத்தில் இம்மெய்யியல் பற்றி வெளிவந்த நூல்களிலே குறிப்பிடத்தக்க ஒன்றாகவும் இது மிளிர்கின்றது.

இந்நூல் பண்டிதரும் பாமரரும் படித்துப் பயன்படக்கூடிய வகையிலே செம்மையான தமிழ் நடையில் எழுதப்பட்டுள்ளது. சைவசித்தாந்தம் பற்றி அறிய விரும்பும் அனைவரும், குறிப்பாக உயர்தரவகுப்புப் பாடசாலை மாணவர்களும், பல்கலைக்கழக மாணவர்களும் இதனைப் படித்து நன்கு பயன் அடையலாம். இவ்வகையிலும் ஆசிரியரின் முயற்சி நன்கு பாராட்டற்குரியது. இவர் மேலும் பல ஆய்வுகள் செய்து, சைவசித்தாந்தம் பற்றி பல நூல்களை எழுதி இம்மெய்யியற் சிந்தனைகளை மக்களிடையே பரப்புதற்கும், அவ் அறிவியலை விரிவாக்கி வளம்படுத்தற்கும், எல்லாம் வல்ல இறைவன் திருவருள் பாலிப்பாராக.

அன்புடன்,
வி. சிவசாமி.

திருநெல்வேலி,
10.12.1997.

# அணிந்துரை


**பேராசிரியர் கலாநிதி ப. கோபாலகிருஷ்ணன், Ph.D.**
**தலைவர், இந்துநாகரிகத்துறை,**
**யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்.**


சைவம் சிவம் சம்பந்தமானது. சிவத்தை திருமூலர் 'அன்பே சிவம்' என விதந்து போற்றியுள்ளார். சைவசித்தாந்தம் என்பதன் பொருள் 'சைவத்தின் முடிந்த முடிபு' என்று கூறலாம். பதி,பசு,பாசம் என்ற திரிபதார்த்த நிச்சயமே சைவசித்தாந்தம் எனில் மிகையில்லை. சைவசித்தாந்த ஆராய்ச்சி மிகவும் பரந்துபட்டது. அத்துடன் நுட்பமானதும் கூட. இத்துறையில் அண்மைக் காலத்தில் கீழைத் தேய மேலைத்தேய அறிஞர்கள் ஆர்வம் காட்டி வருவதை அவதானிக்க முடிகின்றது. எமது நாட்டில் பலரும் ஆர்வமுடன் இத்துறை பற்றிய நூல்களை அவ்வப்போது எழுதி வெளியிட்டு வருகின்றனர். இவ்வரிசையில் எமது பல்கலைக்கழகத்தில் இந்துநாகரிகத்துறையில் சிரேஷ்ட விரிவுரையாளராகக் கடமையாற்றும் திருமதி. கலைவாணி இராமநாதன் அவர்கள் எழுதியுள்ள இந்நூலும் இடம் பெறுகின்றது. 'சைவசித்தாந்த மெய்ப்பொருளியல்' என்ற இந்த நூலினை வெளியிட அவர் முன்வந்திருப்பதையிட்டு முதற் கண் எமது பாராட்டுதல்களைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

சைவசித்தாந்தம் சார்ந்த அடிப்படை அம்சங்களை விளக்கும் வகையில் திருமதி. கலைவாணி இராமநாதன் இந்நூலினை ஆக்கியுள்ளமை குறிப்பிடதக்கது. இவர் எமது துறையில் இந்து நாகரிகப் பாடத்திட்டத்தில் சைவசித்தாந்தம் பற்றிய விடயங்களை மாணவர்களுக்குக் கற்பிப்பதில் இருபது வருடங்களுக்கு மேலான அனுபவம் உடையவர். இத்துறை சார்ந்த ஆய்வுகளை அவ்வப்போது மேற்கொண்டு பல கட்டுரைகளையும் எழுதியுள்ளார். மேலும் இத்துறை சார்ந்த ஆய்வரங்குகளிலும் பங்குபற்றியுள்ளார். இவை யாவற்றுக்கும் மேலாக இவர் தமது கலாநிதி பட்ட ஆய்வினை சைவசித்தாந்தம் பற்றிய தலைப்பில் தேர்ந்து மதுரை காமராஜர் பல்கலைக்கழகத்தில் வடமொழிப் பேராசிரியராகிய டாக்டர் கோ. சுந்தரமூர்த்தி அவர்களது வழிகாட்டலில் மேற்கொண்டவிடத்தும் அவரது திடீர் மறைவினால் தமது ஆய்வினைச் சமர்ப்பிக்க முடியாது போயிற்று. எனினும் தற்பொழுது அவ்வாராய்ச்சியைத் தொடர்ந்து மேற்கொண்டு நிறைவு செய்யும் முயற்சியில் ஈடுபட்டுள்ளார்.

இந்நூல் ஐந்து தலைப்புக்களில் சைவசித்தாந்தம் பற்றிய விடயங்களைத் தொகுத்து தருகின்றது. பரந்துபட்ட விடயங்களை உள்ளடக்கிய சைவசித்தாந்தம் பற்றிய ஒரு பரிமாணத்தை அறிந்து கொள்வதற்கு திருமதி கலைவாணி இராநாதனின் இந்நூல் துணை புரிகின்றது. இந்நூலில் சைவசித்தாந்த முப்பொருள் பற்றிய விடயங்கள் பல்வேறு சான்றாதாரங்கள் மற்றும் விளக்கங்கள் மூலம் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. பாடசாலைகளில் உயர்வகுப்புக்களில் பயிலும் மாணவர்களும் பல்கலைக்கழகத்தில் பயிலும் மாணவர்களும் சைவசித்தாந்தம் பற்றிய விடயங்களை எளிதில் விளங்கும் வண்ணம் ஆசிரியர் விடயங்களைக் கூறுகின்றார்.

சமயம், தத்துவம் ஆகிய துறைகளில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டுள்ள இந்நூலாசிரியர் சைவசித்தாந்தம் பற்றிய ஆய்வினை மேலும் தொடர்ந்து மேற்கொள்ளக்கூடிய அனுபவமும் ஆற்றலும் உடையவர். திருமதி. கலைவாணி இராமநாதனின் இத்துறை சார்ந்த ஆராய்ச்சி மேலும் எதிர்காலத்தில் வளம் பெற வேண்டும் என வாழ்த்துவதில் மகிழ்ச்சியடைகின்றேன். எமது பிரதேச மக்கள் பெரிதும் விரும்பும் இத்துறை சார்ந்த விடயங்கள் மேலும் விளக்கம் பெறுவதற்கு திருமதி. இராமநாதன் அவர்களது இது போன்ற நூல்கள் பெரிதும் துணை புரியவல்லன என்பது வெறும் புகழ்ச்சியன்று. திருமதி. கலைவாணி இராமநாதன் அவர்களது இப்பணி தொடரவும் மேலும் சிறக்கவும் இறைவன் திருவருள் துணை நிற்பதாக. இந்நூலினை சைவ உலகம் வரவேற்கும் என்பதில் ஐயமில்லை.

திகதி: அன்புடன்

14.09.1997 பேராசிரியர். ப. கோபாலகிருஷ்ணன்.

# முன்னுரை

"இறைவனார் கமலபாதம் இன்று நான்
இயம்பும் ஆசை
நிறையினார் குணத்தோர்க் கெல்லாம்
நகையினை நிறுத்துமன்றே!! - சித்தியார்.

என்னும் அவையடக்கப் பாடலை முன்வைத்தே இந்நூலினை வெளியிட முன்வந்துள்ளேன். சைவசித்தாந்த அறிஞர்களையும் ஆர்வலர்களையும் மீண்டும் இந்நூலின் வாயிலாகச் சந்திப்பதில் பெருமகிழ்ச்சியடைகின்றேன். இந்நூலைப் பற்றி நான் சொல்வதை விட அறிஞர் பெருமக்களாகிய நீங்கள் சொல்லி நான் கேட்கவேண்டும். நிறைகள் இருந்தால் திருப்தியடைவேன். குறைகள் இருந்தால் மறைக்காமல், தயங்காமல் சுட்டிக்காட்டுங்கள். மனமுவந்து ஏற்றுப் பரிசீலிப்பேன்.

ஏறத்தாழ இருபது வருடங்கட்கு மேலாக சைவசித்தாந்தம் பற்றிய விடயங்களை ஆராய்ந்து ஆய்வு செய்து அவ்வப்போது சஞ்சிகைகளிலும் மலர்களிலும் வெளியிடப்பட்ட கட்டுரைகளையும், ஆய்வரங்குகளில் பங்கு பற்றி வாசித்தளித்த சில கட்டுரைகளின் தொகுப்பாகவும் இந்நூல் அமைந்திருக்கின்றது. 'முப்பொருள்' பற்றிய விடயங்களைத் தெளிவுபடுத்துவதே எல்லாக் கட்டுரைகளினதும் நோக்கமெனலாம். எனவே 'ஒரே விடயமானது' பல்வேறு தலைப்புக்களில் சைவசித்தாந்தம் கூறும் பல்வேறு வாழ்க்கை நியதிகளை அலசும் பொருட்டு விளக்கத்திற்கு எடுக்கப்பட்டிருக்கின்றது. ஆகையினால் பெருமளவில் சைவசித்தாந்த சாஸ்திரங்களையே ஆதாரமாகக் கொண்டு விடயங்களைக் கையாள விரும்பியதால் ஒரேவிதமான மேற்கோள்கள் சில இடங்களில் அடிக்கடி பயன்படுத்தப்பட்டுள்ளன. பெரியோர்கள் ''கூறியது கூறல்'' என்னும் குற்றத்தைப் பொறுத்துக் கொள்ளவேண்டுமெனக் கேட்டுக் கொள்கின்றேன்.

சைவசித்தாந்தம் தொடர்பாக அண்மைக்காலங்களில் பல நூல்கள் வெளிவந்துள்ளனவாயினும் பிறநூல்களில் காணப்படும் விளக்கங்களை மறுப்பதை விட சித்தாந்த மூலநூல்களும், சிவாகமங்களும் உண்மையில் எதனைக் கற்பிக்க முற்பட்டுள்ளன என்பத

னை அறிய முயல்வதே இக் கட்டுரைகளின் நோக்கமாகும். அத்துடன் முப்பொருள் மெய்யியலானது விஞ்ஞான அணுகுமுறைக் கும், ஆய்வுகளுக்கும் பொருந்துவதாகவே அமைந்துள்ளதென்பத னையும் சில இடங்களில் குறிப்பிட்டுக் காட்டியுள்ளேன். நூலின் இறுதியில் 'முடிவுரை' என ஒன்றினைக் கூற விரும்பவில்லை. அறி ஞர்கள் முடிபுக்கேசமர்ப்பிக்கிறேன். நீரைப் பிரித்துப் பாலினை அருந்தும் அன்னப்பட்சி போன்று இந்நூலிலும் காணும் நிறைவான கருத்துக்களை ஏற்று - ஒவ்வாதன இருந்தால் விலக்கலாம். இந்நூ லின் அட்டைப்படம் இதனையே உட்பொருளாகக் கொண்டது.

''இந்து நாகரிகத்தை'' ஒருபாடமாகப் பயிலும்புதுமுக உயர்தர வகுப்புமாணவர்கட்கும், பல்கலைக்கழக உள்வாரி, வெளிவாரிப் பட்டப்படிப்பு மணவர்கட்கும் பயன்படவேண்டும்என்ற நோக்க மும் இந்நூலுக்குண்டு. அதன் காரணமாக நூலில் பல விடயங்களை கூடியளவு கலைச் சொற்களைத் தவிர்த்து எளிமையாகவே எழுத முயன்றுள்ளேன். சைவசித்தாந்தத்தை ஒரு பாடமாகக் கற்று வரும் மாணவர்கட்கு இந்நூல் மிகவும் உபயோகப்படும் என நம்புகிறேன்.

அடுத்து'நன்றி மறப்பது நன்றன்று' என்னும் முதுமொழிக்க மைய இந்நூலுக்கு 'ஆசியுரை' வழங்கிய எங்கள் யாழ்பாணப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் பேராசிரியர்.கலாநிதி பொ. பாலசுந்தரம்பிள்ளை அவர்கட்கு முதற்கண்எனது மனம் நிறைந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன். எத்தனையோ சிரமங்கட்கு மத்தியில்எனது வேண்டுகோளை ஏற்று என்னை கௌரவித்தமைக்கு என்றும் கடமைப்பட்டுள்ளேன். எங்கள் இந்து நாகரிகத்துறைத் தலைவர், பேராசிரியர் கலாநிதி. ப. கோபாலகிருஷ்ணன் அவர்களுக் கும் எனது நன்றியைக் கூற வேண்டும். பேராசிரியர் அவர்கள் இந்நூலுக்கு அணிந்துரை வழங்கியது மட்டுமன்றி இந்நூற் பிரதியை ஆழமாக வாசித்து எழுத்துப்பிழைகளைச் சரிபார்த்தும் பெரிய மனதுடன் உதவினார்கள். அன்னாருக்கு என்றும் நன்றி கூறக் கடமைப்பட்டிருக்கின்றேன்.

பேராசிரியர். கலாநிதி. சி. பத்மநாதன் அவர்கள் எனது ஆசிரி யப் பெருந்தகைகளில் ஒருவர் என்பதுடன் நான்அவர்களிடமும் படித்த மாணவி என்பதிலும் பெருமைப்படுகிறேன். பேராசிரியர் அவர்களிடம் நூற்பிரதியைக்கொடுத்துக் கேட்டவுடன் முகமலர்ந்து தனது பல சிரமங்கட்கு மத்தியிலும் எனது நூலுக்கு ஓர் நூன்முகம் தந்துதவினார்கள். அவர்கட்கும் எனது மனப்பூர்வமான நன்றிகள் உரித்தாகட்டும். இந்நூலிற்கு இன்முகத்துடன் அறிமுகவுரை தந்துதவிய வடமொழித் துறைப் பேராசிரியர். வி. சிவசாமி அவர்கட்கும் நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன். எனது கணவர். டாக்டர். பொ. இராமநாதன் அவர்களையும்இந்த இடத்தில் நான் கட்டாயம் குறிப்பிட்டேயாகவேண்டும். இந்த நூலை எழுதுவதற்கு அவர் அளித்த பேரூக்கமும், ஆதரவும் எண்ணில டங்கா. தான் பலசிரமங்களை ஏற்றும் எனது நூலாக்கம் சிறப்பாக அமைய பலவழிகளில் ஒத்துழைத்த என் கணவருக்கு நன்றி கூறும் ஆற்றல் எனக்கில்லை. நூலினை அச்சேற்றும் பணிகட்கு உதவிய அச்சக உரிமையாளர் திரு. ந. குருபரன் அவர்கட்கும், அச்சக உதவி யாளர்கட்கும், நூலின் பக்க வடிவமைப்புக்களைச் சரிபார்த்துதவிய திரு. விஜய கிருபாகர் அவர்கட்கும் நன்றிகள் பல.

எல்லாம் வல்ல என் குருநாதன் திருமுருகனை வணங்கி இதனை நிறைவு செய்கிறேன்.

இந்து நாகரிகத்துறை, கலைவாணி. இராமநாதன்.
யாழ்ப்பாணப் பல்கலைக் கழகம்,
இலங்கை, 1997.

# சைவசித்தாந்தம்

## சுருக்கமான விளக்கம்:

இந்திய மெய்ப்பொருளியல் வரலாற்றிலே சைவசித்தாந்தம் சிறப்பானதோர் இடத்தினைப் பெற்றுள்ள போதிலும்; தமிழக மெய்யியல் துறையிலே தனக்கெனவோர் தனித்தன்மையில் தலையாயதொரு சிறப்பினைப் பெற்றுத் திகழ்கின்றது. அத்தகுதிப்பாட்டினை மெய்கண்ட சாத்திரங்களே பெற்றுத் தந்துள்ளன. அவை பதினான்கு ஆயினும் அவற்றிலே காணப்படும் கொள்கைகளில் வேறுபாடு காணப்படவில்லை. அடிப்படைக் கொள்கைகளை விளக்குவதில் அவை தம்முள் ஒன்றுக்கொன்று விரிந்தும் சுருங்கியும் அமைந்தனவே தவிரக் கருத்து நிலையிலே மாறுபாடுடையனவல்ல. மெய்ப்பொருள் துறையிலே காணப்பெறும் வளர்ச்சி விஞ்ஞானத்துறையில் காணப்படும் அறிவு மிகுதல் போன்றதன்று. மெய்ப்பொருளியல் வளர்ச்சி வேறு விதமானது. விஞ்ஞானத்தின் அறிவுக்கு வரையறை கொண்ட புதிய முறைகளைச் (Formula) சேர்த்தல் வேண்டும். தத்துவத்துறையிலோ அத்தகுவளர்ச்சிகள் இடம் பெறா. அதேசமயம் பழைய சிந்தனைகளில் காலத்திற்கேற்ப புதிய வளர்ச்சி, அணுகுமுறை என்பன காணப்படும். அவை புதிய சாயல்களில் வடிவம் பெறும். பழைய கொள்கைகளே புதியனவாக விளக்கம் பெறுகின்றன.[1]

இக்கருத்தின் உறுதிப்பாட்டினைப் பதினான்கு சித்தாந்த நூல்களும் மெய்ப்பிக்கும். சிவஞானபோதம் பன்னிரு சூத்திரங்களில் கூறிய கோட்பாடுகளையே பின் எழுந்த வழி நூல்களும், சார்பு நூல்களும் விரித்துரைக்கின்றன. அவற்றுக்கு முன்னெழுந்த திருவுந்தியார், திருக்களிற்றுப்படியாரும் சைவசித்தாந்தச் சிறப்பு நூல்களில் காலத்தால் முற்பட்ட நூல்களாகும். இவை கி.பி 12 ம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. சிவஞானபோதமும் ஏனையவையும் கி.பி. 13 ம் நூற்றாண்டை ஒட்டியவையாகும். மெய்கண்டாரின் மாணவரில் ஒருவராகிய அருணந்தி சிவாச்சாரியார் சிவ ஞான சித்தியார், இருபா இருபஃது என்ற நூல்களையும், உமாப

திசிவாச்சாரியார் சிவப்பிரகாசம் முதலிய எட்டு நூல்களையும் இயற்றினார்கள். உமாபதிசிவாச்சாரியாரின் எட்டு நூல்களும் சித்தாந்த அட்டகம் எனப்படும். மனவாசகம் கடந்தாரால் உண்மை விளக்கம் எழுதப்பட்டது. இப்பதினான்கு சாத்திரங்களும் சைவசித்தாந்த முதல், வழி, சார்பு, நூல்களாயின. இவ்வாறாகச் சிவாகமங்களினாலும் பன்னிரு திருமுறை நூல்களினாலும் வளர்க்கப்பட்டு வந்த சைவசித்தாந்த மெய்யியல் கி.பி 13 ம் நூற்றாண்டிலே திட்டமான முறைப்படுத்தப்பட்ட (System) உருவமைப்பினைப் பெற்றது.

சைவசித்தாந்தத்தின் முதல் நூல்கள் வேதாகமங்களாகும்.

''வேதமோடாககம மெய்யாம் இறைவன் நூல்,
ஓதும் பொதுவும் சிறப்பும்''

என்ற திருமந்திரக் கூற்றுப்படி வேதம் பொது ஆகமம் சிறப்பு எனச் சைவசித்தாந்தம் ஏற்றுக் கொள்ளும். 13ம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் வாழ்ந்த மெய்கண்டாரே சைவசித்தாந்தத்திற்குச் சிறப்பையும் எழுச்சியையும் அளித்தவராவார். சித்தாந்த சமயம் பற்றியும் சைவசித்தாந்தக் கொள்கை பற்றியும் தெளிவான அமைப் பினைச் சிவஞானபோதமே விளக்கும். சைவசித்தாந்தம் வேதாகம சாரம் என்பதனை ''வேதம் சித்தாந்த சாரவாத்'' என சிவாகமமும் கூறும்.

''வேதம் பசு அதன் பால் ஆகமம் - நால்வர்
ஓதும் தமிழ் அதன் உள்ளூறு நெய்
போதமிகு நெய்யின் உறுசுவையாம் நீள் வெண்ணை
மெய்கண்டான் செய்த தமிழ் நூலின் திறம்''

என்னும் தனிப்பாடலாலும் அதனை உணரலாம்.

சைவசித்தாந்தம் மூன்று உண்மைகளை நித்தியப் பொருட்கள் எனக் கூறும். அவை பதி,பசு,பாசம் எனப்படும். 'பதியினைப்போல் பசு, பாசம் அனாதி' எனத் திருமந்திரம் இதனை உறுதிப்படுத்தியுள் ளது. சைவம் என்பது சிவ வழிபாடு.



''சைவம் சிவனுடன் சம்பந்தமாகுதல்
சைவம் தனையறிந்து சிவம் சாருதல்''

எனத் திருமந்திரம் விளக்கியது.[2] சித்தாந்தம் சமயக் கொள்கைகள் பலவற்றையும் ஆராய்ந்து முடிந்த முடிபு எனப்படுவது. சித்தத்தின் முடிபு சித்தாந்தம், சைவசித்தம் தந்த அனுபவ அடிப்படையில் அனுபூதியிலே வெளிப்படுத்தும் முடிந்தநிலைக் கொள்கை சைவசித்தாந்தம் ஆயிற்று.[3] சித்தாந்தச் செந்நெறியின் முதலாசிரியன் ஆலமர் செல்வனான ஞான தட்சணாமூர்த்தியாவார். மெய்கண்டார் இச் சைவ சித்தாந்தக் கொள்கையினை முறை செய்து அமைத்து நிலை பெறச் செய்தார். பிறவிகள் எண்ணிறந்தன. உயிர்த்தொகுதி களும் எண்ணிறந்தன. எல்லாம் ஐயறிவுடையன. மக்களே ஆறறிவு டையவர்.[4] காமம், பசி,உறக்கம் எல்லா உயிர்கட்கும் பொதுவா னவை. பகுத்தறியும் அறிவே மனிதனைப் பிறவிலங்குகளிலிருந்து வேறுபடுத்துகின்றது. அந்த உணர்வரிய அறிவு 'ஞானம்' எனச் சான்றோர் கூறுவர். அறிவு வேறு - ஞானம் வேறு என்பது இந்திய மெய்யியலாளர் கருத்தாகும்.

சமயம், மதம் என்ற சொற்கள் வழக்கில் ஆதியில் இருந்ததாகக் குறிப்பில்லை. சமயம் என்பதனை மணிமேகலையும், மதம் என் பதனை மாணிக்கவாசகரும் பிற்காலம் எடுத்தாண்டுள்ளனர்.[5] இந்த இரு சொற்களையும் திருமுறையாசிரியர்களும், மெய்கண்டசாத்திர ஆசிரியர்களும் திருநெறி, நன்னெறி, அருள்நெறி, தவநெறி, முத்திநெறி, சிவநெறி, சைவநெறி என்றே மிகுதியும் வழங்கினர்.[6] கடவுள் ஒழுக்கம் அறம் சார்ந்த கருத்துக்களே இந்நெறியில் பெரி தும் சார்ந்திருந்தன. மெய்கண்டார் தமது நூலில் நெறி என்ற சொல் லையும், அருணந்தியார் சமயம், சிவம் என்ற சொல்லையும் பெரிதும் பயன்படுத்தியிருப்பதனால் சிவநெறி சைவமாயிற்று என் னும் கருத்து வளர்ச்சியை அவதானிக்கலாம். இவ்வாறான சிவ நெறியைப் பாராட்டியவர்களில் ஸ்கொமரஸ் (Schomerus) கால்டுவெல்,போப் முதலிய மேனாட்டவர்கள் தலையானவர்கள். தமிழிலே சிவஞானமுனிவர் முதல் சித்தியாருக்கு அறுவர் உரை கண்டவரில் ஞானப்பிரகாசர், ஆறுமுகநாவலர், நீலகண்டசிவாச்சார்

யார் போன்றோரும், மறைமலையடிகள், ஜே.எம்.நல்லாசாமிப் பிள்ளை, வச்சிரவேல் முதலியார், அருணைவடிவேல் முதலியார் போன்றோருமாக இன்னும் பலர் சித்தாந்தத்தின் சிறப்பைப் பற்றி எடுத்துக் கூறியவைகள் ஏராளம்.

சித்தாந்தச் செந்நெறியின் முடிந்த முடிபினைக் காட்டுவது போல அமைந்திருப்பது 'உள்ளது போகாது இல்லது வாராது' என்னும் சிவஞானபோதச் சூத்திர வெண்பாவாகும். அதன்படியே உள்ள பொருட்கள் மூன்றாகிய இறை, உயிர், தளை என்பன பதி, பசு, பாசம் எனச் சித்தாந்தம் வகுத்துக்கூறும். இம்மூன்றும் படைக் கப்பட்டனவும் அல்ல, அழிவுனவுமில்லை - என்றுமுள்ளவை நித்தியமானவை. ஆனால் பதிப்பொருள் ஒன்றே சுதந்திரமானது - ஏனைய இரண்டும் சுதந்திரமற்றவை. பதிப்பொருள் அறிவு சொரூபமானது. பசு அறிவை இயல்பாக உடையது - ஆயினும் அறி விக்க அறிவது; பாசம் அறிவித்தாலும் அறியாதது - காரணம் பாச ஞானம் - அஞ்ஞானமாகும். பகுத்து அறியும் தன்மை இல்லாததால் மெய்ப்பொருளை விளக்கினாலும் விளங்கமாட்டாதது; ஆனால் உயிர்கட்கு மாயையின் வழி அஞ்ஞானத்தை அறிவிப்பதால் ஆணவ இருளில் இருக்கும் ஆன்மாக்கட்கு ஏதோ ஒரு வகையில் கைவிளக்குப் போன்று அதன் அறிவினை நன்கு விளக்க (பாத்திரம் தேய்த்து விளக்குவது போன்று) உதவுவது. ஆகையினால் இவை முறையே சித், சத், அசத் என சித்தாந்தம் பேசும்.

## பதிப்பொருள்

பதி என்பது கடவுளைக் குறிக்கும். சித்தாந்தக் கடவுள் 'சிவம்' எனச் சிறப்பிக்கப்படும். சிவம் என்பது அறிவே வடிவானது - ஞான மயமானது. 'அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவே' என்றார். இதனை மணிவாசகர்[7]. கடவுள் என்பதில் 'கட' என்றால் உலகினையும் உயிர்களையும் கடந்தவன்; 'உள்'-என்றால் உலகி னுள்ளும் உயிர்கட்குள்ளும் உறைபவன், எனவே கடந்தும் கரந்தும் உள்ளவன் கடவுளாகின்றான். ஆன்மாக்களை ஆண்டு கொள்பவன் ஆண்டவன்; சகலவிதமான 'இறைமை' என்னும் சர்வ அதிகாரமும்



உடையவன் இறைவன்; ஈசன் அவன் எவ்வுயிர்க்கும் இயல்பா னவன் - 'அன்பே சிவமாய் அமர்ந்திருப்பவன்' 'கலந்த அன்பாகிக் கசிந்துள்ளுருகு' நிற்பவன், 'காத்தும் படைத்தும் கரந்தும் விளையா டும் ஈசன், இத்தகைய மகிமைபொருந்திய பரம் பொருள் சித்தாந்தத் திலே யாவற்றையும் கடந்தவனாகி - அவற்றுள்ளிருந்து சக்தியால் அவற்றினையும் இயக்குபவனாகியுமுள்ள சிவம் எந்தப் பொருளின் எல்லையிலும் - எந்த நாட்டின் சகலலோகங்களின் எல்லையிலும் அடங்குபவரல்ல. அதனால் தென்னாடுடைய சிவன் - எந்நாட்ட வர்க்கும் இறைவனான பெருமையுடையவர்.

சர்வான்மாக்களின் தலைவனாகவும் விளங்கும் சிவத்தினது இயல்பினைச் சித்தாந்தம் 'பசுபதி' எனக்குறிப்பிடும். சிந்துவெளி சமயத்தில் இதனைக் குறிக்கும் முத்திரையினை 'மூந்து சிவன்' என்றார் மாசல் (Marshal) 'அறிவு அறிவென்ற பதியும் அனாதி' என்றது திருமந்திரம். 'அன்றதோர் தொல்பதி' என்றார் கச்சியப்பர், எனவே இத்தகைய பதி சித்தாந்தப் பரம் பொருளாக விளங்கு மாற்றினை 'பதிபரமேயதுதான்' எனச் சித்தாந்த நூலும் சிறப்பித் தது.[8] அதனை 'அந்தம் ஆதி என்மனார்புலவர்' எனவும்[9] 'ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெரும் ஜோதி' எனவும் உலகிற்குக் கருத்தாவான இறைவனை சித்தாந்தம் விளக்கியுள்ளது.

சைவசித்தாந்தம் கடவுட்கு இரு நிலைகளைக் கற்பித்துள் ளது.[10] ஒன்று தடத்தநிலை; மற்றையது சொரூபநிலை. சொரூப நிலை என்றுமுள்ள இயல்பான கட்டுப்படாத - சுதந்திரநிலை எனப்படும். இந்நிலையில் பரம் பொருள் சிவப் பிரமமாக விளங் கும். அதன் மறுபெயர் அறநிலைப்பாடு அல்லது தருமஸ்தான மாகும். அதனை விளக்குவதே 'சைவநீதி' எனப்பட்டது...'' ஆன்ற மெய் அறம்வளர்க்கும்....மூன்று கண் முனித்தலைவனை'' எனத் திருக்கலம்பகமும் போற்றியது. ''ஆலின் கீழ் அன்று அறமுரைத் தான்' என்பது சங்கப்பாடலாகும். மெய்கண்ட சாத்திரங்களில் சிவத்தின் சொரூபநிலையானது 'நிலவும் அருவுருவின்றிக்....... செல்வரிதாய்ச் செல்கதியாய்த் திகழ்வது தற்சிவம்' என உரைக்கப் பட்டது.[11] 'தற்சிவம்' எனக் கூறப்படும் சிவ சொரூப நிலையானது

சித்தாந்தத்தில் ஒன்றுமேயில்லாத சூனியமான நிலைப்பாடல்ல வாம். சொரூப நிலை என்னும் நிலைப்பாட்டிலே இறைவனானவன் தாமஸ்வரூபன் - சர்வக்ஞன் என்னும் உயர் இலட்சணங்களினால் குணங்களையும் கடந்த நிர்குணனாக இருக்கும் தற்சிவம் எனப்படு தலினால் சொரூப நிலையானது இறைவனின் 'சச்சிதானந்தரூபம்' என்பது சைவசித்தாந்த நிலைப்பாடாகும்.[12]

'தடத்தநிலை' என்பதே சைவசித்தாந்தத்தின் கடவுட் கொள் கையினை நிறைவு செய்யும் வாழ்வியற் பகுதியை உள்ளடக்கி யதாகும். சித்தாந்த நூல்களில் 'பதி இலக்கணம்' என்ற பிரிவின் கீழ் இவற்றின் உபயோகமுறைகள் வெளியிடப்பட்டுள்ளன. இப்பகுதி உருவ வழிபாட்டின் ஆதாரமாக விளங்கும் சகுணநிலையாகிய ஈஸ்வரநிலையாகும். தடத்தநிலையினை விபரிக்குமிடத்து சிவப்பிர காசத்திலே 'நாடரியகருணை திருவுருவமாகி....நினைந்த உருநிறுத் திடுவன் நிமலன்' என இறைவன் உயிர்கள்மேல் கொண்ட எல்லை யற்ற கருணையினாலே உருவத்திருமேனிகளை மேற்கொள்ளு வதுடன் - அவ்வாறே நினைத்தபோது நினைத்த வடிவத்தை மேற் கொள்ளும் வல்லமையுடையவன் எனவும் உருவ நிலை கொள்வ தன் காரணம் கூறப்பட்டது.

தடத்தநிலையில் மூன்று வகையான உருவ நிலைப் பாகுபாடு களைச் சித்தாந்தத்தில் காணலாம். இவற்றின் விரிவினைத் திருவ ருட்பயன் மிக எளிமையாக விளக்கிக் காட்டியுள்ளது.[13] அருவம், உருவம், அருவுருவம் என்ற வகையிலே சிவனுக்கு ஒன்பது திருமேனிகள் கற்பிக்கப்பட்டுள்ளன. அருவத்திருமேனிகளான சிவம், சக்தி, நாதம், விந்து என்பனவும் உருவத்திருமேனிகளான பிரம்மா, விஷ்ணு, உருத்திரன், மகேஸ்வரன் என்பனவும் அருவுரு வத் திருமேனியான சதாசிவத் திருமேனியும் சேர்த்து இவை ஒன்பதும் நவபேதங்கள் எனப்படும். ஐந்தொழிலுக்காதாரமான திருமேனிகள் உருவத்திருமேனியும் சதாசிவத்திருமேனியுமாக ஐந்து வகைப்படும். இப்படியான சைவசித்தாந்தக் கடவுளானவருக்கு



அருவம், உருவம், அருவுருவத்திருமேனி என்பனவற்றினை விட, அறிவுருவம், அன்புருவம், ஆனந்தவுருவம் என வேறு தனி மூன்று வடிவங்களை சித்தாந்தம் என்று முள்ள இறைவனின் சொரூபலட்ச ணத்தின் அதி விசேட சிறப்பம்சங்களாக விபரித்துள்ளது.[14]

அதனால் 'பதி' எனப்படும் பொதுப் பெயரானது சித்தாந் தத்தில் தடத்த நிலைலுள்ள சிவனுக்கே கூறப்பட்டுள்ளது. பதி என் பவர் உலகின் தோற்ற ஒடுங்கட்குக் கருத்தாவாகப் பஞ்சகிருத்தியங் களைச் செய்பவராகவும் அவ்வாறு தொழிலாற்றுமிடத்து தனது அருட்சக்தியுடன் கூடிப் பிரிவின்றிக் கலந்து நிற்பவர் அதனால் அர்த்த நாரீஸ்வரராக சக்தி சிவனாக - சிவலிங்கமாக - சதாசிவமாக வும் சிறப்பிக்கப்படுபவர். 'தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத் தரும் சக்தி - பின்னமிலான்' என்று திருவருட்பயன் இதனை விளக்கும். 'அருளது சக்தியாகும் அரன் தனக்கு' என்பது சித்தியார் வாக்கு. இவ்வாறு எண்குணத்தவரான சிவம் அதேசமயம் நிர்குணராக ஆனால் சச்சிதானந்த சொரூப சிவமாகி விளங்கும் இயல்பினர் என்பது சித்தாந்தக் கடவுட் கொள்கைத்திட்டமாக அமைந்துள்ளது.

## உயிர் அல்லது பசு

சித்தாந்தக் கோட்பாட்டிலே இரண்டாவதாக வைத்தெண்ணப் படுவது உயிர் அல்லது ஆன்மாவாகும். சித்தாந்தம் இதற்கிட்ட சாஸ்திரப்பெயர் 'பசு' என்பதாகும். 'கட்டப்பட்டது' என்பது இதன் பொருள். ஆசைகளால், அறியாமையால், மலங்களால், பற்றுக்க ளால் பாசங்களினால் கட்டப்பட்டிருப்பதனால் உயிர்களனைத்தும் பசு எனப்பட்டன. எனவே இவற்றிலிருந்து விடுதலை பெற்ற உயிரினை ஆன்மா எனக் கொள்ளலாம். ஆன்மா அழிவற்ற- நித்தியமான - அனாதியான உள்பொருளாகும். அறிவை இயல்பாக வுடைய உயர்நிலையுடைய ஆன்மா மும்மலங்களினாலும் சிறைப் படுத்தப்படும் நிலையில் இருவினைகளின் வசப்பட்டுப் பிறந்து இறக்கும் நிலையினை அடையும்போது சித்தாந்தத்தில் 'பசு' என் னும் சிறப்புப் பெயரால் விளக்கம் பெற்றுள்ளது.

இக்கொள்கையானது ஆன்மாக்கள் உலகியல் நிலைப்பாட்டில் கொண்டிருக்கும் பல்வேறு கருத்து வேறுபாடுகட்கும் விளக்கம ளிப்பதாகவுள்ளது. 'உயிர்கள் அநாதியானவை - அவை இறைவ னால் படைக்கப்படுவதில்லை' என்ற சித்தாந்தக் கருத்தானது உயிர்கள் அனுபவிக்கும் இன்பதுன்பங்கட்கும், உயர்வு தாழ்வுகட் கும், குறைநிறைகட்கும் கடவுள் பொறுப்பானவரல்ல என்ற தெளிவினை உண்டாக்குகின்றது அத்துடன் பேற்றலிசம் (Fatalism) என்ற கொள்கையை அறவே நிராகரிக்கின்றது. நியதி தத்துவம்வேறு தலைவிதிக் கொள்கைவேறு, முயற்சியை, உழைப்பினை நிராக ரிப்பது சித்தாந்தத்தின் நோக்கமன்று. கன்ம நியதியிலேயுள்ள ஆகா மிய வினை மனித முயற்சியின் வெற்றியை நிர்ணயம் செய்வதா கவே அமைந்துள்ளது. இக்கொள்கையானது பொதுவுடமைக் கொள்கைக்கும் சித்தாந்தத்திற்குமிடையே உள்ள இடைவெளி யினைக் குறைக்கின்றதெனலாம். உதரணமாக ஒரு நிறுவனத்தின் தலைவரானவர் தனக்குக் கீழே வேலைசெய்யும் ஊழியர்களது திறமைகளைக், குறைகளைத் தனது உதவியாளர் தயாரித்துத் தரும் பட்டியலைக் கொண்டு தீர்மானித்து பதவி உயர்வு வழங்குவது போல; இறைவனும் உயிர்கள் தாம் தாம் செய்து கொண்ட வினைகளின் பதிவேடுகளின்படி 'கன்மம்' என்ற வினைத்தொகுதி காட்டும் புள்ளிவிபரங்களின் சிபார்சிற்கேற்ப உயிர்கட்கு அவற்றின் உயர்வு தாழ்வு நிலைகளை வழங்குகிறாரேன்றி இறைவன் தன்னிச்சையாக ஒருவனின் வாழ்க்கையினைத் தீர்மானிப்பதில்லை என்ற உண்மை புலனாகும். உயிர்களாற்றிய கருமவினைகளின்படி தருமம் அதற்குரிய நிலைகளைத் தீர்மானிக்கின்றது.

இவ்வாறு ஆணவக் காரணமாக உயிர்களாற்றுகின்ற செயல்கள் நல்வினை, தீவினைகளாக வகுக்கப்பட்டு, அவை சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியமாகி உயிர்கள் பிறந்திறக்கும் போது அனுபவத்திற்கு வருகின்றன. இதனை சித்தாந்த சாஸ்திரமானது

"எண்ணிறந்தாய் நித்தமாய், இருள்மலத்திலழுந்தி, இருவினை யின் தன்மைகட்கீடான யாக்கை, அண்ணல் அருளால் நண்ணி அவை அவராய் அதனால்....புண்ணியபாவம் புரிந்து போக்குவரவுடைத்தாய்...., மலபாகம் பொருந்தியக்கால் அருளால் உள் நிலவும் ஒளியதனால் இருளகற்றி பாதமுற்றி டும் பசுவர்க்கம்"15

என ஆன்மாக்களின் அவஸ்தைகளைச் சுட்டிக்காட்டியது. உயிர்கள் வினையின் இயல்பு தெரியாது தத்தம் இச்சைப்படி செயற்படுதற்கு மும்மலங்களே காரணமாகும் என்பதனை 'நெல்லிற்குமியும் நிகழ் செம்பிற்களிம்பும் சொல்லிற் புதிதன்று தொன்மையே - வல்லி மலகன்மமன்றுளவாம்' என்றவாறு[16] மலங்களாகிய அழுக்கு அநாதியாகவே ஆன்மாக்களைப் பிடித்திருப்பதே ஆன்மாக்களின் கேவல, சகல, சுத்த நிலைகட்கும் நிலைக்களனாக அமைகின்ற தென்பதனை சித்தாந்த சாஸ்திரங்கள் எடுத்துரைத்துள்ளன.

ஆதலால் அறிவை இயல்பாகவுடைய ஆன்மாக்கள் ஆணவம லத்தால் கட்டுப்பட்டு அறிவினையிழந்து அணுத்தன்மையடை வதனால் 'பசு' வர்க்கமாகி வினைபோகங்கட்காட்பட்டுப் பிறவி எடுத்தலைகின்றன எனப்பட்டது. ஆணவமலம் வலியற்றுப்போகும் போது அஞ்ஞானமும் அகன்று உயிர் தன் என்றுமுள்ள இயல்பான நிலையில் இறைவன் திருவடிகளை அணையும். ஆன்மா விடுதலை பெற்ற நிலையிலும் ஆணவம் ஆன்மாவை விட்டகலாது. ஆனால் அது ஆன்ம அறிவிற்கு மெய்ஞானத்திற்குக் கட்டுப்பட்டு வறுத்த வித்துப்போன்று - முளைவிடும் தன்மையற்று வலுவிழந்து விடு மென்பது சித்தாந்திகள் கருத்தாகும். உயிரின் இலக்கணத்தை நிர்ணயிப்பதில் பல மாறுபாடான சிந்தனைகள் உண்டு. சித்தாந்தம் ஆன்மாக்களின் அறிவானது விளக்கமுறாது அஞ்ஞான, ஆணவ அழுக்கினால் கட்டுண்டிருப்பதனால் அதனை உயிர் எனக் கருதும். சிலர் உயிர் தனிப்பொருளல்ல உடலே உயிர் என்பர். சிலர் மனம் தான் உயிர் என்பர். சிலர் உயிர் படைக்கப்பட்டதென்பர். சிவஞான போதம் இரண்டு வரியில் இவற்றினை பின்வருமாறு மறுக்கின்றது. 'இலதென்றலின் உளன்' என்பதன் வாயிலாக "இல்லை" என்று முடிவு செய்யும் அறிவு எதுவோ அதுவே ஆன்மா' என முடிபு செய்தது.

ஆணவத் தொடர்பு காரணமாக உயிர் உலகப் பாசங்களைச் சாரும்போது அசத்தாகவும் விடுபேறடைந்து இறைவனைச் சாரும் நிலையில் சத்தாகவுமிருக்கும்; அதனால் 'சதசத்' எனப்பட்டது. இத்தகைய உயிரின் இயல்பினை 'சத்தசத்தைச்சாரா அசத்தறிவாம் அங்ஙணிவை - உற்ற சதசத்தாம் உயிர்' எனச் சித்தாந்தம் கணிப்பிட்டுள்ளது. அவ்வாறே பாச நீக்கம் பெற்ற உயிர்கள் பக்தியிலோ, யோகத்திலோ, ஞானத்திலோ சென்று நிலை பெற்று இறைவனை வழிபட்டுவந்தால் இறைவன் திருவருட்சக்தி மூலம் உரியநேரத்தில் மலநீக்கம் செய்து சத்திநிபாதம் அருளிக் குருவடிவாகி வந்து அமரத்துவம் (விடுதலை) அடையும் வண்ணம் ஆட்கொள்வர். ஆதலால் தட்சணாமூர்த்தி எனப்படும் குருதத்துவம் சித்தாந்தத்திலே அதி உயர்வான இடத்தினைப் பெற்றுள்ளது.

## பாசமும் - மாயைக் கோட்பாடும்

''பதியினைப் போல் பசுவினைப் போல் பாசமும் அனாதி'' என்பது சித்தாந்த நிலைப்பாடாகும். 'அறிவு அறிவென்ற அறிவுமனாதி...அறிவினைக் கட்டிய பாசமும் அனாதி' எனத் திருமந்திரம் சித்தாந்தக்கோட்பாட்டினை ஆரம்பத்திலேயே வகுத்துக்காட்டியது. பாசம் ஆணவம், கன்மம், மாயை என மூன்று வகைப்படும்; உயிர்கள் பூமியில் பிறப்பெடுக்கும் போதே அவர்கள் வாழ்வதற்குரிய உலகமும் அதன் மீது உயிர்கட்குரிய பாசமும் இயல்பாகவே தோன்றுவதனை யாரும் அவதானிக்கலாம். இத்தகைய பாசம் நிலையற்றது என அறிந்த பின்னரும் மக்கள் அவற்றிலிருந்து விடுபட விரும்புவதில்லை. 'நில்லாதனவற்றை நிலையின என்றுணரும் புல்லறிவு' என இதனைத் திருக்குறள் இகழ்ந்துள்ளது. இத்தகைய மாந்தர் இயல்பிற்குரிய காரணத்தை சித்தாந்தம் ஆராய்ந்து கண்ட விளக்கமே பாசக் கோட்பாடாகும்.

ஆதலால் மனிதர்களின் சுகதுக்கங்கள் தோன்றுவதற்கு முதற் காரணமாயமைவது மாயாமலமாகும். அச் சுகதுக்கங்களை அனுபவித்தற்கு அனுகூலமாயிருப்பது கன்மமலம் எனப்படும். மூவகை வினைத்தொகுதியில் சஞ்சிதத்தின் ஒரு பகுதி பிரார்த்துவமாகி



ஊழ்வினையாக உயிர்களின் பிறப்பிற்குக் காரணமாகின்றது' பிறவி எடுத்தபின் செய்யும் புண்ணிய பாவங்கள் ஆகாமியமாகி அடுத்த பிறவிக்கும் வித்திடுவதனால் - செயலில் பற்றற்று கருமமாற்றுபவர்கள் வினைப்பயனைவெல்ல முடியும் எனச் சித்தாந்தம் அறிதியிட்டுரைக்கின்றது. பற்றினை விடுத்துப் பலனைத்துறந்து எல்லாச் செயல்களையும் இறைவனுக்கு அர்ப்பணித்து வாழும்போது எல்லாக் கருமங்களும் இறை வழிபாடாக மாறுகின்றன. இதனையே 'சார்புணர்ந்து சார்புகெட ஒழுங்கின் மற்றழித்துக் - சார் தரா சார் தரும் நோய்' எனக் குறள் கூறியது. அயன்ஸ்ரீனுடைய சார்புக் கொள்கையும் இதனை விளக்கியுள்ளதெனலாம் (Theory of Relativity) 'என் செயலாவது யாதொன்றுமில்லை - இனித் தெய்வமே எல்லாம் நின் செயலென்றுணரப் பெற்றேன்' என்ற பட்டினத்தார் பாடலும் ஆணவம் வலிகுன்றியதும் எழும் அருள் வெளிப்பாட்டினையும் ஆன்ம பரிபக்குவத்தையும் இங்ஙனம் எடுத்துக்காட்டுகின்றன.

இவ்வாறு மலபந்தம் காரணமாக உடல் எடுத்துப் பசுக்களாக மாறும் உயிர்கள் வினைபோகங்களை அனுபவிப்பதற்காக உலகமானது இறைவனது திருவருட் சக்தியினால் மூலப்பிரகிருதியாகிய மாயையிலிருந்து தோற்றுவிக்கப்படுகின்றது. மா - என்பது வருதல், யா-என்றால் ஒடுங்குதல் எனப் பொருள் தருதலால் மாயை என்பது உலகம் தோன்றுதற்கும் ஒடுங்குதற்கும் இடமாயுள்ள மூலப் பொருளாகும். மாயை மூன்றுவகைப்படும். அவை சுத்தமாயை, அசுத்த மாயை, பிரகிருதிமாயை என்பனவாகும். இவற்றிலே சுத்தமாயை சிவதத்துவங்கள் ஐந்திற்கும், அசுத்தமாயை வித்தியா தத்துவங்கள் ஏழிற்கும், பிரகிருதி மாயை ஆன்ம தத்துவங்கள் இருபத்தி நாநிற்கும் இடமாயிருக்கும். ஆகவே மொத்தமாக முப்பத்தியாறு தத்துவங்களை சைவசித்தாந்தம் ஏற்றுக் கொண்டுள்ளது. சுத்த தத்துவங்களாவன சிவம், சக்தி, சதாசிவம், ஈஸ்வரம், சுத்தவித்தை எனப்படும். காலம், நியதி, கலை, வித்தை, ராகம், புருடன், மாயை ஆகிய ஏழும் வித்யா தத்துவங்களாகும். ஆன்ம தத்துவங்களாவன ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, தன்மாத்திரைகள் ஐந்து, பூதங்கள் ஐந்து, அந்தக்கரணங்கள் நான்குமாக மொத்தம் இருபத்திநான்கு எனப்படும்.[17]

வித்தியா தத்துவங்களில் ஒன்றாகிய மாயையிடமிருந்து கலாதத்துவமும் அதனிடத்திருந்து மிகுதி இருபத்தி நான்கு தத்துவங்களும் இன்று நாம் காணும் உலகம் உற்பத்தியாதற்கு மூலப்பொருளாயமைகின்றன. இவ்வுலகமானது சக்தியைத்துணைக் காரணமாகக் கொண்டு இறைவனை நிமித்த காரணனாகவும், மாயையை முதற் காரணமாகவும் கொண்டு கருத்தா ஒருவனால் தோற்றி ஒடுக்கப்படும். இவ்வாறு மண். திரிகை, குயவன் என்பனவற்றை உதாரணம் காட்டி இத்தோற்ற முறைமை விளக்கப்பட்டுள்ளது. ஆகவே மாயையாகிய முதற் காரணத்திலிருந்து உலகமாகிய காரியம் உற்பத்தியாக்கப்படுவதனால் சைவசித்தாந்தம் இதனைச் 'சத்காரிய வாதக் கோட்பாட்டின்படி உருவாக்கியுள்ளது. 'உள்ளது தான் வரும் இல்லாதது வராது' என்னும் அடிப்படை நியதியின்படி மாயையாகிய முதற் காரணத்திலிருந்து உலகமாகிய காரியம் படைக்கப்படுமிடத்து - உலகமானது புதிதாகப் படைக்கப்படுவதல்ல மாயையில் சூக்குமமாகவுள்ள உலகினைத் தூலவடிவிற்குக் கொண்டு வரும் நிகழ்வே 'சத்காரியவாதம்' என்னும் உண்மை மூலம் தெளிவாக்கப்பட்டது. இங்ஙனம் உற்பத்தியாக்கப்படும் உலகம் மீண்டும் ஊழிக்காலத்தில் மாயையிடத்துச் சென்று ஒடுங்குவதால் உலக உற்பத்தியொடுக்கம் என்பது சித்தாந்தத்திலே புதிய படைப்பாகவோ முற்றான அழிவாகவோ கருதப்படுவதில்லை. அதனையே

''தேரின் மண் மாயையாகத் திரிகை தன் சக்தியாக
ஆரியன் குலலானாய் நின்றாக்குவன் அகிலமெல்லாம்'

எனச் சித்தியார் தெளிவுபடுத்தியது.[18]

மாயையே உலகிற்கு நிலைக்களன் ஆயின் அதற்கு ஒரு கருத்தா எதற்கு? என ஆசங்கிப் போர்க்கு அறிவற்ற சடப்பொருளான மாயை தானாக இயங்கும் சக்தி அற்றது. அதனால் அறிவுள்ள சிற்சக்தி மூலமாக அது இயக்கப்படுவதற்கு ஒரு கருத்தாவின் அவசியம் வலியுறுத்தப்பட்டது. ஆகையினால் நிலையான பொருளான மாயையே உலகிலே தோன்றும் சகல காரியங்கட்கும் வித்தாக அமைவதனால்,



''நித்தமாய் அருவாய் ஏகநிலையதாய் உலகிற்கோர்
வித்துமாய் அசித்தாய் எங்கும் வியாபியாய் விமலனுக்
கோர் சத்தியாய் புவனபோகம் தனு கரணமும் உயிர்க்காய்
.... வைத்ததோர் மலமாயை மயக்கமும் செய்யுமன்றோ''

எனச் சித்தியார் மாயையின் இலக்கணத்தை தெளிவுபடுத்தியுள்ளது.[19]

மாயையே ஆன்மாக்கட்குத் தனு கரண புவனபோகங்களையும் உண்டு பண்ணுவதுடன் உடல்களையும் கொடுப்பதனால் 'மாயையே உடலுமாகும் மாயையே கரணமாகும்.... அண்டபிண்டம் யாவும் மாயையே' எனச் சித்தாந்த நூல்கள் குறிப்பிட்டன. ஆணவத்துடன் கூடிய ஆன்மா மாயையின் விளைவாகக் கன்மாக்களைச் சம்பாதிப்பதனால் மாயையும் ஆன்மாவிற்கு ஒரு மலம் எனப்பட்டது. மலம் என்றால் அழுக்கு எனப்படும், ஆன்ம அறிவினை ஆணவம் மறைத்தபோதும் அதற்கு ஒரு சிறு அறிவு விளக்கத்தை மாயை விளக்கமுறச் செய்வதனால் மாயை அஞ்ஞான ஆணவ இருளில் தடுமாறும் ஆன்மாவிற்கு ஒரு கைவிளக்கு ஆகும் என்பதனை 'விடிவாமளவும் விளக்கனைய மாயை' எனத் திருவருட்பயன் குறிப்பிட்டது. விளக்குத் தனது வெளிச்சத்தால் ஏனைய பொருட்களை விளக்குவது போல ஆன்மாவின் அறிவு நிலையினை விளக்கம் பெறச் செய்யும் தூண்டுகோலாக மாயை இருக்கின்றது. ஆயினும் மாயையினால் வழங்கப்படும் அறிவும் மயக்க அறிவாக சிற்றறிவாக இருந்து உயிர்களைத் தளைப்படுத்துதலால் மாயையும் சித்தாந்தத்திலே ஒரு மலம் எனப்பட்டது. ஆணவ மலம் ஆன்ம அறிவை இருளாக்கும். மாயாமலம் ஆன்ம அறிவை ஒளியாக்கும்; இதுவே இருமலங்கட்குமுள்ள வேறுபாடு. எனவே வேதாந்த மாயை நிலையற்ற அறிவை வழங்குதலால் அது பொய்த்தோற்றமாகவும் சித்தாந்தமாயை இருள் நீக்குமறிவைக் கொடுப்பதனால் நிலையான உள்பொருளாகவும் கொள்ளப்பட்டது.

சித்தாந்தத்தில் மாயை வழங்கும் அறிவு மயக்க அறிவாகவிருப்பதனால் அது சிற்றறிவு எனப்பட்டது. ஆனால் மலங்களின்

கூட்டானது சித்தாந்தத்தில் ஆன்ம அறிவினைத் தூய்மைப்படுத்த உதவுகின்றது. அழுக்கான ஆடையினை வெளுக்கும் சவர்க்காரம், கல், தண்ணீர் போன்று மலங்களும் ஆன்ம அழுக்கினை அகற்றத் துணைபுரிவன எனச் சித்தாந்த சாஸ்திரங்களில் கூறப்படும். மாயை சத்வம், ராஜசம், தாமசம் என முக்குணங்களை இயல்பாகவுடையதாக அக்குண இயல்புகளும் ஆன்மாவில் பாதிப்பினை ஏற்படுத்துகின்றன. ஆதலால் சத்வகுணத்திலே தன்னை வளர்த்துக் கொள்ளும் ஆன்மாக்கட்கு மாயையானது மயக்கமாகிய சிற்றறிவினை நீக்கவும் துணை புரிவதனால் சித்தாந்த உள்பொருட்களில் மாயை மிக முக்கிய பங்கினை வகிக்கின்றது.

## ஒழுக்க நெறியும் விடுதலையும்

வாழ்வின் மிக உயர்ந்த குறிக்கோள் துன்பங்களிலிருந்து விடுபடுதலே எனலாம். அதுவே விடுதலை என்பது என்றுமுள்ள பொதுவான நிலைப்பாடு ஆகும். இறைவனின் திருவடிகளை அடைதலே இத்தகைய துன்ப நீக்கத்தைத் தரும் என்பது சித்தாந்தம் கூறும் விடுதலை பற்றிய முடிபாகும். இதனைச் சிவஞானபோதம் 'அயரா அன்பில் அரன்கழல் செலுமே' எனக் கூறியது.[20] உயிர்கள் அஞ்ஞான ஆணவ இருள் நீங்கி அறிவொளி பெறவும் சாத்வீக குணங்களை வளர்க்கவும் இயல்பான அறிவுநிலையில் விழிப்படைந்து உலக இன்பங்களிலிருந்து விடுபட்டு ஆன்ம சுதந்திரமடையவும் சித்தாந்தம் நான்கு ஒழுக்கநெறிகளைக் கற்பித்துள்ளது. அவை சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்கு வகையாகும். சரியை நெறி சமூகத்திற்கும் கடவுட்கும் ஆற்றும் தொண்டு நெறி, கிரியை நெறியாவது புறத்தே ஆற்றுகின்ற பூசையாகும். ஏழைகளிடத்து அன்புசெலுத்துதல், உணவு வழங்குதல், கடவுளிடத்துப் பக்திபூண்டு பூசை பண்ணி, அவனால் ரட்சிக்கப்படும் உயிர்களனைத்திற்கும் சேவை செய்வதே உண்மையான பக்தி நெறியாகும். யோகமாவது இறைவனை அகக் கண்ணால் ஆத்மாவிலே தரிசித்து, அவனடியார்களையும் அனைத்து மக்களையும் இறைவனாகவே பாவித்து அவர்களது நன்மைக்காகத் தியானித்துப் பிரார்த்தனை செய்து ஆத்மானந்த அனுபவம் அடைதலாகும். மூச்சடக்கித்



தியானம் பண்ணிச் சமாதியில் இருப்பதுமட்டும் யோகமல்லவாம். எல்லா மக்களிடமும் பொறுமை, அன்பு, சாந்தம், பிரேமை இவற்றினைக் கடைப்பிடித்தொழுகி வருவதே தியானமும் சமாதியும் கைகூட வழிவகுக்கும்.

ஞானம் என்பது இறைமை பற்றிய பூரண அறிவை அனுபவத்தை அடைதலாகும். இறையன்பிலே இரண்டறக் கலந்து தமது அஞ்ஞானத்தை மட்டுமல்ல சகல மக்களது அறியாமைகளையும் களைந்து அனைத்து மக்களும் துன்ப நீக்கம்பெற போதனைகளை - உபதேசங்களை - சாதனைகளை வழங்கிச் சமூகத்தினை நல்வழிப்படுத்தும் பேரறமே மெய்ஞானமாகும். நாயன்மார்கள் அனைவரும் இவ்விதமாகவே எவ்வித வேறுபாடுமின்றி அனைத்து மக்களையும் ஒன்றுகூடும் வண்ணம் சமூகக் கூட்டமைப்பினையும் ஒருமைப்பாட்டினையும் வளர்க்குமுகமாக ஆலய வழிபாட்டையும், பூசை முறைகள், கூட்டுப்பிரார்த்தனைகள், பஜனைகள் போன்றவற்றினால் துன்பப்படும் அனைத்து மக்கட்கும் உதவுமுகமாக இறந்த பிள்ளையினை மீட்டும், அன்னதானம், தண்ணீர்ப்பந்தல்கள் அமைத்து சேவைக்கு முன்னனோடியாகவும் ஊர் மக்களது வறுமை நீங்க படிக்காசு பெற்றும், நெல்லுப் பெற்றுக்கொடுத்தும் மக்கட்கு உதவிய வரலாற்றினையே சைவசமய - சித்தாந்த வளர்ச்சிப் படிநிலைகள் வெளிப்படுத்துவனவாக அமைந்தன.

இவற்றுடன் தீட்சை, குரு, லிங்கம், அடியார் சங்கமம், ஆலய வழிபாடு முதலியனவும் சன்மார்க்கத்திற்குத் துணைநிற்குமென நாயன்மார்கள் வாழ்ந்து காட்டினர். இவ்வாறாக இவர்கள் நான்கு நெறிகளில் நின்று அவரவர் அறிவுப் பக்குவத்திற்கேற்ப நால்வகை முத்திநிலைகளை வகுத்துக்காட்டி இறுதியில் சன்மார்க்க முத்தியில் நிலைபெற்றமையினை சித்தாந்த நூல்கள் வகுத்துக்காட்டியுள்ளன. குருவினைப் போற்றுதலும், அடியவர்களை வழிபடுதலும் ஆண்டவனை வழிபடுதற்குச் சமமென சித்தாந்தம் கூறும். இதனை '"அன்பரொடுமரீகி....... ஆலயம் தானும் அரனெனத் தொழுமே' எனச் சிவஞானபோதச் சூத்திரம் உணர்த்தியது.

அடியவர் வழிபாடு என்பது சன்னியாசிகள், துறவிகளைமட்டு மல்ல, துயரமுற்ற வறுமையுற்ற, ஊனமுற்ற, ஆதரவற்ற மக்களை யும் சேர்த்தே சித்தாந்தம் 'அடியவர்' வழிபாட்டில் அடக்கும் என்பதனைச் சித்தாந்தம் பேசும் பலரும் உணரத்தவறிவிடுகிறார்கள். 'குறைவிலாது உயிர்கள் வாழ்க' எனச் சேக்கிழாரும், 'ஆழ்க தீயது எல்லாம்' எனச் சம்பந்தரும், 'யாவர்க்குமாம் உண்ணும்போது ஒரு கைப்பிடி' எனத் திருமூலரும் உணர்ந்து கூறியதனைச் சைவசித்தாந் தம் பேசும் அனைவரும் உணர்ந்தொழுகுவது சமூகத்திற்கு மிகச் சிறந்த பயனைத் தருவதாகும். இதுவே சித்தாந்த வழிபடுநிலையும் சிறந்த சன்மார்க்கப் பேறுமாகும். இதனை உணராதவர்களைக்

''கற்றும் சிவஞானமில்லாக் கலதிகள்...... துரிசறார் மூடர்'
'கற்ற அன்பினில் நிற்போர் கணக்கறிந்தோர்'

எனவும் திருமந்திரநூல் நன்குணர்த்தியுள்ளமை காணலாம்.

## அடிக்குறிப்பு

1. கீழை மேலைநாடுகளில் மெய்ப்பொருளியல் வரலாறு, பகுதி 1, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1970, ப.3.
2. திருமூலர் திருமந்திரம், பாடல் 1513.
3. இரத்தினசபாபதி, வை., திருமுறைத் தெளிவே சைவசித் தாந்தம், டாக்டர் இராதாகிருஷ்ணன் மேனிலைக் கல்வி நிறுவ னம், சென்னைப்பல்கலைக்கழகம், 1979, ப.187.
4. 'மக்கள் தாமே ஆறறிவுயிரே', தொல்காப்பியம், மரபியல், சூத். 28 - 33.
5. மணிமேகலை, சமயக்கணக்கர் திறம் கேட்டகாதை; மாணிக்க வாசகர், திருவாசகம், போற்றித்திருவருகல்.
6. நன்னெறியாவது நமச்சிவாயவே - அப்பர்சுவாமிகள், முத்தி நெறியறியாத மூர்க்கர் - மணிவாசகர், திருநெறிய தமிழ் - சம்பந்தர், 'நன்னெறியொழுக்கச் செய்து நவையறு காட்சி நல்கி - கந்தபுராணம், 'வேதநெறி சைவநெறி, என இரண்டே நூல் கள்' - சித்தியார்.
7. 'அவனே தானே ஆகிய அந்நெறி' சிவஞானபோதம்., சூத். 10.
8. சிவப்பிரகாசம், திருவிளங்கம் புத்துரை, யாழ்ப்பாணம், 1974, பதியிலக்கணம், பாடல் 1.
9. சிவஞானபோதம், சிற்றுரை, ஆறுமுகநாவலர் பதிப்பு, சூத். 1.
10. கலைவாணி. இராமநாதன் திருமதி., வேத பாரம்பரியமும் சைவசித்தாந்தமும், மதுரை, 1992, பக். 50 - 60.
11. சிவஞானசித்தியார், சிவப்பிரகாசம் என்பவற்றில் 'பதியிலக்க ணம்' என்னும் பகுதி பார்க்க.
12. வேதப்பாரம்பரியமும் சைவசித்தாந்தமும்; 'சைவசித்தாந்தப் பதிக்கோட்பாடு' என்னும் பகுதி பார்க்க.
13. திருவருட்பயன். 1ம் அதிகாரம், பதிமுதுநிலை.
14. 'அறிஞர் கறிவாம் உருவும் உடையான் உளன், - திருவருட் பயன்; 'அன்பே சிவமாவது ஆரும் அறிந்திலர்' - திருமந்திரம், 'பேரானந்தமயமான ஜோதி' திருவாசகம்.
15. சிவப்பிரகாசம், பசுவிலக்கணம், பாடல் 19.
16. சிவஞானபோதம். 2. 2. 3.
17. சிவப்பிரகாசம், பாசஇலக்கணம், பக். 72-73.
சிவப்பிரகாசம், அவத்தையிலக்கணம், ப. 139.
18. சித்தியார், சுபக்கம். சூ. 1-32.
19. மேற்படி. சூ. 2, 143.
20. சிவஞானபோதம். 11ம் சூத்திரம்.

# சைவசித்தாந்தத்தில் முப்பொருட்தத்துவம்

சைவ சித்தாந்தம் ஞானம் பற்றிக் குறிப்பிடும் போது 'நண்ணிற் கலைஞானம் கற்கும் சரக்கன்று காண்' எனத் திருவருட்பயன் கடவுள் வாழ்த்தின் ஆரம்பத்திலேயே கூறிவைத்துள்ளது. ஏட்டுச் சுரக்காய் கறிக்குதவாதது போல ஒழுக்க நேர்மையில்லாத சாஸ்திரஞானத்தால் அறிவைத் தவிர அதிகபயன் கிடையாது எனவும் 'பக்குவ நிலை' என்ற ஆத்மஞானம் மட்டும் ஒருவர்க்கு கைவந்துவிட்டால் அவர் கற்க வேண்டிய தேவையில்லாமலே சகல ஞானமும் கைவரப் பெறுவர் என்பது சித்தாந்தமரபாகும். இவ்வுண்மையினை மூன்று வயதிலே தேவாரம் பாடிய சம்பந்தரது வாழ்வும் சிறு வயதிலேயே ஞானமடைந்த மெய்கண்டார் வாழ்வும் எடுத்துக்காட்டுகின்றன. இத்தகைய ஞானச் செல்வம் பற்றிச்

''சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை அறமாக்கும், பாங்கினில் ஓங்கிய ஞானம் -
உவமையில்லாக் கலைஞானம் உணர்வரியமெய்ஞானம் -
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தார் அந்நிலையில்''

எனப் பெரியபுராணமும் சிறப்பித்தது.

அத்தகைய சிறப்பு வாய்ந்த சித்தாந்த மெய்ஞானத்தை இங்கு எடுத்துக் கூறுவதென்பது அவ்வளவு சுலபமான காரியமல்ல. அதனால்

'இறைவனார் கமலபாதம் இன்று யான் இயம்பும் ஆசை-
நிறையினார் குணத்தோர்க்கெல்லாம் நகையினை நிறுத்து
மன்றே'

என்ற சிவஞானசித்தியாரது அவையடக்கப் பாடலை இவ்விடத்தில் நினைவிலிருத்தி இக்கட்டுரையினைக் ஆரம்பிப்பதே ஓரளவு பொருத்தமாகவும் இருக்கும்.

இறைவனின் இயல்பு எத்தகையதாயினும் இறைவன் நூல் எனப்படும் வேத சிவாகமங்களினால் அவனை உணரலும் உணர்த்தலும் கைகூடும் என்பதற்கமையவே இங்கு முப்பொருட்க



ளின் தத்துவம் பற்றிச் சுருக்கமாகக் கூறப்படுகின்றது. சித்தாந்தம் கூறும் முப்பொருளுண்மை என்பது பதி,பசு, பாசம் என்ற மூன்று பொருட்களை உள்ளடக்கியது. இந்த உள்பொருட்கள் பற்றிய ஞானத்தை அறிவிப்பதுதான் சைவசித்தாந்த தத்துவ நோக்கம் என்பதனை சித்தாந்த சாஸ்திரங்கள் தெளிவாக விளக்கியுள்ளன.

''பல்கலையாகம வேதம் யாவையினும் கருத்துப் பதிபசு
பாசம் தெரித்தலாம்''

எனச் சிவப்பிரகாசமும்,

''பன்மார்க்கப் பொருளைப் பலவும் கீழாக மேலாம் பதி
பசு பாசம் தெரித்து பரசிவனைக் காட்டும்.... நன்மார்க்க
ஞானம்''

இது எனச் சித்தியாரும் இதனை விளக்கின.

பொதுவாகச் சமயம் உணர்வையும் தத்துவம் அறிவினையும் அடிப்படை அம்சமாகக் கொண்டவை. ஆதலால் உள்பொருள் பற்றிய அறிவுமுதல் ஆராய்ச்சியே' இந்துக்களின் மெய்யியலாக அமைந்திருக்கின்றது. சமயம் பழமையானது - தத்துவம் ஆழமா னது; ஆராய்ச்சிக்குட்பட்டது அறிவு - ஆராய்ச்சிக்குட்படாதது நம்பிக்கை. தத்துவம் அறிவைப் பற்றிப் பேசும் - சமயம் நம்பிக்கை பற்றி விளக்கும். உணர்விற்குப் பின்னரும் இருப்பது அறிவு ஆதலால் சமய நிலையிலே பக்தி வசப்பட்டு உணர்ச்சிக்காளா வோரை தத்துவ ஞானமானது உணர்வுகளை வென்ற நிலைக்கு இட்டுச் சென்று அவர்களது அக அமைதிக்கு வழிகோலுவதா கின்றது. தத்துவ ஞானத்தின் பயன் நோக்கம் நிறைவேறுதற்குரிய செயற்திட்டத்தை வகுப்பதுதான். அதனால் தத்துவஞானம் வெறும் அறிவு நெறியாக மட்டும் நில்லாது - வாழ்க்கை நெறியாகவும் உள்ள தனையே சைவசித்தாந்தம் எடுத்துக்காட்டுவதாகவுள்ளது. ''அறிவுக் காக வாழாதே - வாழ்வதற்காக அறிந்துகொள்'' என்கிறது சித்தாந்த ஞானம்.

'சித்தாந்தம்' என்ற சொல்லின் பொருள் 'முடிந்த முடிபு எனப்படும். சித்தம் என்றால் துணிபு; அந்தம் என்றால் முடிபு என்பது சித்தியார் தரும் விளக்கமாதலால்' சித்தாந்தத்தின் துணி பாகிய முடிந்த முடிபு சைவசித்தாந்தம் ஆயிற்று. பதி, பசு,பாசம்

என்ற மூன்று பொருட்களையும் நித்தியப் பொருட்கள் எனத் துணிந்ததால் 'திரிபதார்த்த நிச்சயமே' சைவசித்தாந்தம் எனப்பட் டது. பதி என்றால் இறைவன் அல்லது சிவம், பசு என்றால் உயிர் கள் அல்லது ஆன்மாக்கள், பாசம் என்றால் மும்மலங்கள் எனவும் கொள்ளப்படும். நால்வேதங்களும் இருபத்தியெட்டு சிவாகமங்க ளும் சைவசித்தாந்தத்தின் பிரமாண நூல்களாகும். முப்பொருளின் உண்மைகளையும், இயல்புகளையும், இலக்கணங்களையும் அவற்றின் தத்துவார்த்தங்களையும் விரிவாகக் கூறுவதால் சிவாகமங்கள் சித்தாந்தம்' எனவும் 'வித்யாபாதம்' எனவும் சிறப்பிக் கப்பட்டன. சிவாகமங்களில் கூறப்பட்ட 'முடிந்த முடிபு' எவை என்பதனையே மெய்கண்ட சாஸ்திரங்கள் இயம்புகின்றன. அவை திருவுந்தியார் முதல் சங்கற்பநிராகரணமீறாக பதின்னான்கு நூல்க ளாக அமைந்துள்ளன. சிவாகமங்கள் முப்பொருளுண்மை பற்றிக் கூறும் முதல் நூல்களாகும். சிவாகமங்களின் கோட்பாடுகளை விளக்கிக் கூறவந்த திருமந்திரம் முப்பொருளுண்மை பற்றிக் கூறும் காலத்தால் முற்பட்ட பழந்தமிழ் நூலாகும், சிவாகமங்களின் முடிவான உள்பொருட்களின் தத்துவம் பற்றி மெய்கண்டதேவரே சிவஞானபோதத்தின் மூலமாக 'தத்துவமுறைப்படுத்தி' (Systerma-lization) விளக்கம் செய்தவராகையால் அவரது சிவஞான போதம் முதல் நூலாகவும் சிவஞானசித்தியார் வழிநூலாகவும், சிவப்பிர காசம் சார்பு நூலாகவும் கூறப்படும். இவற்றினைவிட சைவர்கள் கற்கவேண்டிய தோத்திர நூல்களான தேவார திருவாசகங்கள் உட்பட்ட பன்னிரு திருமுறைகளும் சைவசித்தாந்த உண்மைகளைத் தம்முள்கொண்டனவாகக் காணப்படுகின்றன.

> 'விளையாததோர் பரிசில் வரு பசு பாச வேதனை ஒண்-
> தளையாயின தவிர அவ்வரு தலைவன்'

என்ற சம்பந்தர் பாடல் இதற்கோர் நல்ல உதாரணமாகும், அதனால் மெய்கண்ட நூல்கள் சாஸ்திர நூல்கள் எனவும் திருமுறைகள் தோத்திர நூல்கள் எனவும் வகுக்கப்பட்டதை

> ''வேதநூல் சைவ நூல் என இரண்டே நூல்கள் வேறுரைக்
> கும், இவற்றின் விரிந்த நூல்கள், நீதில் பொருள்
> கொண்டுரைக்கும் நூல் சைவம், பிறநூல்பூர்வம் சிவாக
> மங்கள் சித்தாந்தம்''



என்றது சித்தியார். காட்சி, அனுமானம், ஆப்தவசனம் எனப்படும் மூவகைப் பிரமாணங்கள் வாயிலாக சித்தாந்தம் 'முப்பொருளுண்மை' எனப்படும் பௌதீகவதீக்கோட்பாடுகளை நிர்ணயம் செய்திருக்கின்றது. மூன்று பொருட்களும் என்றுமுள்ள வை என்பதனை நிறுவுவதற்கு காட்சி, அனுமானப் பிரமாணங் களை விட சாஸ்திரப் பிரமாணங்களையே சைவசித்தாந்தம் பெரிதும் ஏற்றுக் கொண்டுள்ளது. ஆதலால் சித்தாந்த முப்பொருளுண்மையினை ஏற்போருக்கு 'நம்பிக்கை' என்ற சாதனம் மிகவும் இன்றியமையாது வேண்டப்படும்.

சமய சம்பந்தமான அறிவை உயர்ந்த சமயக் கோட்பாடுகள் விளக்கும் போது 'நம்பிக்கை என்ற (Faith) சொல்லைப் பயன் படுத்துகின்றன. இது அளவையால் வரும் தெளிவல்ல. அதனை அகநோக்கால் வரும் அற்புதக்காட்சி எனச் சிலர் கருதுவர் (Intuition). ஆயினும் மனிரது உள்ளுணர்வுடன் கலந்த ஒன்று இது என அறிஞர் கூறுவர். இதனைக் கடவுளிடத்துள்ள பக்திப் பேருணர்வு எனச் சமயக் கோட்பாடுகள் கொண்டன. மெக்டுகல் (Magdugal) என்ற மேல் நாட்டு அறிஞர் ஒருவர் தன்னை ஆண்டவனுக்கு அடிமை என்ற முறையிலே கருதி 'நான் எனது' என்ற மன உணர்வுகளை இறைமைச் சக்தியில் ஒன்றுபடுத்தும் மனநிலை இது எனக்குறிப்பி டுவர்.

இந்த இறையடிமைத்திறத்தினை எமது சைவநாயன்மார் வாழ்க்கையிலே நன்கு கண்டுகொள்ளமுடியும். 'உன்கடன் அடியேனைத் தாங்குதல்' என்றார் அப்பர் சுவாமிகள். 'மீளா அடிமை உமக்கேயாளாய்' என்றார் சுந்தரர். 'நாயிற் கடையாய் கிடந்த அடியேற்கு' என்பது மணிவாசகர் வாக்கு. இவை பதியின் பேரன் பிற்கு தன்னை அர்ப்பணித்துப் பசுத்துவம் நீங்கிய ஆன்மாக்களது பேரின்ப நிலையினைச் சுட்டுவனவாகும். இதனைப் 'பாசத்தைப் பதியிடத்துக் கரைத்துக் கொள்ளுதல்' என்றவாறு 'பாசம் கரை பதி சாயுச்சியம்' என்ற பரமுத்திப்பேறென்றது திருமந்திரம். பதி, பசு, பாசம் என்பவற்றின் தொடர்பு எவ்வாறு இணைந்திருக்கின்ற தென்பது இதன் விளக்கமெனலாம்.

மேலும் தத்துவங்கள் எல்லாம் இவ்வாறு கலைச் சொற்களைத் தத்தமக்கு உரியவாறு வளர்த்துக் கொண்டுள்ளன. நுட்பமான கருத்துக்களை வெளிப்படுத்தக் கலைச் சொற்கள் இன்றியமையா

தன. எனினும் 'கலைச் சொற்களில் மட்டும் இன்பம் காணும் சிலர் நடைமுறைத் தத்துவங்களை விடுத்து பொது அறிவுக்கும் அப்பாற்பட்ட கற்பனையுலகிலே நிலவுவார்கள். அதனால்

''சாலையில் உள்ள பள்ளங்கள் எவ்வாறு வண்டிகள் முன் செல்லத் தடையாக இருக்கின்றனவோ அதுபோல சிந்தனை கள் இயற்கையாகத் தழைத்தோங்கி வளர்வதற்கு குறியீட்டுச் சொற்களும் தடையாகவுள்ளன''

என்றார் அல்பேர்ட் சுவிற்சர் (Albert switszer) என்ற அறிஞர். ஆகவே தத்துவங்கள் யாவருக்கும் எளிதிலே விளங்குவனவாக அமைய வேண்டும் என்ற நோக்கத்தினால் அனேக கலைச் சொற்கள் இங்கு தவிர்க்கப்பட்டுள்ளன.

## வைதிக தரிசனங்களும் முப்பொருள் சிந்தனையும்

இந்திய மெய்யியலிலே உள்பொருளை அல்லது மெய்ப்பொரு ளைப் பற்றியறியும் மார்க்கமே தத்தவஞானமாக வளர்ச்சியடைந்தி ருக்கின்றதெனில் அது தவறாகாது. எனவே 'அத்தகைய அழியா நிலையுடைய உள்பொருள் எது என்பதனை நிர்ணயம் செய்வதிலே தான் இந்திய தத்துவ சிந்தனைகள் முரண்பட்டு நிற்கின்றன. 'ஏகம்ஸத்' என்றவாறு 'உள்பொருள் ஒன்று' என்கிறது வேதநூல். 'தத்-துவம்' என்ற சொல்லைக் கொண்டமைந்த 'தத்-துவம்-அஸி' என்பதாகிய 'நீயே அது ஆகிறாய்' என்ற ஓர் உண்மையினை உபநிடதங்கள் நீண்ட ஆராய்ச்சிகள் வாயிலாகப் புலப்படுத்த முயன் றன. 'உண்மை ஒன்று' என்பதும் அந்த உண்மைப்பொருள் 'நீயே அது ஆகிறாய்' எனவும் கொண்டு நோக்கினால் - மனிதர்களாகி 'நாம்' நமக்குள்ளேயே ஒரு தத்துவமாக இருப்பதனை இக்குறியீடுகள் புலப்படுத்த முயல்கின்றனவாகலாம்.

'அகம் பிரம்மாஸ்மி' எனப்படும் நான் பிரம்மமாக இருக்கி றேன் எனும் உப நிடத மகாவாக்கியமானது இதனையே சுட்டுகின்ற தெனலாம் கருதலாம். ஒவ்வொரு பொருளும் உள்பொருளின் மறுவடிவம் எனக்கூறுமிடத்து 'அகம்' என்பது உடலா அல்லது உயிரா அல்லது இரண்டுமேயற்ற வேறொன்றா? என்ற சந்தேகம் இயல்பாக எழுகின்றது. ஆகவே



'உனதிலதிலதென்றலின் எனதுடல் என்றலின் ஐம்புலன் ஒடுக்கமறிதலில் கண்படில் - உண்டிவினையின்மையின், உணர்த்த உணர்தலின் மாயாயந்திரதனுவினுள் ஆன்மா'

என சிவஞானபோதம் உடலின் வேறாகவுள்ளது ஆன்மா என உணர்த்தியது. அத்துடன் உலகமாகத் தோன்றும் பிரபஞ்சம், ஆன்மா என்ற இரு கொள்கைகள் பசு, பாசம் எனச் சித்தாந்த ஆய்விலே முதன்மை பெற்றன. நாமும் நாம் வாழும் இந்த உலகமும் இரண்டு தத்துவப் பொருட்கள் எனில் இவையிரண்டும் தாமாக இயங்குகின்ற னவா? அல்லது ஒன்றினால் ஒன்று இயங்குகின்றதா? அல்லது இரண்டையுமே இரண்டுமல்லாத வேறொருபொருள் இயக்குகின் றதா என்ற சந்தேகம் எழலாயிற்று.

பொதுவிலே உலகப் பொருட்கள் அனைத்தையுமே இயங்கு வன, இயக்குவன என்ற இரு பிரிவிலே அடக்கலாம். அவற்றிலே உயிரும் உலகமும் இயங்குவன எனவும் இவற்றினை மூன்றாவதான ஒரு பொருள் இயக்குவது எனவும் சித்தாந்தம் கொண்டது.

''வருமுறை வந்து நின்று போவது மாதலாலே தருபவன் ஒருவன் வேண்டும் - தான் முதல் ஈறுமாகி மருவிடும் அநாதி முத்த சித்துரு மன்னிநின்றே''

என இவ்வுள்பொருளைச் சித்தியார் விளக்கியது.தோன்றி நிலைபெற்று மறைகின்ற இவ்வுலகினை இயக்குபவன் - அவன் ஆதி அந்தமுமில்லாத சுதந்திரனாக இருப்பதுடன் இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்கிய ஞானசக்தியைப் பொருந்தி உலகினை இயக்குவன். அவனே பதி எனப்படுபவன். அத்துடன் உலகினை மீளத் தோற்றியொடுக்குவதன் காரணம் உயிர்கள் இருவினைப்ப யன்களை அனுபவித்தற்பொருட்டாதலால் பசுக்களும், அவர்களைச் சிறைப்படுத்தும் வினைகளும், பசுக்கட்கு அருளும் பதியும், என மூன்றும் சித்தாந்தம் கூறும் முப்பொருளுண்மைத் தத்துவங்களா யின.

ஆன்மா-பிரபஞ்சம் ஆகிய இவற்றின் இருப்பிலே இந்திய தத் துவ சிந்தனையாளர்களிடையே ஆட்சேபனைகள் கிடையாது. அவை காட்சிக்குரியனவாக கண்கட்குத் தெரிதலால் அவைகளின் உண்மையினைப் பலரும் ஏற்கும் நிலையிருந்தது. மூன்றாவதாக வரும் உள்பொருள் சாதாரண பேச்சு வழக்கிலே கடவுள் அல்லது

ஈஸ்வரன் எனக் கொள்வோமாயின், அப்படி ஒரு பொருளின் தேவை அவசியமற்றது என அவைதீக சமயப்பிரிவுகள் கருதுவனவாயின. ஆன்மா, உலகம், கடவுள் என்ற மூன்று பொருட்களும் இந்திய தத்துவவாதிகளிடையே ஆராய்ச்சிக்குரிய பொருட்களாக இடம் பெற்றன. ஆயினும் இம்மூன்று பொருட்களும் உண்மையா அல்லது உண்மையற்றனவா என்பதிலேயே வைதீக-அவைதீகப் பிரிவுகள் தம்முள் மாறுபட்ட சிந்தனைப் போக்குடைய வையாகக் காணப்படுகின்றன. வேத நூல்களை ஏற்றுக் கொள்ளும் வைதீக தத்துவங்களில் சாங்கியமானது புருடனையும் உலகமாகிய பிரகிருதியினையும் உள்பொருள் எனக் கொள்ளும். இவற்றினை ஆள்கின்ற - இயக்குகின்ற சக்தியின் தேவை பற்றிச் சாங்கியம் அக்கறை கொள்ளவில்லை.

சாங்கியத்தின் அடிப்படைக் கொள்கையினை ஏற்றுக் கொள்ளும் யோக தத்துவமானது புருடன்-பிரகிருதியை ஆளும் ஒரு தலைமைப் பொருளாக ஈஸ்வரனின் உண்மையினைப் பெயரளவிலே ஏற்றுக் கொண்டது. புருடன்-பிரகிருதி ஆகிய இரண்டுமே அதிஷ்டம் எனவும் அணுக்கள் எனவும் வேறுபெயரால் வைசேடிக தத்துவகாரரால் விளக்கப்பட்டது. உலக உற்பத்திக்கு அணுக்களே மூலம் எனவும் அதிஷ்டம் என்ற தத்துவம் அவற்றினை இயக்கும் எனவும் கூறுவர் டெமோகிறிற்றஸ், எபிகியூரஸ் என்ற கிரேக்க ஞானிகளும் அணுக்களை உலக உற்பத்திக்கு மூல காரணமாகக் கொள்வர். கிரேக்கர் கருத்துப்படி உயிர்களும் அணுக்களில் இருந்து உண்டாகின்றதென்பர். வைசேடிகரும் கடவுளைப் பற்றிய கருத்துகளை கவனத்தில் எடுத்ததில்லை. வைசேடிகரது கொள்கைகளை ஏற்கின்ற நியாய தரிசனமானது 'கடவுள் இல்லை' என நிரூபிப்பதற்கு ஆதாரம் எதுவும் இன்மையால் 'கடவுள்' உண்டெனக் கொள்வதற்குப் பலகாரணங்களைக் கூறி அதனை ஏற்றுக் கொண்டது. ஆனால் கடவுளை முதற்காரணமாகக் கொள்வதில்லை. மீமாம்சகதத்துவம் 'ஆராய்தல்' எனப் பொருள்படும். வேதச்சடங்குகளையும், வேள்விகளையும் ஆற்றினால் விடுதலை என்ற கொள்கையிலே நம்பிக்கை உடையது. ஆராய்தல் என்றபொருள் இதற்கு எவ்வாறு பொருந்தும் என்பது விந்தையானது. வேதச்சடங்குகளை ஆராதிக்கும் மீமாம்சை வேதத்திலே கூறப்பட்ட கடவுட் கொள்கையினை ஏற்பதில்லை. ஆனால் நியாய வைசேடிகர் போல ஆன்மாக்கள் என்றுமுள்ளவை-எங்கும் நிறைந்தவை என ஏற்றுக் கொள்வதால்



இவர்களிடையேயும் ஆன்மா, உலகம் பற்றிய கருத்தொற்றுமைகள் காணப்படும்.

இவ்வாறு மீமாம்சகர் வேதத்தின் கருமகாண்டத்தினை மிகைப்படுத்த; வேதாந்தமானது வேதங்களின் ஞானகாண்டத்தை மட்டுமே ஏற்றுக்கொண்டு பரம் பொருட்கொள்கையாக (ஒருமைக்கொள்கை) விளங்குகின்றது. வேதாந்தம் கூறும் பரப்பிரமம் ஆன்மாவா-பிரம்மா என்ற மயக்கம் பலருக்கும் உண்டு. கடவுள் கொள்கை பற்றிய மகிமை அங்கு கிடையாது என வாதிப்போருமுண்டு. ஆன்மா உலகம் அனைத்தையும் 'ஏகம்ஸத்' என்ற ஒருமைக்குள் அடக்கி பிரமம் ஒன்றே உள்பொருள்' என நிறுவுவதில் வேதாந்தம் பெருமுயற்சி எடுத்துக் கொண்டது. வேதாந்தம் இவ்வாறாக வைதிக தரிசனங்கள் ஐந்தும் ஆன்மா - உலகம் என்ற இரண்டு தத்துவங்களின் உண்மைகளை மறுக்கவில்லை. கடவுட் கொள்கை விளக்கத்தில் தான் தம்முள்ளே மாறுபடுகின்றன. வேதாந்தமானது ஆன்மா, உலகம் இவையிரண்டினது உண்மை இன்மைகளைப் பெரிதுபடுத்தாது இரண்டினையும் உள்ளடக்கிய பரம் பொருட் கொள்கையினைப் போதிக்கும் (Absolute Brahma) 'கருத்து முதல் வாதமாகத் தன்னை' வெளிப்படுத்திக் கொண்டதெனலாம் (Idealism) ஏனைய பிரிவுகளிலே யோகமும் நியாயமும் கடவுட் திட்டத்திலே ஏனோ தானோ என்ற நிச்சயமற்ற போக்கினையே கடைப்பிடித்து வந்ததாகையால் வைதீக தத்துவங்களாவன உயிர்களும் அவற்றினால் அனுபவிக்கப்படும் உலகமும் தான் உண்மை என்றவாறு நடைமுறைத் தத்துவங்கட்கே பெரிதும் முதன்மைத் தன்மை வழங்கி இருக்கின்றன. ஆதலால் அவற்றினை 'பொருள் முதல்வாதக் கொள்கை' என ஏற்றுக் கொள்ளும் நிலைப்பாட்டினை இந்து தத்துவத்திலே பெரிதும் கண்டுகொள்ளமுடிகின்றது. வைதிக தத்துவங்களை ஆஸ்திகவாதம் என்பதும் மரபு. ஆஸ்தி என்ற வடமொழிச் சொல் பொருள் அல்லது சொத்து என்னும் கருத்தினையும் தரும். உலகப் பொருட்கட்கும் மக்கட் கூட்டத்திற்கும் முதன்மையளித்ததனால் அவை ஆஸ்திக வாதம் எனப்பட்டிருக்க வேண்டும். இந்து தத்துவத்தில் ஆஸ்திக - என்றால் 'கடவுள் உண்டு' என்னும் கோட்பாட்டில் நம்பிக்கை வைத்தல் என்பதே பொருளாகும்.

கடவுளையும் வேதநூல்களையும் ஏற்றுக்கொள்ளும் பிரிவுகளை ஆஸ்திக தரிசனம் எனவும் - இவற்றினை ஏற்காதனவற்றை

நாஸ்திக தரிசனம் எனவும் கொண்டு இந்திய தரிசனங்களில் இப்பிரிவுகள் இடம் பெற்றன. சைவசித்தாந்தம் கடவுட் கொள்கைக்கு தலையாய இடமளித்துப் போற்றியதனால் பின்வரும் விளக்கம் அதற்குப் பொருந்துவதாகலாம். தத்துவம் என்பதற்கு இந்து தத்துவ மரபிலே 'தரிசனம்' என்ற ஒரு பெயருண்டு. தரிசனம் என்பது 'திருஷ்' என்ற வடமொழிச் சொல்லினடியாகப் பிறந்தது. திருஷ்டி என்றால் 'பார்வை' அல்லது 'காட்சி' எனப்படும் (Perception) மேலான உண்மைகள் எனப்படுபவற்றினை தமது ஞானதிருஷ்டி அல்லது ஞானக்காட்சியினாலே கண்டுணர்ந்து உலகத்தோர் உய்யும் வண்ணம் உரைக்கப்பட்ட 'உண்மைப்பொருட்கள் தரிசனம் அல்லது தத்துவம் என இந்து தத்துவ மரபிலே சிறப்பாக அழைக்கப்பட்டன. அதனால் வைதிக தரிசனங்கள் ''ஷட்' தரிசனங்கள்' எனவும் பெயர் பெற்றன. யோகக்காட்சி, அகக்காட்சி, ஞானக்காட்சி என்பனவும் சைவசித்தாந்தத்திலே பிரத்தியட்சம் என்ற அளவை மூலம் எதிர்மறைப் பொருளிலே அரிய உண்மைகளை விளக்கப்பயன் பட்டது. ஏனைய தத்துவங்களில் பிரத்தியட்சம் என்ற அளவை பெறும் முக்கியத்தவத்தை விட சித்தாந்தத்திலே 'காட்சி' எனப்படும் இந்த அளவை பெறும் முக்கியத்துவம் தனித்துவமானது எனலாம். புறக்காட்சி, புலக்காட்சி, ஊனக்காட்சி என்பன கானல் நீர், முயற்கொம்பு, ஆகாயத்தாமரை போன்ற இல்பொருளையும் உணர்த்தும் ஆதலால் புறக்காட்சியை சித்தாந்தம் பெரிதுபடுத்துவதில்லை.

''முகத்தில் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்-அகத்துக்
கண்கொண்டு காண்பதே ஆனந்தம்''

என்றது திருமந்திரம். இதனை 'ஊனக்கண் பாசம் உணராப்பதியை - ஞானக் கண்ணினில் சிந்தைநாடி' எனச் சிவஞானபோதமும் சுட்டியது.

எனவே மெய்ப்பொருள் எத்தனை? என்ற ஆய்விலே இரண்டு பொருட்கள் உண்மை எனச் சாங்கியமும் இரண்டிற்கு மேற்பட்டவை உண்மை என யோக, வைசேடிக, நியாய, மீமாம்சை தரிசனங்களும், ஒன்றுதான் உள்பொருள் என வேதாந்தமும் நிர்ணயப் படுத்த முயன்றபோது ஒன்றுமல்ல-இரண்டுமல்ல உள்பொருட்கள் மூன்று எனத் திட்டவட்டமாக வகைப்படுத்தி நிலைப்படுத்தியது சைவசித்தாந்தமாகும். வைதிக தரிசனங்களை ஆன்மிகவாதக்



கோட்பாடுகள் எனக் கொள்வோமானால் சைவசித்தாந்தத்தை முப்பொருளுண்மையினை அடிப்படையாகக் கொண்ட ஒரு 'மெய்ப்பொருளியல்' எனக் கொள்வது பொருத்தமென்பது மேற் குறிப்பிட்டவற்றிலிருந்து புலனாகும். காலத்தின் தேவையினாலும் எல்லாவகையிலும் இறுதியாக வடிவமைக்கப்பட்ட தத்துவமாக இருப்பதனாலும் தனக்கு முற்பட்டத் தத்துவசிந்தனைகள் பலவற்றையும் ஆய்ந்து தனது முடிபுகளை வெளிப்படுத்துதற்கு கால அவகாசமும் சித்தாந்தத்திற்கு ஒரு வாய்ப்பாக அமைந்ததெனலாம்.

## முப்பொருளுண்மையில் பொருட்தத்தவம்

கி.பி. 13 ம் நூற்றாண்டின் ஆரம்பத்திலே வாழ்ந்த 'பொய்கண்ட கன்ற புனிதர்' எனப்பட்ட மெய்கண்டார் என்பார் சித்தாந்தக் கொள்கைக்கு ஒரு புதிய எழுச்சியும் மறுமலர்ச்சியும் அளித்தார். சித்தாந்த சமயம், சித்தாந்த தத்துவம் ஆகியன பற்றிய தெளிவான அமைப்பினை அவரது சிவஞானபோதம் என்ற நூல் நன்கு வெளிப்படுத்துவதாகவுள்ளது. சமயம் வேறு, தத்துவம் வேறு என்றில்லாமல் இங்கு இரண்டும் பின்னிக்கிடக்கின்றன. அவற்றிலே என்றுமே நிலையாக உள்ள பொருள்களின் தத்துவத்தை ஆராய்வது மெய்ஞானம் எனவும் மாறும் அல்லது பகுதியாகப் பிரியும் பொருட்களையாராயும் அறிவு விஞ்ஞானமாகவும் வளர்ந்தது. அவற்றினைப் பௌதிகம் (Physics) வேதியல் (Chemistry) தாவரவியல் (Botany) போன்ற பலதுறைகளை உள்ளடக்கியது போல அக்கால மெய்ஞானிகளும் இவ்வுலகப் பொருட்களினுடைய மூலம், அவற்றின் உற்பத்தி, ஒடுக்கம் முதலியவற்றினை வெவ்வேறாக ஆராய்ந்தனர். மேற்குறிப்பிட்டவற்றிலிருந்து கடவுள், உயிர், உலகம் ஆகிய மூன்றும் என்றும் உள்ளவை நிலையானவை. ஆதியந்தம் அற்றவை - அநாதியானவை. என்பதனைத் தமது ஆழ்ந்த ஆராய்ச்சிகளின் பயனாக சித்தாந்த ஞானிகள் சிவாகமங்கள், சித்தாந்தசாஸ்திரம் போன்ற நூல்களிலே வெளியிட்டு வைத்தனர்.

''பதி, பசு, பாசம் எனப்பகர் மூன்றில் பதியினைப் போல்
பசு, பாசம் அநாதி''

எனத் திருமந்திரம் இந்த முப்பொருண்மையினை முதலில் எடுத்துக் காட்டியது.

மேலும் விஞ்ஞானமும் பொருட்தத்துவத்தைக் கொண்டுள்ளது. பொருள் மூவகைப்படும். அவை அருவப்பொருள், அருவுருவப் பொருள், உருவப்பொருள் என விளக்கப்பட்டுள்ளன. அருவப் பொருள் மெய்ஞானத்திலும் அருவுருப்பொருளும், உருவப்பொரு ளும் விஞ்ஞானத்திலும் விளக்கப்பட்டுள்ளன. அருவப் பொருளை விளக்க மெய்கண்டார் நூலையும் விஞ்ஞானத்தை அறிய உடல் தத்தவ நூல்களையும் பயன்படுத்தலாம். உலகியல் விளக்கத்திற்கும், உடல் தத்தவ விளக்கத்திற்கும் விஞ்ஞானம் இன்றியமையாத தாயிற்று. இதனையொத்தவாறு சங்க நூல்களிலும் பொருள் தத்துவமானது முதல், கரு, உரி என மூவகையாகப் பகுக்கப்பட் டுள்ளது. முதல் பொருள் நிலம் எனவும், நிலத்திலே தோன்றும் உயிரினங்கள் கருப்பொருள் எனவும், உயிரினங்களின் பயன்பாட்டு நுகர்விற்குரிய அகப், புறப்பொருட்கள் உரிப்பொருள் எனவும் பகுத்துக்காட்டப்பட்டுள்ளன. இதனையொத்தனவாறு சைவசித்தாந் தப் பதிக்கொள்கையினை ஆதாரமாகக் கொண்டு மூவகை விளக்கம் அதில் அடங்கியிருப்பதனை திருமந்திரம் பின்வருமாறு எடுத்துக் காட்டும். 'உருவும் அருவும் உருவோடருவும் மருவு பரமசிவன்' என்பது அந்தப்பாடலாகும். இவ்வாறு கண்ணுக்குப் புலனாவது உருவம் எனவும் கண்ணுக்குப் புலனாகாதது அருவம் எனவும் கண்ணுக்குப் புலனாகியும் வேறுபாடு தோன்றாதது அருவுருவம் எனவும் உலகிலே பொருட்கள் மூவகையாகத் திகழ்வது பதியுண் மைக்கும் பொருத்தமானதாகும். சித்தாந்தமும் மூன்று பொருட்க ளும் அதனையுள்ளிட்ட முப்பத்தியாறு தத்துவங்களையும் தனது பௌதிகவதீதக் கருத்துக்களாக ஏற்றுக் கொண்டது, (Metaphysics) சித்தியாரிலே,

''தத்துவம் எண் மூன்றும் சென்று ஆன்ம தத்துவத்தொ
டுங்கும் - வித்தையில் ஒடுங்கும் ஆறு சிவத்தினில் ஒடுங்
கும் மூன்று-நித்த தத்துவம் இம்மூன்றும் என்பர் இரண்டும்
நின்ற சுத்தமாம் சிவத் தொடுங்கும்...''

என்ற செய்யுளிலே முப்பத்தியாறு தத்துவங்களும் கூறப்பட் டன. நித்த தத்துவம் மூன்று அது பதி,பசு, பாசம் எனப்படும். கடவுள்-உயிர், உலகம் என்றும் சொல்லப்பட்டன. இவற்றின் வாயிலாக முப்பொருட்களின் பொருட் தத்துவம் விளக்கப்பட்டது.



## சித்தாந்தத்திலே பாசம்

உண்மை விளக்கம் என்ற சித்தாந்த நூலும் சிவாகமங்களிற் சிலவும் பாசம், பசு, பதி என்ற வரிசையிலும் தொடர்வதுண்டு. இங்கும் அதன் வழியே முதல் பாசத்திலிருந்து கூறப்படும் பாசம் என்பது உயிர்களின் பற்றுக்கு இடமாகின்ற உலகப் போகப் பொருட்களைச் சுட்டும். ஆணவம் கன்மம் மாயை என மூவகைப் பாசங்கள் உயிர்கட்கு உண்டு எனச் சித்தாந்தம் கூறும். அவற்றிலே உலகப்பொருட்களின் உற்பத்தி, ஒடுக்கம் பற்றிய கருத்துக்கள் 'மாயாகாரியங்கள்' எனப்படும் அணுத்தத்துவமாக அங்கு விளக்கப் பட்டுள்ளன. அணு என்பது தத்துவஞானத்தின் பயனாக முடிவுக்கு முடிவானது எனச் சித்தாந்தம் சிவாகமங்கள் வாயிலாகக் கூறியது. முடிவு எங்குள்ளதோ அங்குதான் தொடக்கமும் உண்டு. எனவே தொடக்கத்திகனை அறிய ஒடுக்கத்தினை ஆராயவேண்டியதாயிற்று. பொருட்களின் ஒடுக்கம் அழிவல்ல பகுதிகளாகப் பிரிதலாகும். இது அழிக்கமுடியாத நிலைவரை செல்லுமிடத்து 'அணு' என்பதில் முடியும். இவ் அணுக்களே உலகின் உற்பத்தியும் ஒடுக்கமுமாகும். ஆதியில் உலகில் தோன்றிய துகள்களைப் பூதாதிகள் என்றனர். கண்ணுக்குப்புலப்படாத துகள்கள் இவையாகும். இவற்றினை சூக்கும தத்துவம் என்றது சித்தாந்தம். உருவம்,பண்பு, இயல்புகளற் றுக் காணப்பட்ட இத்துகள்கள் ஆற்றலை மேற்கொண்டதும் தன் மாத்திரைகள் என்னும் துகள்களாக மாறின. தன்மாத்திரைகள் ஒன்று கூடி ஒரு பரமாணுவாகத் திகழ்கின்றன. உலகப் பொருட்கள் யாவும் பரமாணுக்களின் துகள்களே.இவற்றினைச் சடப்பொருள் அல்லது உருவப்பொருள் என்றனர். அவ்விதமான பொருள் சூடு, காந்தம், ஒளி, மின்சாரம் முதலிய சக்திகளாக இயங்கவும் கண்டனர்.

'உறைந்து கிடந்தால் பனிக்கட்டி, உருகிவழிந்தால் தண்ணீர்' என்பது போல சக்தி உறைந்து கிடப்பது சடம் எனவும் - சடம் ஆற்ற லாகி வழிவது சக்தி எனவும் சொல்லப்பட்டது. அணுவிஞ்ஞானத் தின் தந்தை எனப்படும் அயன்ஸ்ரீன் என்பாரும் ஆங்கிலத்திலே (Matter and Energy) எனப்படும் பொருளும், சக்தியும் ஆகிய இரண் டும் பொருள் சக்தியாகவும் சக்தி பொருளாகவும் மாறக்கூடியது என்ற உண்மையினையும் வெளிப்படுத்தினார். சித்தாந்தத்திலும் இவ்வுண்மையானது சக்தி எனவும் சிவம் எனவும் வகுக்கப்பட்டு சக்தி சிவமாகவும், சிவம் சக்தியாகவும் ஆற்றலினால் மாற்றமடை கிறது எனவும் கூறப்பட்டது. (Theory of Unity)

மாமலையாகத் தோன்றுவன எல்லாம் மணல் மணலாகக் கரைகின்றன. மணலிலும் பெருமணல், சிறுமணல் நுண்மணல் எனக் குறைந்து கொண்டே போவதுண்டு. இவ்வாறு ஒவ்வொரு பொருளும் அடிப்படையில் சிறியதாகி சூக்குமம் நுண்ணியதாகி அடங்குகின்றது. இதேபோன்று பனிக்கட்டி சூட்டினால் உருகித் தண்ணீராகி, தண்ணீரும் சூட்டினால் நீராவியாகி நீரின் அணுத்திரள்கள் வரும் என்பர். அப்போது தண்ணீரின் இயல்பு அங்கிராது. தண்ணீரையும் இருவேறாகப் பிரித்தால் அங்ஙனம் பிரிபவையே தத்துவங்கள் அல்லது உள்பொருட்கள் எனப்பெயர் பெறுகின்றன. இத்தத்துவங்களை சூக்கும நுண்ணிநிலையிலிருந்து முப்பத்தியாறு தத்துவங்களின் பரிணாமமாகச் சித்தாந்தம் வகைப்படுத்திற்று. மாயை என்பது சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதிமாயை என மூன்று பிரிவாகக் கொள்ளப்படும். இவற்றிலே சுத்தமாயையில் இருந்து சிவதத்துவம் ஐந்தும், அசுத்தமாயையிலிருந்து வித்யாதத்துவம் ஏழும் பிரகிருதி மாயையிலிருந்து ஆன்ம தத்துவங்கள் இருபத்திநான்கும் (24ம்) ஒடுங்குவதாக சிவாகமங்களும் சித்தாந்தங் சாஸ்திரங்களும் விளக்கின. ரௌரவாகமம் - வித்யாபாதத்தில் இவற்றின் விரிவுகள் நன்கு விளக்கம் பெற்றுள்ளன.

இவற்றிலே மூன்றாவதாகவுள்ள பிரகிருதிமாயையில் இருந்தே இன்று காணும் உலகமாகிய பிரபஞ்சம் தோற்றப்படுகின்றது. இத்தகைய தூலமாகிய காட்சிக்குரியவாறு பருமனாகத் தோன்றும் உலகம் பிரகிருதிமாயை என்ற முப்பொருளில் தன் மாத்திரைகளான சப்தம், பரிசம்,ரசம், ரூபம், கந்தம் என்பவற்றிலே சூக்குமமாக அருவமாக அடங்கியிருப்பதெனவும் கூறப்படும். இவற்றிலே சப்தமாத்திரையிலிருந்து ஆகாசபூதமும் பரிசத்திலிருந்து வாயுபூதமும் ரசத்திலிருந்து அப்புபூதமும் (நீர்) ரூபத்திலிருந்து அக்னி பூதமும் (அக்னி) கந்ததன்மாத்திரையிலிருந்து நிலமாகிய பிருதுவி பூதமும் என ஐம்பூதங்களும் முறையே உருவடைந்தன எனப்படும்,. இதனைப்

> ''பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி-நீரிடை நான்காய் திகழ்ந்தாய் தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் - வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் - வெளியிடை ஒன்றாய்த் திகழ்ந்தால்''

என திருவாசகமும் எடுத்துக்கூறியது. இப்பஞ்ச பூதங்களின் விரிவானது சிவனின் 'ஆற்றல் சக்தி' என்பதனை நிலைநிறுத்துவதாகவே தமிழ் நாட்டிலே பஞ்சலிங்கங்கள் சிவாலயங்களில் சிறப்பாக ஸ்தாபித்தம் பெற்றன. அவையாவன: காஞ்சிபுரத்திலே பிருதுவி லிங்கமும், திருவானைக்காவிலே அப்புலிங்கமும், திருவண்ணாமலையிலே ஜோதிலிங்கமும் திருக்காளத்தியிலே வாயுலிங்கமும் சிதம்பரத்திலே ஆகாசலிங்கமுமாக இவ்வாறு உலக உற்பத்தி பற்றிய கொள்கை சித்தாந்தத்தில் விளக்கப்பட்டது. அவற்றின் விரிவு காட்டப்பட்டுள்ளது. எனவே காரியப் பொருள் அதன் காரணத்திலே சூக்கும அணுத்தன்மையாக உள்ளதென்பதனையே சித்தாந்தத்திலே சத்காரிய வாதக்கோட்பாடும் நிலைபெறச் செய்துள்ளது. அருவமான ஆற்றல் சிவசக்தி தத்துவமாகவும், அதனை உருவமாக ஆராதித்து அப்பியசித்து வந்தால் மனிதனது ஆற்றல் சக்தி பொருகிவளரும் ஆதலால் இவ்வாற்றல் சக்தியை சிவலிங்க மூர்த்தமாக வழிபடும்படி சித்தாந்தம் கற்பித்தது. எந்தத் தொழிலிலும் பயிற்சி இன்றியமையாதது. அந்த சாதனைப் பயிற்சியே இங்கு யோகமாகத் தியானமாகச் சொல்லப்பட்டது.

## சித்தாந்தத்திலே பசுவுண்மை

மேற்கூறப்பட்ட உலகப் பொருட்கள் என்னும் பாசத்தால் கட்டப்பட்டிருப்பதால் உயிர்தத்துவம் சித்தாந்தத்திலே பசு எனப்பட்டது. அநாதியான அறிவுடைய பொருள் ஆன்மாவாகும். வித்தியா தத்துவத்திலே 'புருடன்' எனப் பெயர் பெற்ற இவ் ஆன்மாக்கள் சடப்பொருட்களின் வசப்பட்டு ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலச் சேர்க்கையினால் பசுக்கள் எனப்பெயர் பெற்றன எனலாம். மல வேறுபாடு காரணமாக விஞ்ஞானகலர், பிரளயகலர், சகலர் என மூவகை ஆன்மாக்கள் உண்டு. மூவகையான்மாக்களை உலகியற் பார்வையில் சித்தர், பத்தர், சாதாரண மனிதர் எனக் கண்டுணரும் பக்குவம் ஒருவர்க்கு இயல்பாக அமைந்து விட்டால் சித்தாந்த நிலைப்பாட்டினைச் சுலபமாகப் புரிந்து கொள்ள முடியும். எனவே மலங்களினால் கட்டப்பட்டிருத்தலால் ஆன்மாக்கள் இங்கு பசுத்துவம் உடையதாகின.

> ''பசுத்துவம் உடையன் ஆகிப் பசுவென நிற்கும் ஆன்மா''

என இந்நிலை சித்தியாரில் குறிப்பிடப்பட்டது.

பாசத்திற்கு அறிவில்லாததால் அதனிடத்துண்டான உலகப்

பொருட்கள் சடப்பொருள் எனப்பட்டன. பசுக்கள் பலதரப்பட்டன ஆதலால் தம்மைச் சிறைப்படுத்தியுள்ள பாசங்களின் தொழிற்பாட்டுக்கு ஏற்ப அறிவுப் பெருக்கமும் சுருக்கமும் - அறியாமையும் உடையனவாகவுள்ளன. இவ்வாறு பாசம் உயிர்களின் அறிவினைத் தடுத்து பிணிப்பதால் - பாசம் உயிர்கட்குத் தளை எனவும் மலம், கட்டு, அழுக்கு, அறியாமை, இருள் எனவும் பலவாறு விளக்கப்பட்டது. பௌஷ்கரம் ஆணவலட்சணபடலமும் மிருகேந்திரம் பாசலட்சணபடலம் இது பற்றி நன்கு விளக்கும். இதனை,

'பாசம் பயிலுயிர் தானே பரமுதல் - பாசம் பயிலுயிர்தானே
பசு என்பபாசம் பயிலப் பதி பரமாதலால்- பாசம் பயிலப்
பதி பசுவாகுமே'

எனத் திருமந்திரம் கூறியது.

ஆன்மா அறிவை இயல்பாக உடையதாக இருப்பினும் பாசத்தினால் அறிவினை இழந்து கிடத்தலால் - அதே பாசங்களே அதன் அறிவை விளக்கமடையச் செய்யும் கருவிகளையும் ஆன்மாக்கட்குக் கொடுத்துள்ளன. அவை 'அறிதற் கருவிகள்' எனவும் 'தொழிற் கருவிகள்' எனவும் இருவகைப்படும். மூக்கு, நாக்கு, செவி, கண், மெய் என்பன அறியும் தொழிலில் ஈடுபடுதலால் அவை ஞானேந்தரியம் எனப்பட்டன. இவ்வாறு அறிந்தவற்றைத் தொழிற்படுத்தும் கருவிகளாக கால், கை,வாய், கருவாய், எருவாய் என்னும் ஐந்து கன்மேத்திரியங்களும், இவையிரண்டினோடும் ஒருமைப்பட்டு நின்று இயங்குவதற்கு மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற அந்தக்காரணங்கள் நான்கும் ஆன்மாவிற்கு அறிவைப் பெறுதற்குதவும் கருவிகளாகக் கொடுக்கப்பட்டன. இவற்றின் துணைகள் கொண்டல்லாது ஆன்மா தானாக ஒன்றையும் அறியாது என்பதனை

''பொறியின்றி ஒன்றும் புணராத புந்திக்கு - அறிவு என்றபேர்
நன்று அற''

என்றது திருவருட்பயன். எனவே சித்தாந்தத்தில் அறிவுக் கொள்கை மூவகையாகக் காட்டப்பட்டது. அவையாவன பசு தன்னை அறிவது பசு ஞானம் எனவும், பசு பாசமாகிய உலகப் பொருட்களை அறிவது பாசஞானம் எனவும் - தன்னை ஆளுகின்ற மேலான பொருளை அறிந்து அதனிடத்து ஒன்றும் அறிவு பதிஞானம் எனவும் பட்டது. பசுஞானமாகிய அறிவினால் உயிர்கள் தன்னிலை உணர



ஆரம்பிக்கின்றன. உயிரின் வேறாகக் காட்சியளிக்கும் உடலும் கருவிகளும் நுகர்பொருளாகிய உலகமும் காட்சிப் பொருளாகுமாறு தோன்றுவது படைப்பு. இது விஞ்ஞானமாகிய பாசஞானம் என அறியப்பட்டது. ஐம்பூதங்கள் ஒன்றிலிருந்து ஒன்று தோன்றியது போல அணுக்களின் மாயாகாரியத்தினால் ஏனைய பொருட்களும் தோன்றின. தற்கால நவீன விஞ்ஞானக் கருத்துப்படி பிராணவாயு, நீத்துருசவாயு, நீர்வாயு, கரிய மலவாயு போன்ற பொருட்களின் கூட்டுச் சேர்க்கையே உயிர்களின் தோற்றத்திற்கும் இயக்கத்திற்கும் ஆதாரமாகவுள்ளன. இவையனைத்தும் பேரண்டவெளியிலே வாயு ரூபமாக உலவிக் கொண்டிருப்பனவாம். உதாரணமாக ஒரு தாவரத்தின் உயிர்ச்சேர்க்கைக்கு கரியமலவாயுவும் சூரிய ஒளியும் தேவைப்படுகின்றன.

அத்தாவரத்தின் வளர்ச்சிக்கு நீத்துருசவாயுவின் உதவியும் தேவை. இதே போன்று உயிர்கள் சுவாசிக்கவும் வளரவும் பிராணவாயு இன்றியமையாதது. பிராணவாயுவும் (Oxygen), நீர்வாயுவும் (Hydrogen), சேர்ந்தே நீர் உண்டாக முடியும். எனவே உயிர்க்கு ஆதாரமான பொருட்கள் அனைத்தும் அண்டத்திலிருந்து மாறிப் பிண்டமாகப் பரிணமிக்கின்றன. இவ்வாறு அண்டத்திலுள்ள வாயுக்களின் சேர்க்கை மாறுபாடுகளினால் தான் பிண்டமாகிய உடல் பரிணமித்தது. உதாரணமாக மரணக்கிரியைகளை எடுத்தாலும் தகனக்கிரியை என்பது ஐம்பூதங்களிலிருந்து கிடைத்த பிண்டமாகிய உடலை மீண்டும் அவ்வப்பூதங்களின் பாவனையால் ஒடுக்குகின்ற கிரியை முறையின் தத்துவங்களாக அவை அங்கு விளக்கப்பட்டன.

இப்பரிணாம முறையிலான பிறவிகள் நீங்குவதற்கு உயிர்கட்குரிய உடம்புடன் கூடிவாழும் உயிர்கள் மலமறைப்பு நீங்கி-அறிவு விளக்கம் பெறுவது அவசியமாகிற்று. அறிவு விளக்கம் பெறுதற்கு இப்பிரபஞ்சமும் முத்திக்கு வழிசெய்யும் ஒரு சாதனமாகச் (அத்நுவா) சைவசித்தாந்தத்தில் கொள்ளப்பட்டது. இத்தகைய உயிர் அறிவு விளக்கம் பெறுவதற்கு மாயையாகிய உலகம் கைவிளக்குப் போல - அவற்றின் அறிவினை விளக்குதற்கு உதவியதால் 'விடிவாமளவும் விளக்கனைய மாயை' என உமாபதி சிவாச்சாரியார் எடுத்துக்கூறினார். மாயையின் இத்தகைய இயல்புகளை மதங்க பரமேஸ்வர மாயாபடலம் நன்கு விளக்கியுள்ளது. இப்படியாக உலக அறிவாற்றல்களைப் படிப்படியாகப் பெற்றுக் கொண்ட ஆன்மாக்கள்

சார்ந்ததன் வண்ணம் ஆகும் தன்மையுடையனவாதலால் (Theory of Relativity) எவற்றைச் சாருமோ அதன் இயல்புகளைப் பொருந்தி நிற்கும் எனவும் கூறப்பட்டது. உலகப்பற்றுக்களைச் சாரும்போது சத்தாகவும் சிவத்தைச் சாரும்போது சிவமாகவும் நிற்றலால் உயிர்கள் சதசத்து எனப்பட்டன. இவ்வாறு ஆன்மாவின் உலகியல் சார்பு நிலை பெத்தநிலை (கட்டப்பட்டது) எனவும் சிவத்தைச் சாரும் நிலை முத்திநிலை எனவும் சித்தாந்தம் கூறும் ஆணவச்சார்பு காரணமாக உயிர்கட்கு உலகப்பற்றில் இருக்கின்ற மலச்சார்பு நிலையினை மிருகேந்திரம் பாசலட்சண படலமும், பௌஷ்கரம் ஆணவலட்சணபடலமும் விளக்கியுள்ளன. ஆதலால் சிவம் உயிர்க் குயிராகி நின்று பதிஞானத்தை உணர்த்தி பாசநீக்கம் செய்து ஞான விளக்கமளிக்கின்றமையினால் உலகியல் பற்று அற்றுப்போகும் பக்குவம் வந்தவர்கள் சிவத்தினைச் சார்ந்து சிவமயமாகி பரமுத்தி யாகிய விடுதலைப் பேறடைவர் எனச் சைவசித்தாந்தம் காட்டி யுள்ளது.

## சித்தாந்தத்திலே பதியுண்மை

'ஆகமம்' என்ற சொல்லில் 'ஆ' என்பது பாசம் எனவும் 'க' என்பது பசு எனவும் 'ம' என்பது பதி எனவும் பொருள் படுதலால் 'ஆகமம் என்பது பதி பசு, பாச லட்சணங்களை உணர்த்தும் நூல் எனவும் - பொருள்படும். அதுமட்டுமன்றி ஆகமம் என்றால் ஆன் மாக்கட்கு மலத்தை நீக்கிச் சிவஞானத்தை உதிப்பித்து மோட்சத் தைக் கொடுப்பதெனச் சைவப் பெரியார். சு. சிவபாதசுந்தரனார் குறிப்பிடுவர். சிவம் என்ற அருவப்பொருள் தத்துவ முறையிலே 'பதி எனப்பட்டது. 'ஊனக்கண் பாசமுணராப் பதியை

''ஊனக் கண்பாச முணராப் பதியை.....
விதிப்படி அஞ்செழுத்தால் உச்சரிக்க'

என்றது சிவஞானபோதம் (9 ம் சூ)

''பதிபரமேயது தான் நிலவும் அருவுருவன்றிக் குணம் குறிகளின்றி நின்மலமாய் ஏகமாய் நித்தமாகி அலகில் உயிர்குணவர்வாகி ஆனந்த உருவாய்...' அநாதியாய்''

நிற்பது என்றது சிவப்பிரகாசம். 'ஒட்டற்று நின்ற உணர்வு பதிமூட்டி தேடற்றிட நின்ற இடம் சிவம்'' என்ற திருவுந்தியார்



செய்யுளிலும் பதியும் சிவமும் ஒன்றென விளக்கப்பட்டது. 'சிவம் என்னும் நாமம் தனக்கேயுடைய செம்மேனி அம்மான்' என்றார் அப்பர்.'நிறை மலம் அனாதி நீங்கி நிற்றலின் அறைகுவர் சிவம் என அறிவின் மேலோர்' என்ற சிவஞான முனிவர் வாக்கினாலும் சித்தாந்தப் பதிக்கொள்கை 'சிவப்பேரறிவியலாக வளர்ச்சியடைந் திருந்தமையினை அஷ்டப் பிரகரணம் போன்ற சிவாகம சித்தாந்த நூல்களும் விளக்கி நிற்கின்றன.

'பதி' என்றால் காப்பவர், தலைவர், பெரியவர், உயர்ந்தவர் என்ற பொருளில் பயன்படுத்தப்படுவது. ஆன்மாக்கட்குத் தலைவர் என்ற கருத்திலே 'பசுபதி'எனப்பட்டது. மிகவுயர்ந்த இருப்பிட மாகிய கைலாசத்தில் /உறைவதால் கைலாசபதி என்றும் கூறப்பட் டது. அடுத்து பதிக்கு இரண்டு நிலைகள் சித்தாந்தத்திலே கூறப்ப டும், 'என்றுமுள்ள சுதந்திரமாம் இயல்பு நிலை - அது ஸ்வருப நிலை எனவும் ஆன்மாக்களின் மேல் கருணை கொண்டு உருவத்திரு மேனிகளைத் தாங்கிவரும் நிலை தடத்தநிலை எனவும், சித்தாந் தத்தில் கூறப்பட்டது. அறிவுநிலையிலே ஞானவழிபாட்டிற்கடித் தளமாகச் சொரூப நிலையும் உருவழிபாட்டிக்கடித்தளமாகத் தடத்த நிலையும் சித்தாந்தத்திலே கற்பிக்கப்பட்டன. அருவநிலை சிவதத்து வமாதலால் சக்தியுடன் கலந்து சதாசிவமூர்த்தியாக நிற்றல் அருவுரு வநிலை எனப்பட்டது. சிவம் அவதாரம் எடுப்பதில்லை நினைத் தமாத்திரத்தில் உருவத் திருமேனிகள் தாங்கும் வல்லமையுடையது என்பதனை

''நாடரிய கருணை திருவுருவமாகி....நிறுத்திடுவன் நிமலன் நினைத்த உருதானே''

எனச் சிவப்பிரகாசம் கூறியது.

'அருவாய் உருவாய் குருவாய் வரும் சக்தி எனத் திருமந்திர மும், 'அருவினால் உருவம் தோன்றி ஆங்காங்கு பாவமாகி உருவினில் உருவமாயே உதித்திடும் உலகமெலாம்'

எனச் சித்தியாரும் 'அருவமும் உருவமுமாகி அனாதியாய்ப் பல வாய் ஒன்றாய்' எனக் கந்தபுராணமும் பதியின் அனாதியான இயல் பினையும் சொரூப, தடத்தநிலைகளையும் ஆங்காங்கு அறிவித் துள்ளன. சுத்தத்துவத்திலே சிவப்பொருள் சக்தியுடன் கலந்து சடப் பொருட்களைத் தோற்றுவிக்கும் நிலைக்கு ஒத்த ஒரு விஞ்ஞான விளக்கமும் தற்காலம் சில இடங்களில் காணப்படுகின்றது.

எலக்ரோன் (Electrone) புரோட்ரான் (Protone) நியூட்ரான் (Neutrone) என மூன்று துகள்கள் இணைந்த ஒன்று பரமாணு எனப்படும். எலக்ரோனில் ஆண் தன்மையியல்பும் புரோட்ரானில் பெண் தன்மையியல்பும், நியூட்ரானில் சடமாகிய அலித்தன்மையியல்பும் அதிகமாகக் காணப்படும் எனவும் அதனால் ஒவ்வொரு அணுவின் நடுவிலும் (Newclear) அணுக்கரு ஒன்றும் அதனால் வசிகரிக்கப்பட்டு அதனைச் சுற்றி ஆண்மின்னுரு, பெண்மின்னுரு, அலியுரு என்ற பலவகைக் கோள்கள் உண்டென ஜீன்ஸ் ஆதர் போர்ட் போன்ற விஞ்ஞானிகள் பலரும் தெரிவித்துள்ளனர்.

சித்தாந்தப் பதிப்பொருளாகிய சிவத்தினில் இந்த இயல்புகள் பொருந்தி இருப்பதனை திருமந்திரமானது

'அணுவில் அணுவினை ஆதிப்பிரானை -அணுவில்
அணுவினை ஆயிரம் கூறிட்டு-அணுவில் அணுவை
அணுகவல்லார்க்கு அணுவில் அணுவை அணுகலுமாமே'

எனக் கூறுவதனாலும், 'அருமறையன் அசத்தானை அணுவை யார்க்கும் தெரியாத தத்துவனை' எனவும் 'ஆணாகிப் பெண்ணாகி அலியாய்ப் பிறங்கொளியாய்'' எனத் திருவாசகம் கூறுவதனாலும் இவை சிந்தனைக்குரிய கருத்துக்களாகக் காணப்படுகின்றன. வெளி என்ற ஆகாயபூதம் சிதம்பரம்-பரவெளிரகசியம் எனக்கூறப்படும். அண்டத்தின் முதல் தோற்றம் பரவெளி என்றே விஞ்ஞானமும் கூறும். வெளியிடமிருந்து வளிதோன்றியது, வளியிலிருந்து (தேயு) அக்னியும் அக்னியிலிருந்து நீரும் நீரில் இருந்து நிலம் எனப்படும் பிருதுவி பூதமும் தோற்றம் பெற்றதை உலக உற்பத்திக் கொள்கை எடுத்துக்காட்டும். ஆதலால் வெளி அம்பலம் எனவும் இருதயம் எனவும் அம்பலத்திலே ஆட்டம் என்பது அணுக்களின் சலனங்கள் எனவும் அதனையே சிதம்பரவெளியிலே நடராஜ தத்துவமாகவும் சித்தாந்தம் கற்பித்தது. அங்கிருந்து விரிவடையும் ஐம்பூதவிரிவுகள் நடராஜரின் பஞ்சகிருத்தியம் எனப்படும் ஐநதொழிலாகவும் விமர்சிக்கப்பட்டதெனலாம்.

எல்லாப் பொருட்களையும் தனக்குள் அடக்கி வைத்திருக்கும் பொருளாகவும் மிக நுண்ணிய பொருளிலும் தான் அடங்கியிருக்கும் தன்மையுடையது சித்தாந்தத்திலே 'சிவம்' எனப்பட்டது. அந்த சக்தி அணுவுக்குள் அணுவாகத் தங்கியிராவிட்டால் எந்தப் பொருளும்



நிலைகொள்ளாது என்பதனால் போலும்-புறத்தேமட்டுமல்ல அகத்தேயும் இருப்பது சிவம் - அவற்றிலே கலந்தும்-கடந்தும் இருப்பதும் சிவம் எனச் சித்தாந்தம் கொண்டிருக்க வேண்டும். சைவசித்தாந்தத்திலே பதிப்பொருளின் சொரூப நிலையானது தனிச்சிறப்புவாய்ந்ததொரு சிந்தனையெனலாம். ஏனைய தத்துவங்களில் விமர்சிக்கப்பட்டவாறு சித்தாந்தப்பதி அருவப் பொருளோ அன்றி நிர்குணமானதோ அல்லது சூன்யமானதாகவோ, ஒன்றுமேயில்லாத வெறுமை நிலை என்றோ கூறவிரும்பவில்லை. மாறாக அதன் ஸ்வருபம்' எனப்படும் சுயமானநிலை 'சச்சிதானந்த சிவம்' எனப் பெயர்பெற்றுள்ளது. சத் என்பது என்றுமுள்ளது. சித் என்பது அறிவே வடிவமானது. ஆனந்தம் என்பது பேரானந்தமயமானது என்பதாகும், ஆதலால் சித்தாந்தப் பதிப் பொருளின் சொரூபநிலை என்பது என்றுமே மேலான சச்சிதானந்தநிலையாக சிறப்பிக்கப்பட்டுள்ள 'சிறப்பிலக்கணம் வாய்ந்த நிலை' எனக் கருதுவதே மிகவும் பொருத்தமானதெனலாம். ஏனெனில் 'இன்பம்' என்ற சொல்லிற்கு எதிர்ப்பதமுண்டு. ஆனால் 'ஆனந்தம்' என்பதற்கு எதிர்ப்பதம் கிடையாது. அது 'பேரானந்தம்' அல்லது 'சச்சிதானந்தம்' என்பதே சைவசித்தாந்தப் பொருளாகின்றது. 'அகண்டகாரச் சச்சிதானந்தப் பெருவெளி' என்றார் தாயுமானவர்.

## சிவப் பொருளும் சக்தியும்

தனிமுதற்பொருளாம் சிவமாம் தன்மையைவிட்டு நீங்காத ஆணை எனப்படும் ஆற்றலே சித்தாந்தத்தில் சக்தி எனப்பட்டது, இதனை ''ஆணையில் நீக்கமின்றி நிற்குமென''சிவஞானபோதம் குறிப்பிடும், சிவப்பொருளின் நெஞ்சமானது அறிவாற்றல் அல்லது ஞானசக்தி எனவும் அதன் அறிவுப்பெருவெளியாகிய வனப்பாற்றல் பாராபரை அல்லது பராசக்தி எனவும் நடப்பாற்றல் - ஆதிசக்தி எனவும், அன்பாற்றல் இச்சாசக்தி எனவும், தொழிலாற்றல் கிரியாசக்தி எனவும் கூறப்பட்டிருத்தலால் சிவப்பொருளின் அனைத்து அம்சமும் 'ஆற்றல் மயம்' எனச் சித்தாந்தம் உருவகித்துக் காட்டியிருக்கின்றது. இதனை

'சக்திதான் நாதமாகி தானாகும் சிவமுமாகி சக்திதான் ஆதி
யாகும்....சக்தியும் சிவமாகும் - சக்திதான் சத்தனுக்குச்
சக்தியாகும்'

எனச் சித்தியார் குறிப்பிட்டது. அதனால் உருவத்திருமேனி களை எடுக்குமிடத்தும் சிவன் சக்தியுடன் சேர்ந்து ஐந்தொழில் ஆற்றுவதும் புலப்படுத்தப்பட்டது.

ஆதலால் அருவமாகிய சிவம் உருவம் கொள்வதற்குச் சக்தியின் ஆற்றலே காரணம் என்று சித்தாந்தம் கூறும். உதாரணமாகத் தந்தை யிடமுள்ள அருவமாகிய கருவினை உருவத்திற்குக் கொண்டுவரு வது தாயாகிய சக்தியாகும். அவ்வாறே அருவுருவப் பொருளாகிய சிவமும் ஆற்றலாகிய சக்தியுடன் சேரும் போது உருவத்திருமேனி களைப் பெறுகின்றது என்பது பெறப்படும், அதனால் சிவமும் சக்தியும் பிரிப்பின்றி நின்று தொழிற்படும் நிலையினை

''தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத் தரும் சக்தி பின்னமி லான் எங்கள் பிரான்''

எனத் திருவருட்பயன் என்ற நூலில் எடுத்துக்காட்டப்பட்டது. ஆத லால் சிவமும் சக்தியும் நெருப்பும் சூடும்போல - சூரியனும் கதிர்க ளும் போல என்றும் ஒருமைப்பட்டு அத்துவிதமாகி நிற்கும் நிலை சித்தாந்தத்திலே சிறப்பித்துக் கூறப்பட்டது.

## முப்பொருட்களின் உட்பொருள்:

'முப்பொருட்தத்துவம்' என்ற மெய்ப்பொருளியலானது சித்தாந்தத்திலே எங்ஙனம் நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டது என்பதனை அறிவதும் இன்றியமையாததாகும். சித்தாந்தம் தனது முப்பெரும் கோட்பாட்டை சமூகமயப்படுத்தும் ஒரு நிலையமா கவே சிவாலயங்களையும் அதன் ஒழுக்க நெறிகளையும் அமைத்துக் கொடுத்துள்ளது. உதாரணமாக ஒரு விடயத்தை இங்கு குறிப்பிட லாம். ஆலயங்களிலே சிவத்தை நோக்கியபடி அமர்ந்திருக்கும் நந்தியும் அதற்கு முன்பாவுள்ள பலிபீடமும் முன்புறம் கருவ றையிலேயுள்ள சிவலிங்கமும் பதி, பசு, பாசம் என்ற முப்பொருட் தத்துவத்தையே விளக்கி நிற்கின்றன. நந்தியாக உருவகிக்கப்பட்ட ஆன்மா தனது மும்மலச்சேர்க்கையினால் உண்டான பாசங்களை பலிபீடத்திலே பலியிட்டு எக்காலமும் சிவத்தைச் தரிசித்த வண் ணம் சிவானந்தப் பேற்றிலே திளைத்திருக்கவேண்டும் என்ற உண்மையினையே இவ்வமைப்புக்கள் புலப்படுத்துகின்றன.

ஆலயங்களிலே நடைபெறும் மகோற்சவங்களும் சித்தாந்தப்



பெரும் பொருளையே உணர்த்துவனவாகும். கொடியேற்றமாவது கொடித்தம்பமாகிய ஆன்மா அதிலே சுற்றியிருக்கும் பாசமாகிய கயிற்றினைவிடுத்து கொடிச்சீலையின் மேல் எழுதப்பட்டிருக்கும் சிவப்பொருளுடன் இணையவேண்டும் என்பதுதான் அவற்றின் ஒரு விளக்கமாகும். அவ்வாறே தேர்சங்காரத்தினையும் அதாவது துஷ்டநிக்கிரகத்தினையும் தீர்த்தமானது சிஷ்ட பரிபாலனமாம் அனுக்கிரகத்திலே ஆன்மாக்கள் மல அழுக்கு நீங்கி சிவானந்த வெள்ளத்தில் திளைத்து அருள் பெறுதலையும், திருக்கல்யாண மாவது அருள் பெற்ற ஜீவாத்மாவும் பரமாத்மாவும் பேரானந்த நிலையிலே கலந்திருத்தலான வீடுபேற்று நிலையினையும் சுட்டுவ தாகவே கருதவேண்டும். இவ்வாறு பதிப்பொருளின் ஐந்தொழில் களை உள்ளடக்கியவையாகவே மகோற்சவ தத்துவங்கள் அமைந்தி ருப்பதும் இங்ஙனமாகப் பெறப்பட்டன. அதே சமயம் மகோற்சவ மானது இறைவனின் ஐந்தொழில்களை உணர்த்துவதாக இன்னோர் விளக்கமும் காணப்படும்.

சித்தாந்தப் பொருளுண்மைகள் புராணக் கதைகளுடன் சமூகத் திலே நிலை பெறச் செய்யும் முயற்சிகள் மேற்கொண்டமைக்குக் கந்தபுராணம் ஒரு சிறந்த முயற்சி எனலாம். கந்தபுராணத்திலே காசிபர் உபதேசம் என்ற பகுதி குறிப்பாக முப்பொருளுண்மை யினைச் சிறப்பாக விளக்கும் பகுதி எனலாம். ஆங்கு '

'சான்றவர் ஆய்ந்திடத் தக்கவாம் பொருள்- மூன்றுள மறையெலாம் மொழிய நின்றன. ஆன்றதோர் தொல்பதி ஆருயிர்த்தொகை, வான்திகழ் தளை என வகுப்பர் அன்னவே''

எனப் பதி, பசு, பாசம் எனப்படும் இம் மூன்று பொருட்களின் உண்மைகளும் சான்றோர்களால் ஆராய்ந்து கண்டறிய வேண்டிய உண்மைகள் எனக் கச்சியப்பர் விளக்கியுள்ளார். சாதாரணமான கட்குக் கடினம் என்பதனாற் போலும் கந்தபுராணத்தின் பதியாக முருகப்பெருமானும் மும்மலமுடைய பசுக்களாக மூன்று அசுரர்க ளும், பாசமாக மாயையும் விளக்கப்பட்டன. அசுரர்கட்கு வரமளித்த சிவம் தான் கொடுத்தவரத்தை தானே நிராகரிப்பது நீதியற்றதென்பத னாலும் பாசங்களில் மூழ்கி அரசுரர்கள் கொடுமைகளை நிகழ்த்தி வந்ததால் தண்டிக்கப்பட வேண்டியவர் என்பதனாலும் தானே முருகப் பெருமானாக உருவம கொண்டனன் எனக் கந்தபுராணம் இவ்வுண்மையினைப் பின்வருமாறு கூறும்.

''ஈசனே ஆடலால் மதலையாகினான் காண் அலகிலா
அவன் ஆறுமுகத் தன்மையால் அறி நீ - பேசில் ஆங்கவன்
பரனொடுபேதகமல்லன்...மணியிடைக் கதிர்வரும் திறம்
போல்'

என்பது அத்திருப்பாடலாகும். யாழ்ப்பாணக் கலாச்சாரம் ''கந்தபுராண கலாச்சாரம்'' என்றார் பண்டிதமணியவர்கள். கந்தபுரா ணத்திற்கும் சைவசித்தாந்தத்திற்குமுள்ள இறுக்கமான இணைப்புத் தான் அத்தகைய சிறப்பிற்கு ஓர் காரணமென்பது இத்தாற் புலனா காமற்ப்போகாது.

## உசாவிய நூல்கள்


| | |
|---|---|
| சிவஞான போதம்., | சிவஞான சுவாமிகள் சிற்றுரை, ஆறுமுகநாவலர் பதிப்பு, சென் னை, சர்வதாரி வருடம் |
| சிவஞானசித்தியார்., | திருவிளங்கம். மு., புத்துரை, கூட்டுறவுத் தமிழ் நூற் பதிப்புக் கழகம், யாழ்ப்பாணம், 1971 |
| சிவப்பிரகாசம்., | திருவிளங்கம். மு., புத்துரை, கூட்டுறவுத் தமிழ் நூற்பதிப்புக் கழகம், யாழ்ப்பாணம், 1974. |
| சிவஞான மாபாடியம்., | சிவஞானமுனிவர், சைவசித் தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1968. |
| சிந்தாந்தச் செழும்புதையல்., | கந்தையா. மு., ஈழத்து சித்தாந்த வித்யா பீடம், யாழ்ப்பாணம். |
| சித்தாந்தத் தெளிவியல்., | அருணைவடிவேல் முதலியார்., எஸ். தருமபுர ஆதீனம், 1968. |
| திருவருட்பயன்., | சிவபாதசுந்தரனார் உரை |
| திருமந்திரம்., | திருப்பனந்தான் காசிமட வெளி யீடு, ஸ்ரீ வைகுண்டம், 1968. |
| திருவாசகம்., | அருளம்பலவனார் உரை. |
| சித்தமருத்துவம்., | டாக்டர். குமாரசாமி முதலியார். |
| உடற்தத்துவம்., | டாக்டர். நடராஜன், |
| பௌஷ்கராகமம்., | சண்முகசுந்தர முதலியார் (தமி ழில்) சென்னை, 1981 |





| | |
|---|---|
| Matangaparameshwaragama; Vidyapada | Edited by. N.R. Bhart, French Institute, Indology, pondicheri, 1961. |
| The Rouravagama, Vidya and Kiriyapada with English note | Edited by : N.R. Bhart, French Institute, Indology, pondicheri, 1961. |
| Mirugendragama, (Vidya and Yogapada), | Sivagama siddhantaparipalana sangam, Devakottai, 1928. |
| Meta phisis of saivasiddhanta, | K. Subramaniyapillai, Madras, 1965. |

# சைவசித்தாந்தக் காட்சியளவை

சைவசித்தாந்தம் முப்பொருள் உண்மையினைச் சாதிப்பது எனப்படும். இறை, உயிர், தளை என்பன அம்மூன்று உண்மைப் பொருள்களாகும்.

''விளையாததோர் பரிசில்வரு பசு பாச வேதனை ஒண்தளை யாயின தவிர அவ்வரு தலைவன்...''

என இவ்வுண்மைப் பொருள்கள் பற்றிச் சம்பந்தர் கி.பி. 7 ம் நூற்றாண்டிலே தேவாரப்பதிகத்திலும் எடுத்துக்காட்டினார். கி.பி. 15 ம் நூற்றாண்டிலே எழுந்த கந்தபுராணமும் ''சான்றவர் ஆய்ந்திடத் தக்கவாம் பொருள் மூன்றுள. ஆன்றதோர் தொல்பதி ஆருயிர்த்தொகை வான்திகழ்தளை என வகுப்பர் அன்னவே'' எனச் சைவ சித்தாந்தத்தின் அரிய உண்மைப் பொருட்கள் மூன்றும் சான்றோரால் ஆராய்ந்து அறியத்தக்கவை என அறுதியிட்டுரைத்தது. இவ்வாறாகச் சித்தாந்தம் கூறும் உள்பொருட்களை ஆராய்ந்து அறிதற்கு உதவும் அளவுகோல்களாக 'அளவையியல்' என்னும் கொள்கையானது சித்தாந்தத்தின் முதன்மைக்கூறுகளில் ஒன்றாகக் கருதப்படுகின்றது.

தத்துவத்தில் அளவை என்பது அறிவினை அளக்கும் கருவி; அல்லது உள்பொருளை அளக்கும் அளவுகோல் எனப்படும். இவை அளவைப் பிரமாணங்கள் எனவும் கூறப்படும். பிரமாணம் என்பதன் பொருள் அளத்தல்; பிரமாதா என்பது அளப்பவன்; பிரமேயம் என்பது அளக்கப்படும் பொருள் என அமையும். அதாவது பிரமாணம் என்னும் அளவையினால் அளந்து அறியப்படும் பொருள் பிரமேயம் எனப்படும். ஒவ்வொரு பொருளையும் அளப்பதற்கு உலகிலே ஒவ்வொருவிதமான அளவைகளுண்டு. எடுத்துக்காட்டாக புடவையினை அளக்கும் கருவி மீற்றர் எனவும் பொருட்களை அளவிடும் அளவையினை கிலோகிறாம் எனவும், திரவங்களை அளவிடும் கருவி லீற்றர் அளவை எனவும் கூறப்படும். அவ்வாறே அறிவினை அல்லது 'உள்பொருளை' அளவிடும் கருவியானது மெய்யியலிற் 'பிரமாணம்' அல்லது 'அளவை' எனப்படுகின்றது.

திண்மத்தை லீற்றர் அளவையினாலோ திரவத்தை மீற்றர் அளவை கொண்டோ எவ்வாறும் அளக்க முடியாதோ அவ்வாறே 'உண்மைப்பொருள்' பற்றிய அறிவினை அதனை அளவிடும்



பிரமாணங்கள் ஆகிய அளவைகள் மூலமாக அளந்தறியலாமே அன்றி விஞ்ஞானபூர்வமான அளவைகள் மெய்ப்பொருளினை அளவிடும் பூரண அளவைக் கருவிகளாகாவாம்.

## மூவகை அளவைகள்

சைவசித்தாந்தத்தின் மெய்ப் பொருட்களை அளந்தறியும் கருவிகளை 'அளவை இலக்கணம்' என்னும் பகுதியில் சிவஞான சித்தியார் வகுத்துத் தந்துள்ளது. 'அளவை என்பது அளந்தறியப் படுவது அஃது எவ்வாறாமெனில் -

''எண்ணல் எடுத்தல் முகத்தல், நீட்டல் எனும் நால்வகையள வினால் பொருட்களை எண்ணலாம். பக்குவான்மாக்கட்கு அளந்தறிவித்தற் பொருட்டு - அளவைப் பிரமாணம் முதல் கூறியதென்க''

எனஇதனைச் சித்தியார் அறுவர் உரையாசிரியர்களில் ஒருவரான மறைஞானசம்பந்தர் எடுத்து விளக்கினார். எனவே ஆன்மாவானது அறிவினைத் தேடி ஓடுகின்ற முறைமையே 'அளவைப் பிரமாணம் எனச் சிவஞானசித்தியார் கூறியது.

சித்தாந்த அளவையியல் பற்றிக் கூறும் நூல்களில் சிவஞான சித்தியார் தலையாயது. ஆங்கு பாயிரத்தை அடுத்து வரும் ஏழு முதல் பதினான்கு பாடல்களில் சித்தாந்த அளவைப் பிரமாணம் பற்றி நன்கு விளக்கப்பட்டுள்ளது. இவை தவிர மெய்கண்ட சாத்தரங்களில் சங்கற்பநிராகரணமும், சிவாக்கிரகயோகிகளது சிவநெறிப்பிரகாசமும் தத்துவப் பிரகாசரது தத்துவப் பிரகாசமும், சத்யோஜோதியினுடைய பரமோட்ச நிராசகாரிகை என்னும் வடமொழி நூலும் சித்தாந்த அளவையியல் பற்றிக் கூறும் ஏனைய நூல்களில் குறிப்பிடத் தக்கனவாகும். அளவைப் பிரமாணத்தின் சிறப்பினைக் கூறுமிடத்து

''பண்ணிலார்க்கு இல்லாப் பாட்டின் பயன் போன்றும் -
கண்ணில்லார்க்கு இல்லாக்கவின் தோற்றம் - எண்ணில்லா
அன்சொல்லளவை அறியார்க்கில்லை - செஞ்சொல்லள
வின் சிறப்பு''

என அளவைப் பிரமாணம் அறியாதார் அரும்பொருட் துணிபினை அறியும் தன்மை வாய்ந்தவராகார் எனப்பட்டது.

அளவைகளாவன 'காண்டல்' கருதல், உரை, அபாவம், பொருள், ஒப்பு, ஒழிபு, உண்மை, ஐதிகம், இயல்பு எனப் பத்து வகை எனக் கூறினும்

"அவையெலாம் காண்டல் கருதல் உரை என்றிம் மூன்றினில் அடங்கிடும்"

எனச் சைவசித்தாந்தம் பத்து அளவைகளையும் மூன்று அளவைகட்குள் அடக்கிக் கூறியது.[1] அபாவமும் இயல்பும் காட்சிப் பிரமாணத்திலும், பொருள், ஒழிபு, உண்மை, ஒப்பு முதலியன அனுமானத்திலும், ஐதிகம் ஆப்தவாக்கியத்திலும் அடங்குவதனால் அளவைப் பிரமாணம் காட்சி, கருதல், உரை என மூன்று வகைப்படும் எனச் சித்தாந்தம் விளக்கியது. அளவையியலானது அறிவாராய்ச்சிக்குச் சைவசித்தாந்தம் அளிக்கும் முதன்மையினை எடுத்துக்காட்டும். ஆத்மஞானம், மந்திரஞானம், தந்திரஞானம் போன்றனவும் அறிவுத் தொகுதியில் அடங்குவனவாக அகராதியும் காட்டும்.[2]

## நான்குவகைக் காட்சியளவை

மேற் கூறிய மூன்று பிரமாணங்களிலும் காட்சிப் பிரமாணமே முதலாவதாக இடம் பெற்றுள்ளது. இது 'பிரத்தியட்சம்' என வட மொழியில் கூறப்படும், அதாவதுநேரில் நேருக்கு நேர் காண்பது; அக்ஷம் என்றால் 'கண்' என்பது பொருளாகும். கண்ணால் காண்பது காட்சி. 'தரிசனம்' என்பது அதன் இன்னோர் வடமொழிப் பெயராகும். 'தத்துவம்' என்பது இந்திய மெய்யியலிலே 'தரிசனம்' என்னும் சிறப்புப் பெயரால் அழைக்கப்படும். 'திருஷ்டி' என்னும் வடமொழிச் சொல்லில் இருந்து 'தரிசனம்' என்ற சொல் அமைந்தது. 'திருஷ்' என்றால் பார்வை அல்லது காட்சி எனப்பொருள்படும். 'என்றுமுள்ள உண்மைப்பொருட்கள்' (Eternal Things) எனப்படுவனவற்றினைத் தமது ஞான திருஷ்டியினாலோ அல்லது ஞானக்காட்சியினாலோ எவையெனக் கண்டுணர்ந்து உலகத்தவர் உய்யும் வண்ணம் அவர்களால் அறிவிக்கப்பட்ட 'உண்மைப்பொருட்களினியல்பு' தரிசனம் அல்லது தத்துவம் என இந்திய மெய்யியலில் தனிச் சிறப்பினைப் பெற்றது.

ஆதலால் 'காட்சி' என்னும் அளவை சைவசித்தாந்தத்திலும் உயர்வான அளவைப் பிரமாணமாக ஏற்கப்பட்டது. சைவசித்தாந்தத்திலே காட்சிப் பிரமாணம் நான்கு வகையாக உரைக்கப்படும்.



முதலாவது நிர்விகற்பக்காட்சி - இது ஓர் பொருளை உள்ளது உள்ளவாறு அப்படியே சந்தேக விபரீதமின்றிக் காண்பது: இரண்டாவது ஐயக்காட்சி - இன்னோர் பொருளிலே காணும் ஓர் சாயலை வேறு ஓர் பொருளில் கண்டு விட்டால் அது எப்பொருளோ? குற்றியோ மகனோ? கட்டையோ கள்வனோ? கானலோ நீரோ? சிப்பியோ வெள்ளியோ? கயிறோ பாம்போ? என இவற்றில் எதுவெனத் துணியாது திகைத்து நிற்றல் ஐயக்காட்சி எனப்படும்.

அடுத்து விபரீதக்காட்சி அல்லது திரிபுக்காட்சி குற்றியை மகன் எனவும், கயிற்றினைப் பாம்பெனவும் முடிவு செய்யும் அறிவு விபரீதக்காட்சி அல்லது திரிபுக்காட்சியால் வரும் அறிவாகின்றது. அதாவது உண்மை ஒன்றாக இருக்க அதனை இன்னொன்றாகப் பிறருக்குரைக்கும் அறிவு இதுவாகும். இன்னோர் வகையில் கூறினால் குருடர் யானை பார்த்த கதை போல புறக்காட்சியினால் வரும் விபரீத அறிவாக இது காணப்படும், கண்ணால் கண்டவற்றினையே பிறிதொன்றாக உணரும் அறிவு. குருடாக இருப்போர் கூட நேர்க்காட்சியில்லாது 'தொடுதல்' என்னும் உணர்வினாலேயே யானை என்பது சுளகுபோல என்றும், உலக்கை போல எனவும், தூண்போல எனவும் அவரவர் உணர்விற்குத் தக உரைப்பதாகும். ஆனால் விபரீதக்காட்சியிலே நேரில் கண்டதையே பிறிதொன்றாக உணர்ந்துரைப்பது விபரீதமான அறிவினைத்தரும் எனப் புகட்டப் பட்டது.

நான்காவது சவிகற்பக் காட்சியாவது பெயர், குணம், சாதி, பொருள், கன்மம் என்னும் ஐந்து வேறுபாடுகளுடனும் அப்பொருளினை உண்மைத்தன்மையினோடு அறிந்து கொள்ளும் அறிவாகும். அதாவது கயிறுதான் - பாம்பல்ல என்ற ஐய உணர்வு, விகற்ப அறிவு யாவும் நீங்கப் பெற்றுத் தோற்றத்தில் பாம்பு போன்று தடித்து நீண்டதாக உள்ள கயிற்றுத்தொகுதி என அதன் முழுமையை அறியும் காட்சியை நல்கும் அறிவு சவிகற்பக்காட்சியாகும்.[3]

## விபரீதக் காட்சியின் விளைவு:

இவ்விடத்துப் பெயர், குணம், சாதி போன்ற வேறுபாடுகள் என்னுமிடத்து 'சாதி' என்பது சித்தாந்தத்திலே ஊழின்வலி; பிறவிப்பயன் என வற்புறுத்தப்படுவதாக ஒரு கருத்துக் கூறப்படுவதுண்டு. 'சாதி' என்பதற்குச் சித்தாந்தமும் சிவாகமங்களும் 'இனம்'

என்றே பொருள் கொண்டுள்ளன. 'சாதி' என்பது ஓரினத்தின் பலபொருளுக்குப் பொதுவானதோர் தன்மை' என்றே சித்தியாருக்குப் புத்துரை எழுதிய ஆசிரியரும் குறிப்பிட்டுள்ளார்[4] பரமோட்ச நிராசகாரிகையிலும்

> ''பொருட் தன்மை தன்மையில் ஒரே விதமான அவயவப்ப குப்பின் வேறுபாடே சாதீயமாகக் கருதப்படும் வேறுவிதமா கக்கருதுவது பொருந்தாது''

என விளக்கப்பட்டுள்ளமையும் இதற்கு நல்லதோர் எடுத்துக்காட்டாகும். 'சாதி என்பதன் பொருள் தன்மை, இயல்பு என்றே இங்கும் கூறப்பட்டிருக்கின்றது.[5]

உலகிலே உள்ள சடப்பொருள் முதல் சகல ஜீவராசிகளிடமும் இனப் பாகுபாடு இயற்கையாக அமைந்திருப்பதனை யாவரும் உணரமுடியும், மரங்களின் இயல்புகளை நோக்கினால் மாமரம், தென்னை, பனை, ஆல், அரசு எனப் பல்வேறு மரவகைகள் காணப்படும். அவற்றுள்ளும் மாமர இனங்களிலேயே சேலம், கோவா, அம்பலவி, விலாட் இனம் எனப் பலவிதமான வேறுபாடுகள் நிலவுகின்றன. பறவையினம், விலங்கினங்களும் இதற்கு விதிவிலக்கல்ல. சிறுத்தைப்புலி வரிப்புலி, செம்மறியாடு, வெள்ளாடு என்பன போன்று மனித இனத்திலும் ஆசியர், ஆபிரிக்கர், அமெரிக்கா, கறுப்பர், வெள்ளையர், மங்கோலியர் என இன வரிசை வேறுபாடுகள் இயல்பானவையாகக் காணப்படுகின்றனவே தவிர, அவற்றிடையே ஏற்றத்தாழ்வுகளை மனிதன் ஒருவனே கற்பித்துக் கொண்டு பிரிவினை பேசுவது வளர்ச்சியடைந்த நாகரிக சமுதாயத்தின் இழிவான நிலைப்பாடுகளில் ஒன்றெனவே கருதவேண்டும்.

> ''பசுத்தன்மை அல்லது மலச்சேர்க்கை கூடும்போதே ஜாதித் தன்மை ஏற்படுமே தவிர ஆன்மாவிற்கு ஜாதீயம் கிடையாது''

என்பதனைப் பரமோட்ச நிராசகாரிகை வலியுறுத்தும்.[6] அக்காரணம் பற்றியே கரிக்குருவிக்கும், முள்ளிச் செடிக்கும், நாரைக்கும், சிலந்திக்கும், யானைக்கும் முத்தி கிடைத்த நிகழ்வுகளைச் சித்தாந்தக் கோட்பாடும் புலப்படுத்தியது. இங்ஙனமாகச் சாதி உடலுக்கேயன்றி ஆன்மாவிற்கல்ல என்பதும் பெறப்படும். ஆதலால் வேறுபாடுகள் குண இயல்புகட்குக் கொடுக்கும் விளக்கமும் விளக்கமின்மையாலும் ஏற்படுவனவே தவிர சொரூபவேற்று



மையால் நிகழ்வனவல்லாம். ஞானச்சமநிலை ஏற்பட்டால் சைதன்யமற்ற சடப்பொருளுக்கும் இது நிகழும்[7] என்பதும் இங்ஙனம் காட்டப்பட்டது. ஞானிகளிடத்தும், பேரறிவாளிகளிடத்தும் கூட ஞானச்சம நிலைகாணப்படும் என்பதற்குப் பெரிய புராணமும் ஓர் எடுத்துக்காட்டாகும்.

எனவே விபரீதக்காட்சி, ஐயக்காட்சி தொடர்பான புலனறிவானது இத்தகையதொரு நிலைமாற்றத்தை ஏற்படுத்தும் காட்சியறிவாகச் சித்தாந்தத்தில் கருதப்படுகின்றது. புலனாகும். ஆதலால் சவிகற்பக் காட்சியிலே மனித அறிவானது சந்தேக விபரீதங்களைக் கடந்த ஒரு பொருளின் அறிவினை அதன் முழுமையான பண்புகளுடன் கண்டறிந்து கொள்ளும் நிலையெனத் தெளிவுபடுத்துகின்றது. ஆன்மசிற்சக்தியால் அறியும் குற்றமற்ற காட்சிப்பிரமாணம் சவிகற்பக்காட்சி எனப்பட்டது. அனுமானப் பிரமாணமாவது நேர்காட்சியில் அறியப்படாது மறைந்து நின்ற ஒரு பொருளை அதனோடு நீங்காது உடனுறையும் ஒரு ஏதுவைக்கொண்டு அறியும் ஆன்மசிற்சக்தியாகும். புகையினைக் கண்டதும் மலைக்குப் பின்னே நெருப்பு உண்டு என அனுமானிக்கும் அறிவாகும்.

## ஆன்ம சிற்சக்திக் காட்சி :

எனவே காட்சிவிட்டதைக் காட்டுவதாக அனுமான அறிவு அமையும். இவையிரண்டு பிரமாணங்களாலும் அறியமுடியாது அதற்குள் அடங்காது நிற்கும் பொருள்களை 'ஆப்தவசனம்' கொண்டு அறியச் செய்யும் ஆன்மசிற்சக்தி ஆகமப் பிரமாணத்திற்கேதுவாக நிற்கும். எவ்வாறெனில் அமெரிக்கா, அவுஸ்ரேலியா போன்ற நாடுகளை நேர்காட்சியில் கண்டு அறியமுடியாதவிடத்து - அங்கு சென்று பார்த்து - அறிந்து வந்தவர்கள் சொல்லும் வாசகங்களைக் கொண்டு - படப்பிரதிகளைக் கொண்டு அறியும் அறிவு ஆப்தவசனப் பிரமாணம் எனப்படும். இவ்வாறு ஆப்தவாக்கியங்களைக் கொண்டு அறியும் ஆன்மசிற்சக்தி ஆகமப் பிரமாணமாகும்.

அனுமானப் பிரமாணத்திற்குக் கூட அதனை முன்னரே பிரத்தியட்சம் உறுதிசெய்வதாகவுள்ளது. புகையினால் அனுமானம் செய்யப்பட்ட அக்கினியானது அனுமானம் செய்பவரால் முன்னரே காட்சியாகக் காணப்பட்டுள்ளது. ஆதலால் காட்சிக் கொள்கையுடன் ஒற்றுமையிருப்பது பற்றியே அனுமானத்திற்குப் பிரமாணத்தன்மை

இருப்பது போல பிரத்தியட்சமாகப் பார்க்கப்பட்டதற்கும் ஒற்றுமை வேண்டும் எனப் போக காரிகை கூறும்.[8] மதங்காகமத்திலும் இவ் வாறு சொல்லப்பட்டதால் அறியப்படாத பொருளை அறிவிப்பது பிரமாணம் எனச் சைவசித்தாந்தம் விளக்கி நிற்கின்றது.

மேற்குறிப்பிட்ட நான்கு விதமான காட்சிக் கொள்கையினை மேலும் நான்கு விதமாகச் சித்தாந்தம் விபரிக்கின்றது. அவையாவன இந்திரியக்காட்சி, அல்லது வாயில் காட்சி, மானதக்காட்சி, தன்வேதனைக்காட்சி, யோகக்காட்சி எனப்படும். அளப்பவனாகிய ஆன்மாவோடு அறிவாகிய சிற்சக்தி வாயிலாகிய மனம் என்னும அந்தக் கரணத்தாற் செலுத்தப்படும் கண் முதலிய ஞானேந்திரியங் களைப் பொருந்தி ஐம்பூதங்களையும், உருவம் முதலிய தன்மாத் திரைகளையும், பஞ்சவிடயங்களையும் இந்திரியங்கள் எனப்படும் ஐம்புலன்களையும் சார்ந்து அறியும் அறிவு இந்திரியக் காட்சியாகிய நிர்விகற்ப அறிவாகும். எனவே இந்திரியக்காட்சியினுள் ஐயக் காட்சி, திரிபுக்காட்சி யாவும் அடங்குவதனால் அக்காட்சியினால் பெறப்படும் அறிவு நிர்விகற்ப அறிவெனப்பட்டது.

## சவிகற்பக் காட்சி :

அடுத்துப் புத்தி தத்துவத்தின் கண் இந்திரியங்கள் பொருந்தி நின்று சந்தேகவிபரிதக் குற்றங்களாகிய மயக்கமின்றிப் பெயர் முதலிய விகற்பங்களுடன் அறியும் அறிவு மானதக்காட்சி எனப்படும். இது சவிகற்பக் காட்சியினால் உண்டாகின்றது இந்திரியங்களினால் அறியும் அறிவு பற்றி 'பொறியின்றி ஒன்றும் உணராத புந்தி' எனத் திருவருட்பயன் இதனை விபரித்தது, புலக்காட்சி வழி வரும் இந்திரியங்களினால் பெறப்பட்ட அறிவு நிர்விகற்பகாட்சியினால் விளைந்த நிர்விகற்பமான அறிவாதலினால் அதனைத் திருக்குறளும் 'பொறிவாயில் ஐந்தவித்தான் பொய் தீர் ஒழுக்கம்' என சவிகற்பமான அறிவாம் மானதக்காட்சியையும் கடந்து செல்பவர்கள் 'நெறி நின்று நீடுவாழ்வார்' என உரைத்தது.

அத்துடன் 'நான்' என்னும் அகங்கார அறிவு இந்திரியங்களில் ஒன்றில்லாதிருப்பினும் நிகழும். ஆதலால் 'அகங்காரம்' என்னும் தத்துவத்திலிருந்து தன்மாத்திரைகள், ஞானேந்திரியம், ஐம்பூதங்கள் என்பன உண்டாகின என்பது புலப்படும்.[9] அதனால் மானதக்காட்சி யானது இந்திரியங்களாலுண்டான நிர்விகற்ப அறிவையும் கடந்து புத்தி தத்தவத்தைச் சென்றடைதலால் குறித்த ஒரு பொருளினை



அதன் பெயர் முதலிய வேறுபாடுகளுடன் அறியும் சவிகற்ப அறிவு புத்தி தத்துவத்தைப் பற்றுக்கோடாகக் கொண்டு நிகழ்வதாகச் சித்தியார் கூறியது.[10] எனவே புத்தியினுடைய கூர்மை முதலிய வியாபாரத்தால் புத்தியினுடைய மற்றொருபாகமான குணத்துடன் கூடிய அகங்காரம் உண்டானது. ஆகவே மனம், புத்தி, அகங்காரம் மூன்றும் அந்தக் கரணங்கள் எனச் சித்தாந்தம் இவற்றினை வகுத்து விளக்கியது.

புத்தி தத்துவ விருத்தியின் வாயிலாகவே புருடர்களாகிய மனிதர்கட்குப் போக்கியப் பொருள்களில் அராகம் என்னும் தத்துவம் விருப்பினை உண்டாக்கின்றது. 'புருடனுக்கு ஆசையை உண்டாக்குவது எதுவோ அதையே அராக தத்துவம் என்பர். அராகம் வேறு வைராக்கியமில்லாத இலக்கணமுடைய புத்தி தத்துவம் வேறு' எனப் போககாரிகை இதனை வேறுபடுத்திக்காட்டும்.[11] அராகத்திற்கும் மேலுள்ள தத்துவமே 'வித்தை' எனப்படும் வித்யா தத்துவமாகும். புத்தியானது புருடனுக்குத் தன்னையும் விளக்கி ஏனையவற்றையும் விளக்கும் பிரகாசரூபமாக இருப்பதனால் புத்தியானது தீபம் போல ஒரு கருவியாக இருப்பதனால் வித்தை அங்கு தொழிற்படுவதில்லை. அராகத்தின் மூலம் புத்தி தொழிற்படு வதனால் புத்தி தத்தவமானது தத்துவங்களை விளங்கிக் கொள்ளும் ஆற்றலை அடைதலே தன்வேதனைக் காட்சி எனலாம்.

காலம், நியதி, கலை, வித்தை, அராகம் முதலிய ஐந்து தத்தவங் களினாலும செலுத்தப்பட்டு அனுபவிக்கப்படும் இன்ப துன்பங்கள் ஆன்மாவின் அறிவிற்கு விடயமாதலால் அது தன்வேதனைக் காட்சி' எனப்படும்.

> ''அருந்தும் இன்பதுன்பமுள்ளத்து அறிவினுக்கு அராகமாதி -
> தரும் தன் வேதனையாம் காட்சி''

என் இதனைச் சித்தியார் குறிப்பிட்டது.[12] ஆதலால் புத்தி தத்துவத்தி னூடாக ஒருவன் தனது இன்பம், துன்பம் அதற்கான காரண காரியங்களை ஆராய்ந்து அறிந்து முப்பத்தாறு தத்துவங்களையும் பகுத்து ஆராய்ந்தறியும் அறிவே தன்வேதனைக்காட்சியால் விளை வதெனலாம். அப்போது தான் எது நிலையானது? எது நிலையற் றது? என்ற பொது விவேகமும். 'நில்லாதவற்றை நிலையின என்றுணரும் புல்லறிவு' என வள்ளுவர் கூறிய புத்தி தத்துவத்திற்

காட்பட்டு அராகத்தினால் விளையும் நிலைப்பாடுகளையும் ஒருவன் அறிந்து விலக முயல்கின்றான்.

முக்குணங்களில் சாத்வீக குணம் மேலோங்குவது இன்பம்; தமோகுணம் மேலோங்குவது துன்பமாகையால் அவ்வின்ப துன்ப இயல்புகளையறிவது தன்வேதனைக்காட்சியாகக் கூறப்பட்டது. பிரகிருதி தத்துவம் இருபத்திநாலு; வித்யாதத்துவம் ஏழு; எனப்ப டும். இவற்றுள் கலை, காலம், நியதி, வித்தை, அராகம் என்னும் ஐந்தினாலும் புருடனுக்கு பிரகிருதி தத்துவச் சேர்க்கையினால் தன்வேதனைக்காட்சிவரை புத்திதத்துவம் தொழிற்பட உதவுகின் றன. கலை என்னும் தத்துவமே தனக்கு வேறாயுள்ள புத்தி தத்து வத்தை புருடர்களிடத்துத் தொழிற்படுத்தக் காரணமாகின்றது.[13] மேற்கூறப்பட்ட கலை முதலிய ஐந்துடன் புருடன், மாயை இரண் டும் சேர்ந்துதான் வித்தியாதத்துவம் ஏழாகியது. கலையின் ஒரு பாகத்திலிருந்து வித்தை, அராகம் என்பவை தோன்றும் எனவும் ரௌரவாகமம் கூறுவதனால்[14] இந்திரியங்களின் சகாயம் வேண் டாது தன் சுகதுக்காதி அனுபவங்களை தன் அறிவினால் காண்ட லால் அது தன் வேதனைக் காட்சி எனச் சித்தாந்தம் விளக்கியுள்ளது.

## யோகக்காட்சி அல்லது ஞானக்கட்சி :

மல முதலிய கன்மவினைகளைச் சமாதி என்னும் ஒழுக்க நியமங்களால் வாட்டி இயமம், நியமம் முதலிய அட்டாங்க யோக சமாதியில் அவற்றின் வலியினைக் கெடுத்து; ஓரிடத்திலிருந்து மூவிடத்தும் முக்காலமும் இயல்பாக விரிந்த பொருள்கள் அனைத் தையும் உணர்ந்து காண்கின்ற அறிவு நல்யோகக் காட்சியாகும், எனவே யோகக் காட்சியில் இறந்தகால, நிகழ்கால, எதிர்கால நிகழ்வுகள் முதலியவற்றின் விளைவுகளைத் தரிசித்து நிர்விகற்பஞா னத்தினை ஞானாந்த அனுபவமாக்கி சவிகற்பஞானததினால் எங்குமாய் விரிந்த பொருளினைத் தரிசித்தல் எனச் சிவாக்கிரக யோகிகள் யோகக்காட்சி பற்றி விபரித்தார்.

இவற்றினை உணர்ந்ததன் விளைவாக ஒருவனின் புத்தித்தத்துவ மாகத் தொழிற்படும் அறிவினில் இறையருளால் 'வித்தை' எனப்படும் வேதாகமங்களின் உண்மைப்பொருள் புலப்பட ஆரம் பிக்கும். அவற்றினை வித்தியாதத்துவம் உணர்த்தி நிற்கும் நிலை யில் சிவதத்துவம் தன்னை அறிவிக்க ஆரம்பிக்கும் நிலைப்பாடு



யோகக்காட்சியின் பயன்பாடாய் அமையும், அனுபூதிக்காட்சிக்கு வழிவகுக்கும் எனச் சைவசித்தாந்தம் புலப்படுத்தும். எனவே முப்பத்தியாறு தத்துவங்களும் தானல்ல என்பதனை புலக்காட்சி கடந்த யோகக்காட்சி, அகக்காட்சி, ஞானக் காட்சி மூலமே உணர முடியும் என்பது சித்தாந்தக் காட்சிக் கொள்கையின் நிலைப்பாடாக இருப்பதனை ''முகத்தில் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள் அகத்தில் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்'' எனத் திருமந்திரம் கூறியதிலிருந்து அறியமுடியும்.

இதனை ''ஊனக்கண் பாசமுணராப் பதியினை ஞானக் கண்ணிற் சிந்தை நாடி'' எனச் சிவஞானபோதமும் அறுதியிட்டுரைத் தது. ஞானக்காட்சியாகப் பிரத்தியட்சக்காட்சி உயர்ந்து வளர்ச்சிய டைந்து புலக்காட்சி மறைந்து அகக்காட்சி விரியும் போது தான் தன்னையும் தன்னை ஆளும் பரம்பொருளையும் தரிசிக்கமுடியும் என்பதைச் சித்தாந்தம் தனது காட்சிக் கொள்கைப் பிரமாணத்தின் மூலமாக ஆணித்தரமாக விளங்கியுள்ளதெனலாம். அதனால் தான்

> ''ஐயேழும் ஒன்றும் அறிகின்ற என்னை அறியாதிருந்தேன்.
> அருள் செய்தான் நந்தி அறிகின்ற நான் என அறிந்து கொண்
> டேன்'

எனத் திருமூலர் சிவதத்துவத்தின் நுழைவாயில் அகக் காட்சிப் பிர மாணம் என்பதனை வலியுறுத்தினார். ஆதலால் காட்சிக்கொள்கை என்பது பிரத்தியட்சத்துடன் முடிவதல்ல. அது 'தரிசனம்' என்பதை அறிந்து கொள்வதற்கான அறிவின் ஆரம்பம் என்பதை சைவசித் தாந்தக் காட்சிக்கொள்கை வாயிலாக உணரமுடியும்.

## அடிக்குறிப்புக்கள்

1. சிவஞானசித்தியார், திருவிளங்கம் - புத்துரை, அளவையிலக்க ணம், பாடல் 7.
2. Margret and James Stutaley, A Dictationary of Hinduism, United Kingdom, pp. 312 - 332.
3. சிவஞானசித்தியார் பாடல். அளவையிலக்கணம், பாடல் 9. பக். 20.
4. மேற்படி பக். 23

5. அஷ்டப்பிரகரணம், சிவாகம பரிபாலன சங்கம். தேவகோட்-டை 1927 பரமோட்ச நிராசகாரிகை. பக். 361 - 362.

6. மேற்படி, சுலோகம், 20.

7. மேற்படி, சுலோகம் 30 : 32, பக். 368 - 70.

8. அஷ்டப்பிரகரணம், சிவாகம பரிபாலன சங்கம், தேவகோட்டை, போககாரிகை, சுலோ, 66. பக். 178 - 179.

9. மேற்படி, சுலோ, 34, பக். 161.

10. சிவஞானசித்தியார், அளவையிலக்கணம், பக். 25.

11. போககாரிகை, சுலோ, 92 இ, பக். 196.

12. சிவஞானசித்தியார், அளவையிலக்கணம், பாடல் 13.

13. போககாரிகை, சுலோ, 98 இ, பக். 199.

14. மேற்படி, பக், 202.



# திருமந்திரத்தில் சைவசித்தாந்தம்

சித்தர் வரிசையிலும் ஞானியர் வரிசையிலும் ஒருவராகச் சிறப்பிடம் பெற்று விளங்குபவர் திருமூலர். இவரால் இயற்றப்பட்ட திருமந்திரம் ஓர் ஒப்பற்ற தந்திர, மந்திர சாத்திரமாக மட்டுமல்ல, சித்தாந்த சாத்திரமாகவும் தோத்திரமாகவும் கொள்ளக்கூடிய பெருமைவாய்ந்த நூலாகும். எளிய தோற்றமும் அரிய உட்பொருள்களையும் தன்னகத்தே கொண்ட திருமந்திரத்தில் குழுக்குறிச் சொற்கள் விரவிவந்துள்ளன 'திருமந்திரம் ஆய்விற்குரியதன்று மிகக் கடினமானது' என்றெல்லாம் கருதப்படும் ஆழமான அனுபூதிஞான சிந்தனைகளைக் கொண்ட ஒரு நூலென்பதில் ஐயமில்லை. அறியாக்குழந்தை ஒன்று அன்பினால் சந்திரனைக் கைப்பற்ற நினைப்பது போன்று - திருமந்திர ஞானவானிலே சித்தாந்த சிவசூரியனைத் தேடும் முயற்சியும் அதனை ஒத்தது என்பதனை இங்கு அறியாமலில்லை. எனவே இது ஒரு ஆரம்ப முயற்சியே தவிர முடிவல்லவாம்.

திருமூலரது காலத்தைக் கணிப்பது மிக அரிதாகும். இவரது காலத்தைக் கணிக்க முயன்ற அறிஞர்களிற் பெரும் பாலானோர் கி.பி. 3 முதல் கி.பி. 7 ம் நூற்றாண்டு வரையுள்ள இடைப்பட்ட காலத்தையே சுட்டுவதனால்[1] கி.பி 5 ம் நூற்றாண்டின் முற்பகுதியாகலாம் என மரபுச் செய்திகளையும், அறிஞரது ஆய்வுகளையும், பல்லவ கற்சாசனங்களையும் வழிபாடு பற்றிய செய்திகளையும் கொண்டு இரா. மணிவாசகம் என்பார்[2] கூறுகின்றார். இதனடிப்படையில் கி.பி 6 ம் நூற்றாண்டைப் பின் எல்லையாகக் கொண்டு[3] திருமந்திரத்தில் காணப்படும் சைவசித்தாந்த சிந்தனைகளை இங்கு நோக்கலாம்.

சைவசித்தாந்தம் என்ற சொற்றொடரை முதன் முதல் பயன்படுத்திய காலத்தால் மிக முற்பட்ட நூல் திருமந்திரமேயாகும். இதனுடைய ஐந்தாம் தந்திரத்தில் இச் சொற்றொடர் விரிவான பொருளில் தரப்பட்டுள்ளது. வித் என்பது அறிவு எனவே வேதமுடிபான வேதாந்தம் அறிவின் முடிவாகவும் சித்தர்களதும் சித்தினதும் முடிபான ஞானம் சித்தாந்தமாகவும் - முடிந்த முடிவெனவும் ஆயிற்று. 'முடிந்த முடிபு' என்பது 'சைவசித்தாந்தத்தின் முடிபு' என அர்த்தமாகுமே தவிர சத்தியம் அல்லது தருமத்தின் முடிந்த முடிபு

என்பதாக அர்த்தமல்ல. ஏனெனில் சத்தியம் அனந்தமானது எல்லையற்றது. ஆதியந்தமும் கடந்த உள் பொருளாகும். அதனையே சித்தாந்தம் தனது முடிந்த முடிபு எனச் சுட்டும் சமயாதீதம் அடைந்த சித்தர்களிடம் தான் இந்த நிலையைக் காணமுடியும். இதனை 'ஆறுசமயமும் கண்டவர் கண்டிலர் - ஆறுசமயப் பொருளும் அவனல்லன் - தேறுமின் தெளிமின்' *(1533)* ★ எனக் கூறியதுடன் திருமந்திரமானது 'ஒத்த சமயங்களில் ஓராறு வைத்திடும்' அத்தன் ஒருவனாம் என்பதறிந்திலர்' *(1536)* எனமேலும் கூறியது. அதனால் 'சிவகதியே கதி - மற்றுளவெலாம் பவகதி' என ஒதுக்கியதும் *(1535)* அவதானிக்கத்தக்கது.[4]

ஆதலால் சைவசித்தாந்தம் பிரம விசாரம் போன்று எளிதில் அறியக் கூடியதல்ல மத, இன, மொழி, வெறிகொள்ளாதவர்க்கே இது உணரக் கூடியதாகும் என்பதற்குத் திருமந்திரம் சிறந்த உதாரணமாக விளங்குகின்றது. சமயாதீதநிலையில் நிற்பவர்களால் இவற்றின் உட்பொருளை எளிதில் கிரகிக்க முடியும். சமயாதீத மாவது பரிபூரணமான உயிரிரக்கம் நிறைந்த ஆன்மீகத்தின் புனிதத்து வமாகும்.

'மால் அறவும் சைவ முதல் மதங்களாகி மதாதீதம் ஆன
அருள் மரபு வாழி'

எனச் சமயம் கடந்த ஆன்மீக அருள் நிலையினைத் தாயுமானார் வாழ்த்துகின்றார். சிவசம்பந்தமுடைய சைவமானது பாரத நாட்டின் சிந்து வெளிக் கால முதல் நிலவி வருகின்ற தெனக் கருதும் ஆய்வாளர் அதன் தொடக்ககாலத்தைத் தொட்டுக்காட்ட இன்னும் சிரமப்படுவர். இந்தியத் தொல்குடிமக்களின் வழிபாட்டு நெறி சிவநெறி என்பதனைத் தமிழ் இலக்கியங்களிலும் அதற்குச் 'சைவம்' எனப் பெயரிடப்பட்டதாக மணிமேகலை என்னும் காவிய நூலாலும் அறிகிறோம்.[5] இதன் தார்ப்பரியத்தினை மக்கள் உணர்ந்து உய்யும் பொருட்டு வேதம் என்னும் பொது நூலும் சிவாகமம் என்னும் சிறப்பு நூலும் வழிதெரிவித்துக் காட்டிய நெறியே சைவநெறி எனப்பட்டது.[6] அதனைத் திருமத்திரம்

''வேதமோடாகமம் மெய்யாம் இறைவன் நூல் ஓதும்
பொதுவும் சிறப்பும் என்றுணர்க'' *(8-2397)*

★இந்த அடைப்புக் குறிக்குள் வரும் எண்கள் திருமந்திர நூலில் காணப் படும் பாடல்களின் எண்களைக் குறிக்கும்.



எனச் சைவசித்தாந்த முதல் நூல்களை அடையாளம் காட்டியது. இதனை 'வேதநூல் சைவ நூல் என்றிரண்டே நூல்கள்' எனச் சிவஞான சித்தியார் என்ற சித்தாந்த சாத்திர நூலும் ஆமோதித்தது.

## முப்பொருள்

'இது மட்டுமன்றிச் சைவம் - சிவம் - சித்தாந்தம் என்ற சொற்றொடர்களை ஒரே நூலில் முதன் முதல் இணைத்துக் காட்டிய சிறப்பும் திருமந்திரத்திற்கே உரியதாகும். ஆகையினால் ''சைவ சித்தாந்தக் கருத்துக்களை அரண் செய்து நிற்கும் மெய்ப்பொருளியற் கருத்துக்களை வெளிப்படையாக எடுத்துக்கூறிய தத்துவ ஞானி திருமூலரே''[7] என சித்தாந்த அறிஞர் பலராலும் பாராட்டப்பட்டார். 'தமிழகத்திற்கெனச் சிறப்பான சைவசித்தாந்தப் பழமையான பெரியோரில் திருமூலர் ஒருவர்' எனவும் கருதப்பட்டார்.[8] இவற்றிலிருந்து திருமந்திரத்தில் சைவசித்தாந்தக் கோட்பாடுகள் சிறப்பிக்கப்பட்டுள்ளன என்ற உண்மை தெளிவாகின்றது.

சைவசித்தாந்த அடிப்படைக் கோட்பாடு எனப்படும் 'முப்பொருள்' உண்மையானது பதி,பசு, பாசம், எனவும் இம்மூன்றும் அனாதியானவை என்பதும் சித்தாந்தத்தின் ஆணித்தரமான நிலைப் பாடாகும். இதனை மெய்கண்டசாத்திரங்களில் ஒன்றான சிவப்பிரகாசம் "பல்கலையாகமவேதம் யாவினும் கருத்துப் பதிபசு பாசம் தெரித்தலாம்''[9] என விளக்கியது. இதனை ''பதி பசு பாசம் எனப்பகர் மூன்றில் பதியினைப் போல் பசு பாசம் அனாதி'' *(1-115)* என்று முதலாம் தந்திரத்தின் ஆரம்பத்திலேயே திருமந்திரம் குறிப்பிட்டது. அத்துடன் நில்லாது இத் தந்திரத்தில் இவ்வுண்மை யினை

''அறிவறிவென்ற அறிவுமனாதி
அறிவுச்கறிவாம் பதியுமனாதி
அறிவினைக் கட்டிய பாசமுமனாதி'' *(8-2405)*

எனக் கூறி அதன் தொடர்ச்சியினை ஏனைய அனைத்துக் கோட்பாடு களையும் விடமேலாக நிறுவியது.

திருமூலர் மூன்று பொருட்களும் அனாதி, எனக் குறிப்பிடாது 'பதியினைப் போல் பசு பாசம் அனாதி' எனக் கூறுவதிலும் ஒரு சிறப்புண்டு. யாதெனில் பதியினைப் பிரமம் எனக் கொள்வார்,

பிரமம் அனாதி ஏனையவை அதன் தோற்றம் அல்லது அதனிடமிருந்து தோன்றியவையென்பதனால் அதனை மறுக்கவே பதிக்கு எங்ஙனம் தொடக்கம் முடிவில்லையோ அங்ஙனம் பசு பாசங்கட்கும் இவை கிடையாது, மூன்றும் அநாதிநித்தியம்[10] எனத் திருமந்திரம் வேறுபடுத்திக் கூறியது தமிழ் இலக்கியங்களில் சிவனது வர்ணனைகள் பரவலாகக் காணப்பட்ட போதும் ஆங்கு 'சிவநெறி' என்பது பற்றிய வெளிப்படைச்சான்றுகளைத் தேடுவோர்க்கும் திருமந்திரம் கி.பி 6 ம் நூற்றாண்டுக்கு முன்னரும் வழக்கிலிருந்தது 'சிவநெறி' என்பதனையும் பல அகச்சான்றுகள் மூலம் தெளிவுபடுத்தியுள்ளது எனலாம். அதுமட்டுமன்றிப் புராதன காலத்தில் 'சனாதனதர்மம்' என்னும் தொன்மை நெறியானது சைவம் என்றோ, 'இந்து' என்றோ தனக்கென ஒருநாமம் கொண்டிருக்கவில்லை என்பதற்குச் சிந்து வெளியும், சங்க நூல்களும் சான்றாகும். கி.பி. 5ம் நூற்றாண்டின் பின்னரே தமிழகத்தில் சைவம் எனவும் வட நாட்டிலே கி. பி. 2ம் நூற்றாண்டின் பின் இந்து எனவும் மருவியதாகக் கொள்ள முடியும். 'சிவநெறி' தனக்கென ஓர் பெயர் பெற்ற பின்னரே மக்களிடையே சமயப்பூசல்களும் உருவாகின என்பதற்கு மணிமேகலையில் வரும் சமயவாதமே சான்று. காரைக்கால் அம்மையார் காலம் பெருவழக்காகிய சிவவழிபாடு திருமூலர் காலம் மேலோங்கியிருந்ததனையே திருமந்திரப் பாடல்கள் குறிப்பிடுவன போலத் தோன்றுகின்றது.

திருமந்திரம் பாயிரப்பாடலின் கடவுள் வாழ்த்துப் பகுதியில் இவ்வுண்மை

> ''சிவனோடொக்கும் தெய்வம் தேடினுமில்லை -
> அவனோடொப்பா இங்கு யாவருமில்லை'' (பாயிரம் 5)

எனவருமடிகளில் நேரடியாகவே வெளிப்படுத்தப்படுகின்றது. சில இடங்களில் நந்தி என்னும் நாமமும் சிவனுக்குரிய தெனத் திருமந்திரம் கூறும். அதன் காப்புச் செய்யுளில் விநாயகரை 'நந்திமகன்' என குறிப்பிட்டார் 'அப்பனை நந்தியை ஆரா அமுதனை ஒப்பிலிவள்ளலை ஊழி முதல்வனை' எனவும் வருமிடங்களை நோக்கினால் தனக்குச் சிவனே நந்தியெம் பெருமானாக வந்து குருவாய் நின்று சிவப்பொருளை உணர்த்திய தன்மையினை இங்ஙனம் குறிப்பிடுவதாகவும் கருதலாம்.



> **''பிறசமயங்களுள் சமய நெறிக்கண் கொள்ளப்படும் தெய்வம் வேறு, தத்துவ ஆய்விற் கொள்ளப்படும் முதற் பொருள் வேறாயிருக்கும். ஆயின் சித்தாந்தத்துள் இரண்டும் வேறுவேறு அல்ல, ஒரே பொருளைப் பற்றிய இரு வகைக் கருத்துணர்வு''**

**எனவும் போற்றப்படும்.[11] சித்தாந்த நெறிப்படி எல்லா உயிரும் சிவசம்பந்த முடையவையாகும். மலமறைப்பே இவ்வுண்மையினை உணராமைக்குக் காரணமாகும். அதனால்**

> ***'சைவம் சிவனுடன் சம்பந்தமாகுதல், சைவம் தனையறிந்து சிவம் சாருதல்' (5-1512)***

**என்பதும் திருமந்திரச் சிந்தனையாகவுள்ளது.**

## சிவாகமப் பிரமாணம் :

**சைவசித்தாந்தத்தின் சிறப்பு நூல்கள் சிவாகமங்கள் என்ற உண்மையும் திருமந்திரத்திலே பெறப்படுகின்றது. சித்தாந்தத்தின் அளவையியற் கோட்பாட்டிலே வேதாகமங்கள் பொதுச்சிறப்புப் பிரமாணங்கள் என்பதானது ஆரம்பத்திலேயே கூறப்பட்டது. ஆப்த வாக்கியமாகிய வேதசிவாகமங்கள் சித்தாந்தத்தின் சிறப்புப் பிரமாண நூல்களாதலால் சிவாகமங்களின் சிறப்பிற்குத் திருமந்திரம் தனியிடம் கொடுத்துள்ளது வேதச் சிறப்பு, ஆகமச் சிறப்பு என்ற பகுதிகளில் இவ்விடயம் விபரிக்கப்படுகின்றது.**

> **''வேதமோடாகமம் மெய்யாம் இறைவன் நூல் ஓதும் பொதுவும் சிறப்பும் என்றுள, நாடில்.... இரண்டந்தம் பேத மதென்போர்குகபேதமே''**

**சிவாகமங்களின் தோற்றம், எண்ணிக்கை, வரலாறு பற்றிய பல செய்திகள் ஆங்கு தரப்பட்டுள்ளன. ஆகம நூல்கள் பற்றிய குறிப்பிலே இவை பற்றிய தெளிவான விபரக் குறிப்புக்களைத்தரும் முதல் தமிழ் நூலாகவும் திருமந்திரம் சிறப்பிக்கப்படுகின்றது. 'அஞ்சொடு இருபத்து மூன்றுள ஆகமம்' (571) என இருபத்தியெட்டு ஆகமம் பற்றியும், அவை சிவனின் சதாசிவமுகத்திலிருந்து தோற்றம் பெற்றதாகவும் (57) திருமத்திரத்தின் பாயிரப்பகுதி எடுத்துக்கூறும், இங்குள்ள பத்துப்பாடல்களையும் நோக்கினால் ஆகமங்கள் இருபத்தெட்டு அவை சிவனால் அருளப்பட்டவை (57).**

அவற்றின் தொகை ''எண்ணில் எழுபது கோடிக்கும் மேற்பட்டவை, (60) அவற்றுள் ஒன்பது ஆகமங்களே திருமந்திரத்திற்கு அடிப்படை யானவை (62) என்றும், அவற்றின் பெயர்களும் (63) ஆங்கு விரிவா கத் தரப்பட்டுள்ளன.

திருமந்திரத்திலே அமைந்துள்ள ஒன்பது தந்திரங்களும் முறை யே, காரணம், காமிகம், வீரம், சிந்தியம், வாதுளம், வியாமளம், காலோத்தரம், சுப்பிரபேதம், மகுடாகமம், என்னும் ஒன்பது ஆகமங்களையும் அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டவை எனவும் கருதப்படும்.[12] இங்கு குறிப்பிட்டுள்ள ஆகமங்களுள் சிவ ஞான போதத்திற்கு அடிப்படையாக அமைந்ததெனக் கூறப்படும் ரௌரவாகமமானது இவற்றில் ஒன்றாக இடம் பெறவில்லை. ஆதலால் - இவை எங்ஙனம் சைவ சித்தாந்தமாகும்? என்ற ஐயப் பாடும் எழுவதற்கு இடமுண்டு. சிவாகமங்களில் வித்யாபாதமே சித்தாந்தச் சிரப் பொருளைத் தெரிந்து கூறுவதனால் ஒன்பது ஆகமங்களிலுமுள்ள ஞானபாதப் பொருளைத் தெரிந்து திருமுலர் திருமந்திரமாக உரைத்திருக்கலாம் அல்லது அக்காலம் இவ்வாகமம் கிடைக்காமல்போயிருக்கலாம். இவ்விடயம் சிந்தனைக்குரியது. 'வடசொல் தமிழ்ச் சொல் இரண்டும் அவனை உணர்த்தும் (66) என்பதனால் சிவாகமங்களின் மூலமொழி என்ன என்பது போன்ற ஆராய்ச்சிகளை விடுத்து அவை உணர்த்தும் சித்தாந்தப் பொருளை உணர்வதே சிறப்புத்தரும் என திருமந்திரம் குறிப்பால் உணர்த்து வதாகவும் கொள்ளலாம். அத்துடன் சிவாகம உண்மைகள் ஒன்றாக இருப்பதனால் போலும் - ஒரே விதமான அடிப்படை உண்மைகள் காலத்திற்குக்காலம் ஒரேவிதமாக - பல் வேறுநிலைகளில் நின்ற பலஞானியர்கட்கு இறையருளால் வெளிப்படுத்துதல் இயல்பே என்ற அடிப்படைக் கருத்தினையே இவைவலியுறுத்துவதாகவும் அமையலாம். ஏனெனில் வடமொழிச்சிவ ஞானபோதத்தினையும் - தமிழ்ச்சிவஞான போதத்தின் கோட்பாடுகளையும் ஒப்புநோக்குப வர்க்கு இவ்வுண்மை புலனகாமற் போகாது.

திருமந்திரத்தின் 1 ம் தந்திரம் 166 பாடல்களையும் 17 பிரிவுக ளையும் கொண்டது இத்தந்திரப்பகுதியானது பதி,பசு,பாச உண்மை களையும், சிவன் பற்றிய சிறப்புச் செய்திகளையும் கொண்டுள்ள துடன் நிலையாமை, அந்தணர் ஒழுக்கம், அறம் செய்தலின் சிறப்பு என்பன பற்றிய சித்தாந்தத்தின் அடிப்படை வாழ்வியல் ஒழுக்கம் பற்றியும் கூறுகின்றது. 2 ம் தந்திரம் 208 பாடல்களும் 25 பகுதிகளை



யுமுடையது. இங்கு இறைவனின் ஐந்தொழில்களும், சிவலிங் கத்தின் தோற்றம், மூவகையான்மாக்கள், குருநிந்தை, சிவநிந்தை கோயில்களின் அவசியம், சிவத்திருமேனிகள் என்பன பற்றிய விடயங்களை உள்ளடக்கியதாக இருக்கின்றது. அட்ட வீரட்டச் செயல்களைக் குறிப்பிடுமிடத்து அவற்றின் உட்பொருள் யாது என்பது பற்றியும் ஆங்குகாணலாம். சிவஞானபோதம் சிவலிங்க வழிபாட்டினைச் சிறப்பாகச் சுட்டவில்லை என்பர் சிலர். சமயா தீதம் என்பது அருவுருவும் கடந்த நிலை என்பதால் மெய்கண்டார் அந்நெறி நின்றுரைத்தார் எனவும் கொள்ளலாம். அதன் தாற்பரி யத்தை ஆராய்வதும் அவசியமாகும்.

## மூவகைப் பாசங்கள் :

முதலில் முப்புரம் எரித்தலாவது - மும்மலங்களை அழித்தல் (2-343) என்பது நன்கு விளக்கப்பட்டது. 'பேணிய ஐந்தொழிலால் விந்து விற்பிறந்து ஆணவம் நீங்காதவர்களாக (2-398) இருப்பதனால் மீண்டும் மீண்டும் ஈசன் ஐந்தொழிலாற்றுவதன் காரணமும் கூறப்படுமிடத்து 'அவன் அவள் அது வெனும் அவை மூவினை மையின் ஒடுங்கி மலத்துளதாம்' என்னும் சிவஞானபோதச் சூத்திரக் கருத்து விளக்கம் இங்கும் காணப்படுகின்றது எனலாம். இறைவ னால் உலகம் தோற்றுவிக்கப்படுதலானது 'ஒருவனே உலகேழும் படைத்தான்.... துடைத்தான்.... அளித்தான் (2.404)' 'எனவும், நித்த சங்காரம் நீடு இளைப்பாற்றல் (2-428)' எனவருவனவெல்லாம் சித்தாந்தக் கோட்பாட்டின் ஐந்தொழில் முறைமைகளை திருமந்திரம் கற்பிக்கும் நிலைப்பாட்டிலிருந்து அறிய முடிகின்றது.

''குயவனைப் போல் எங்கள் கோன் நந்தி வேண்டில் -
அணுவில் உலகம் அது இதுவாமே' (2-443)

என்ற திருமந்திர அடிகள் கூட 'ஆரியன் குலாலனாய் நின்றாக்குவன் அகிலமெல்லாம்' என்னும் சித்தியார் செய்யுளை ஒத்திருப்பதாக உள்ளது. அத்துடன் உலகம் அணுக்களால் ஆக்கப்பட்டது என்ற விஞ்ஞானக்கருத்தின் மூலத்தையும் காணமுடிகின்றது. மும்மலங்க ளும் முளை, தவிடு, உமி போன்றன என்ற உவமான உவமேயங்க ளையும்

''ஆணவ மாயையும் கன்மமுமாமலங்காணு முளைக்கும்
தவிடுமியான்மாவும் - தாணுவையொவ்வாமற் தண்டுல
மாய் நிற்கும்''

என்னும் இந்த அடிகளும் 'நெல்லிற்குமியும் நிகழ் செம்பிற் களிம்பும் - சொல்லிற் புதிதன்று தொன்மையே'[13] என்ற சிவஞான போதவெண்பாவை அடியொற்றி அமைந்தது போல இருப்பதும் நோக்கலாம். சேக்கிழார் பெருமானும் திருமூலநாயனரது புராணத் தில் இப்படியான சில சிந்தனைகளை முன் வைத்துள்ளார்.[14] குருதத்துவமும் திருமந்திரத்தில் சிறப்பாக உபதேசிக்கப்பட்டுள்ளது. 'ஈசனடியார் இதயம் கலங்கிட தேசமும் நாடும் சிறப்பும் அழிந்திடும். (2-534)' பத்தினி, பத்தர்கள் தத்துவ ஞானிகள் சித்தம் கலங்கச் சிதைவுகள் செய்தவர்' என்றின்னோரன்ன நிலைகளினால் மெய்ஞானிகள், மெய்யடியார்கள், ஆச்சார்ய நிந்தைகளினால் உலகிலே தீமைகள் விளையும் என்பதனையும் சுட்டிக்காட்டத் திருமந்திரம் தவறவில்லை.

சித்தாந்தம் பல்வேறுவடிவங்களில் சைவர்கள் இறைவனை வணங்கினாலும் - அவை சிவமெனும் செம்பொருளாகவே அமை யும் என ஒரு கடவுட் கொள்கையினையும் தெளிவாக்கியது. 'யாதொரு தெய்வம் கொண்டீர் அத் தெய்வமாகியாங்கே மாதொரு பாகனார் தாம்வருவர்' என்னும் சித்தியாரின் கருத்து விளக்கமானது

''எப்பரிசாயினும் ஏத்துமின் ஏத்துமின் அப்பரிசீசன் அருள் பெறலாமே'' (பாயிரம் 36)

என திருமந்திரமானது இதனை அன்றே வெளிப்படுத்தியுள்ளது.

'ஒன்று கண்டீர் உலகுக்கொரு தெய்வம் உண்டு கண்டீர் உயிருக்குயிராவது நன்று கண்டீர் நல் நமச்சிவாயப்பழம்' (9-2962)'

என மேலும் ஒரு கடவுட் கொள்கையின் தாற்பரியத்தையும் திருமந்திரத்தில் காணமுடிகின்றது. சிவன் உயிர்களில் அந்தர்யா மியாக உறைபவன் என்பதனையும் 'உடலாய் உயிராய் உலகமதாகி கடலாகி பெருவெளி அண்ணல் நின்றானே' (2-413)' என்றபாடலில் மேலும் விளக்கியது.

333 செய்யுள்களில் 21 பகுதிகளை யுடைய 3 ம் தந்திரம் முழுவதும் யோக முறைமைகளையும் காயசித்தி உபாயங்களையும் அட்டமாசித்துக்களையும் விபரிக்கும்பகுதியாகும். இங்கும் சித்தாந்தம் சார்பான சிந்தனைகளை அவதானிக்கலாம். சித்தர்கள்



உடம்பினையே ஆலயமாகக் கொண்டு வழிபடும் ஆத்மார்த்த அகவழிபாடுகள் இங்கு சிறப்பிக்கப்படுகின்றன. ஆலய வழிபாட்டை எடுத்துக் கூறும் திருமூலர் தாம ஒரு சித்தர், சிவயோகி என்பதனை மறக்கவில்லை. ஆதலால் புறவழிபாட்டைவிட அக வழிபாட்டையும் அகத்தூய்மையினையும் ஆத்ம சித்தியினையும் எடுத்துக் கூறினார். 'உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான் (3-725) எனவும் 'ஊனுடம்பு ஆலயம்' எனவும் கூறியதிறனை ஆராயும் போது பொய்யான உடம்பு மெய்ப் பொருளின் கோயிலாக இருபதனாற் போலும் உடம்பினை 'மெய்' என்ற ஒரு பெயரிலும் சித்தாந்தம் குறிப்பிட்டிருக்க வேண்டும். அதனால் உடம்பினை அழிய விட்டால் அதனுள்ளுறையும் உயிரும் பிரிந்து விடும் - மறைந்து விடும் அதன் பின் மெய் பொருள் நாட்டத்தையும் அறிந்து மெய்ஞானம் தலைப்படவும் வழியற்றுப் போய்விடும் இதனைக் குறிக்கவே

'உடம்பார் அழியின் உயிரார் அழிவர் திடம்பட மெய்ஞா னம் சேரவும் மாட்டார் - 'உடம்பினை வளர்க்கும் உபாயம் அறிந்தே உடம்பினை வளர்த்தேன் உயிர்வளர்த்தேனே' (3-724)

எனத்திருமந்திரம் குறிப்பிட்டது.

இப்பாடலின் பொருள் உயிர் அழியும் என நிலையற்ற தொரு பொருளைத் தருவதாகவும் சில சமயம் விமர்சிக்கப்படுவதுண்டு.[15] கடவுட் கொள்கையினை ஏற்காத சமயங்கள் கூட பௌத்தம் சமணம் முதலியனவும் வைதீக தரிசனங்களுள் சிலவான சாங்கியம், வைசேடிகம் வேதாந்தம் முதலிய தத்துவங்கள் கூட ஆத்மதத்து வத்தை ஏற்றுள்ளன. அப்படியிருக்க உயிர் நிலையற்றது என்ற கொள்கையினை சித்தர்கள் முன்வைத்திருப்பார்களா என்பது மேலும் சிந்தனைக்குரிய விடயமாகும். ஏனெனில் திடம் பட மெய்ஞானம் அடைதற்கு அறிவில் முழுமை வேண்டும் - இந்த முழுமை நிலையே முத்தி நிலை அல்லது விடுதலை எனக் கருதப்ப டும். இந்த விடுதலைப்பயணத்திற்கு உடல் தான் வாகனமாகும் அதனால் உடலினை வளர்க்கும் காயசித்தி முறைகளை அறிந்து அத னூடாகவே உயிர் என்னும் ஆத்மதத்துவத்தை வளர்த்து முழுமை யாக்க முடியும். இந்த உண்மையினைத் திருமந்திரம் - 'உடம்பினை

வளர்க்கும் உபாயம் அறிந்து உடம்பினை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே' என அதேபாடலில் குறிப்பிட்டுக்காட்டியது. உயிர் அழியத்தக்க தெனில் ஒரே பாடலிலேயே உயிர் அழியும் எனவும், பின்னர் அழியாது உயிரை வளர்க்கும் உபாயம் அறிந்தேன் எனவும் கூறியிருப்பாரா என்பது சிந்திக்க வேண்டிய விடயமாகும். பொய்யான உடலை அழியாமல் பாதுகாக்க முடியும் என்பவர் ஆத்ம தத்துவத்தை பொய் எனக் கருதுவது கடினமே. சிலருக்கு இது முரண்பாடாகவும் தோன்றலாம் சித்தர் நிலையடையாத வரையில் இக்கருத்துக்கள் பல புதிரான அனுபூதிக்குட்பட்டனவாகவே காணப்படும். எனவே இது தனியாக ஆராயப்படவேண்டும்.

## சக்தி தத்துவம் :

*4 ம்* தந்திரம் *530* பாடல்களும் *13* பகுதிகளையுமுடையது. பேரின்பம் என்பது தன்னையிழத்தல் அல்லது பொருளையிழத்தல் என்பதாக இப்பகுதி விபரிக்கும் அசபை முதல் நவாக்கரிச் சக்கரம் ஈறாக சக்திதத்துவத்தின் பெருமைகளையும், விந்து, மாயை முதலியவற்றின் இயல்புகளையும், சக்தி வழிபாட்டு முறைகளை யும் கூறுவதனைக் காணுமிடத்து உலக வாழ்வாகிய மாயையினைக் கடத்தற்கு ஈசனின் அருட்சக்தி - ஆதிசக்தியின் துணை இன்றியமை யாதது என்பதனைச் சித்தாந்தமும் புலப்படுத்தும். 'தாடலை போல் கூடிய வைதானிகழா வேற்றின்பக் கூடலே பேரின்பம்' என்பத னைத் திருவருட் பயனைப்போல - திருமந்திரமும்-விளக்கும் 'அர கர என பிறப்பறுவதும், *(4-916)* அஞ்செழுத்தால் பாசம் அகல்வதும் *(4-919)* 'அவனேதானே யாகிய அந்நெறி' என்பது 'தானவனாக அவனேதானேயாயிட ஆன இரண்டில் அறிவன் சிவன்' *(4-1011)* எனவும் சித்தாந்தசாத்திரக் கோட்பாடுகளை திருமந்திரமும் எடுத்துக்காட்டுகின்றது.

மேலும் சிவன் எந்த வடிவங்களை உலகியலில் உயிர்களின் ஈடேற்றத்திற்காக மேற்கொள்வாரோ அவ்வாறே அதற்குப் பொருந்த சக்தியும் வடிவங்களை மேற் கொள்ளுதல் 'தன்னிலமை மன்னு யிர்கள் சாரத்தரும் சக்தி பின்னமிலான்' எனச் சித்தாந்த நூல்கள் குறிப்பிடும். இதே கருத்தானது திருமந்திரத்திலே பின்வருமாறு காணப்படும்.



''காணும் பலபல தெய்வங்கள் - பூணும் பல பல
பொன்போலத் தோன்றும், பேணும் சிவனும் பிரமனும்
மாயனும் - காணும் தலைவி நற்காரணியே''

என்பது அப்பாடலாகும் *(4-1087)* 'எத்திறம் ஈசன் நிற்பன் - அத்திறம் அவளும் நிற்பள்' என்ற சித்தியார் பாடலையும் இது நினைவூட்டும்.

இதுவரை கூறப்பட்ட சிந்தனைகள் அனைத்தையும் சிறப்பாக உள்ளடக்கிய பகுதியாக 5 ம் தந்திரம் அமைகின்றது. இது சைவசித் தாந்தத்தின் மையப்பகுதி எனவும் கருதலாம். *154* பாடல்களில் *20* உபபிரிவுகள் அமைந்துள்ளன வாதுள ஆகமத்தை அடிப்படையாகக் கொண்டதெனினும் ரௌரவாகமத்தின் ஞானபாதப் பொருளை ஒத்ததாகவே காணப்படுகின்றது. வித்யாபாதம் என்பது சிவப் பேரறிவியலையே விபரிக்கும் பகுதியாதலால் இரண்டு ஆகமப் பொருளும் ஒத்திருப்பதில் வியப்பில்லை. ஞானபாதமானது சித்தாந்த முடி நிலை உண்மையினைக் கூறுவதனால் ஆகமங்களின் ஞானபாதப் பொருளின் சாரமாக திருமந்திரப் பொருளும் சித்தாந்த சாஸ்திரங்களும் அமைந்துள்ளன என்பதனை இப்பகுதி புலப்ப டுத்துகிறதெனக் கருதலாம்.

## சைவ சித்தாந்தத்தின் சிறப்பு :

திருமந்திரத்தின் *5* முதல் *9* தந்திரங்களிலும் கூறப்பட்டுள்ள விடயங்களை ஆராயின் இந்நான்கு தந்திரங்களிலும் சைவசித்தாந்தம் பற்றியே விரிவாக எடுத்துரைக்கப்பட்டிருப்பதாகத் தோன்றுகின்றது. *5* ம் தந்திரமானது சித்தாந்தத்தின் முதற்கூறான சமயம், வாழ்வியல் என்பன பற்றியும் *8* ம் தந்திரமானது சித்தாந்தத்தின் தத்துவக்ககூறுக ளையும் ஆராய்வதான அணுகுமுறை காணப்படுகின்றது. 'ஊரும் உலகமும் படைக்கின்ற பேரறிவாளன் பெருமை தாரணியில் நால்வகைச் சைவமாக' *(5-1419)* பரந்துள்ளதெனத்' திருமந்திரக் குறிப்பால் அறியலாம். திருமூலர் தமது காலத்துச் சைவப்பிரிவுக ளாக சுத்தசைவம், அசுத்தசைவம், மார்க்க சைவம், கடும் சுத்த சைவம், என நான்கு பிரிவுகளைக் கூறுகின்றார். அதேசமயம் ஆறு சமயப்பிரிவுகளையும் கூறுகின்றார். ஆனால் அவை இவற்றுள் அடங்கியதாகவும் கூறப்படவில்லை. காரணம் சிவனை வழிபடும் பாசுபதம், மாவிரதம், காபாலம், வாமம், பைரவம் ஐக்கிய வாதசைவம் யாவும் சித்தாந்த நூல்களில் அகப் புறச்சமயப்பிரிவுக

ளாகக் கருதப்படுகின்றன.[16] அத்துடன் எல்லா வகையான சிவனை வழிபடும் பிரிவுகளையும் சித்தாந்தம் அகம், அகப்புறம், புறம், புறப்புறச் சமயங்களாக நான்கு பிரிவுகளில் அடக்கியது. இவற்றுள் அடங்காத வீரசைவம், காஷ்மீரசைவம் என்பனவும் உள்ளன.

இதன் விரிவுகளைத் திருமந்திரத்தில் காண முடியா விட்டாலும் சித்தாந்த சைவம் நான்கு நிலைகட்குட்பட்டதாக கூறப்படுகின்றதா என்ற சிந்தனையும் இவ்விடத்தில் எழுகின்றது. ஏனெனில் 5 ம் தந்திரத்தில் புறச்சமய தூஷணம், உட்சமயம் என்ற பகுதிகள் தனியாக இடம் பெற்றுள்ளன. புறச்சமய சிந்தனையிலே

''ஆயத்துள் நின்ற ஆறு சமயங்களும் - காயத்துள் நின்ற கடவுளைக்கண்டிலர், மாயக் குழியில் விழுவர் பாசத்தில் பதைக்கின்றார்'' *(5-1530)*

எனச் சாடுகின்றார். இங்கு புறச் சமயம் என்பது வேதங்களை ஏற்றும் சிவாகமங்களை ஏற்காத பிரிவுகளாகும். அதனால் உட்சமயம் எனத்திருமந்திரம் கூறுவது அகச்சமயம் எனக்கூறும் பாடாணவாத பேதவாத, சிவசமவாத சிவசங்கிராந்தவாத, விகார வாத சைவப் பிரிவுகளாக இருக்கலாம். 20 ம் பகுதியான உட்சமயப் பிரிவிலே

''ஒன்றது பேரூர், வழி அதற்கு ஆறுள...இருமுச்சமயமும் நன்றிது தீதிது என்றுரையாளர் - குன்று குரைத்தெழு நாயை ஒத்தார்கள்'' *(5-1558)*

என்று கூறுமிடத்து வழி ஒன்று சச்சரவு வேண்டாம் எனவும் அறிவுரை கூறத்தவறவில்லை. ஒரே முடிபான சித்தாந்த சன்மார்கத்திற்குச் 'சைவசமயத்தனிநாயகன் நந்தி உய்ய வகுத்தவழி குருநெறி ஒன்றுண்டு தெய்வச் சிவநெறிச் சன்மார்கம் *(5-1567)*' என முடிபையும் அது கூறியிருக்கின்றது.

இவற்றிலிருந்து சித்தாந்த சைவ நிலைப்பாடு நான்கு என்பதனைத் திருமந்திரம் உணர்த்துவதுடன் அவற்றின் வழிமுறை வேறுபடினும் முடி நிலை சித்தாந்த சன்மார்கம் என்பதனை கடும்சுத்த சைவ நிலையிலே *(5-1438)* வைத்து வற்புறுத்தியுள்ளது. தனித்தனி இவற்றினை அவதானித்தால் சுத்தசைவராவதற்கு,



''கற்பன கற்று கலைமன்னு மெய்யோகம் முற்பதஞான முறைமை நண்ணியே-சொற்பதமேவித்துரிசற்று மேலான - நற்பதம் கண்டுளோர் சைவ சித்தாந்தரே' (5-1421)

என்றவாறு குற்றம் களைந்த சைவ சித்தாந்தராவதற்கு யோகத்திலும் ஞானத்திலும் பயிற்சியுடையாராக வேண்டும் எனப்பட்டது. எனவே சைவ சித்தாந்த சன்மார்க நிலையாவது வெறும் பேச்சளவிலன்றி கடும் பயிற்சி, உழைப்பு, சாதனை, ஒழுக்கம் என்பவற்றினால் அடையப்படும் சமயாதீத ஞானமார்க்கமாகும் எனலாம்.

அசுத்த சைவ நிலையானது வேதாந்தத்துடன் இணைந்த சித்தாந்தத்தை அறியாதவர் சித்தாந்தமே தனிமார்க்கம் என நினைக்கும் உயர்ந்த சைவர் என இவர்களை யோகி சுத்தானந்த பாரதியார் குறிப்பிடுவர்.இவர்களை சரியை கிரியை மார்க்கத்தைப் பின்பற்றும் சாதாரண சைவராகத்திருமந்திரம் காட்டும். *(5-1423)* அசுத்த சைவ நிலையில் நான்கு மார்க்கங்களில் நின்றாலும் உபதேச மந்திரங்களையே ஜெபிக்கும் பழக்கமுடையவர்கள் அசுத்த சைவ நிலையுடையாராவர் *(5-1424)*. இது சதாரண சைவர் உபாயமாகக் காணப்படுகின்றது. மார்க்கசைவரானவர் சன்மார்க்க ஞானசாதனம் ஒன்றினையே பிரதானமாகக் கொள்வோராவர் *(5-1427)* அதிலும் சிவாகம முடிபு கட்கேற்ப 'வேதாந்த சித்தாந்தமெய்மை ஒன்றாக முடிந்த அரும் சுத்த சைவமார்க்கத்தினை நாடுபவர்கள் *(5-1429)*. மார்க்க சைவர் புறவேடத்திற்கு மதிப்புத்தராது வேதாந்த வழிச்சென்று சித்தாந்த சீவன் முத்தியில் சேர்பவர்கள். இதனை 'சித்தாந்தத்தே சீவன் முத்தி சித்தித்தலால் சீவன் முத்தி சித்தித்தோர் சித்தாந்தரே' *(8-2394)* எனவும் திருமந்திரம் கூறியது. ஆகையினால் மார்க்கசைவரானவர் இறுதியில் வேதாந்தமல்லாத.... சித்தாந்தம் கண்டுளோர்.... அவர் சாதாரண சைவரிலும் உயர்ந்த உபாயமுடையவர் *(5-1435)* என்பதனைத் திருமந்திரத்தில் காண்கிறோம். ஆதலால் இம்முறைமைகளையும் ஞானப் பயிற்சியால் தாண்டி அதற்கப்பாலே சமயமுடிவுகளையும் கடந்து சமயாதீதத்தில் நிற்பவர் சித்தாந்த சைவராக முடியும் என்பதே திருமந்திரம் முன்னைத்துள்ள கோட்பாடெனலாம்.

இதனை அடுத்துச் சித்தாந்த சைவத்தின் இறுதி நிலை கடும் சுத்தசைவம் எனப்படும் என்பதும் திருமந்திரத்தால் பெறப்படும் உண்மை எனலாம். இறுதி நிலையினை சுத்தாத்துவித முத்தி என்றே

சைவசித்தாந்தமும் கூறும். கடும் சுத்தசைவ நிலையாவது பாசம் பசுத்துவம் பாழ்படச்சாடும் சிவபோதகர் சுத்தசைவர் (5-1438). அவர்கள் கேவலபாசமும் துடைத்து அதாவது ஆணவமலமும் துடைத்துத் திடமாய்த் தன்னையறிதலே இச் சித்தாந்த மார்க்கம் ஆகும் (5-1439). இப்படியான நிலை சித்தித்தவர்கள் ஞானம் விளக்கொளியாய் நிற்க பரசாயுச்சியமாகின்ற பதி நிலையினை அடைவர் (5-1442) என்பது திருமந்திர முடிபாகும். இந்நான்கு சைவ நிலைகளும் திருமந்திரத்திலே நான்கு மார்க்கங்களில் அடையலாம் என்பதனைப்

'பாசம் பசுவானதாகும் இச்சாலோகம்,
பாச அருளானதாகும் இச் சாமீபம்,
பாசம் சிரமானதாகும் சாரூபம் பாசம் கரை பதி சாயுச்சியமே'

என வகுத்துக் காட்டியது. ஆகவே கடும் சுத்தசைவர்களில் கண்ணப்பர், சிறுத்தொண்டர் சண்டேஸ்வரநாயனர் முதலியோரைக் குறிப்பிடல் பொருத்தமானதாகும்.

## நான்கு மார்க்கங்கள்

5 ம் தந்தரமானது இதைத் தொடர்ந்து சித்தாந்தத்தினுடைய நான்கு மார்க்கங்கள் நால்வகை முத்திப்பேறுகள் அல்லது பதங்கள் அதனை அடைவதற்கான குருவழிபாடு, இருவினை ஒப்பு, மலபரிபாகம், சத்தினிபாதம் அவற்றிடையே உள்ள ஆன்மபக்குவத்திற் கேற்ற நிலைகள் யாவும் விபரிக்கப்பட்டுள்ளன. திவீர தரமே சத்தினிபாதத்தில் உயர் நிலை என்பதனை 'இருவினை நேரொப்பில் இன்னருட்சக்தி குருவெனவந்து குணம் பலநீக்கித்.... திரிமலம் தீர்ந்து சிவன் அவனாமே'' என உணர்த்தியது (5-1527). தொடர்ந்து சிவகுருதரினம் பற்றிக் கூறியதுடன் சிவனாகிய சித்தன் சிவகுருவாய் வந்து தூய்மை செய்வதும் (6-1578) அதனால் 'குருவே சிவம்' எனக் கூறினன் நந்தி என இத்தன்மையினைத் திருமந்திரம் விளக்கும். எனவே பக்தன் 'கிரியை சரியை பயில்வுற்றாலும்.... ஞானத்தால் இறுதியிலே சித்தம் குருவருளால் சிவமதாகும்'' (5-1455) ஞானமார்க்கம் சித்திக்கும் எனப்பட்டது.

ஞான வழி நாடற்குரிய முதல் உபாயமாக யோகசித்தி அடைந்ததோருக்கு ''பூ வினிற் கந்தம் பொருந்தியவாறு - சீவனுக்குள்ளே சிவமணம் பூக்கும்''(5-1459) நிலை கைகூடும் ஆதலால்



ஞானநிர்வாணமே நற்குருபாதம் சேர்ப்பிக்கும் (5-1476) என்பது திருமந்திரப் பொருளாக உள்ளது இத்தகைய அணைந்தோர் தன்னமைன் இயல்பினை 'அயரா அன்பின் அரன்கழல் செலுமே' எனச் சிவஞானபோத சூத்திரமும் கூறியது காண்க (11 ம் சூ). ஆனால் ஞான உணர்வில்லாதவர் நரகத்திற்கும் தகுதியற்றவர் என்பதானது

''ஞானத்தின் மிக்க நன்னெறி நாட்டில்லை
ஞானத்தின் மிக்கவையும் நல்முத்தி நல்காவாம்
ஞானத்தின் மிக்கார் நரரின் மிக்கரே''

எனவும் கூறப்பட்டது (5-1467) காண்க.

## சித்தாந்த ஒழுக்க விழுமியம்

ஆதலால் ஞானம் என்னும் பேரறிவுடைமையாவது அன்பு, கருணை, அருள், இன்பம், ஒழுக்கம், மகிழ்ச்சி என்னும் அரும் குண இயல்புகளைக் கொண்டதாகும்.

''ஒழுக்கம் அன்பு அருள் ஆசாரம் தவம் தானம் வாய்மை
வணங்கல் வந்தித்தல் இவை - இழுக்கிலா அறங்களானால்
இரங்குவான் பணி அரன்''

என்ற சித்தியார் பாடலும் இதனை அறிவுறுத்தும். இப்படியான ஒழுக்கவியல் நியமங்களில் சமயதீட்சை, விசேட தீட்சை நிர்வாண தீட்சை முதலிய தரத்தை அடைதலும் அடங்கும் எனத் திருமந்திரம் கூறும். சைவசித்தாந்த ஒழுக்க நியமங்களைக் கூறுவதில் திருமந்திரத்தில் ஆறாம்தந்திரம் சிறப்பிடம் பெறுகின்றது. 154 பாடல்களில் 20 உட்பிரிவுகள் அடங்கியுள்ளன. இங்கு குரு தரிசனம் மட்டுமன்றித் திருவடிப்பேறு துறவு, தவம் தவநிந்தை, அருளுடைமை, அவவேடம், திருநிற்றின் பெருமை, யாவும் கூறப்பட்டிருக்கின்றது.

'பத்தியும் ஞான வைராக்கியமும் பர சித்திக்கு வித்தாம்
சிவோகமே சேர்தலால் - முத்தியில் ஞானமுளைத்தலும்
அம்முளை சக்தி அருள்தரின் எளிதாகும்' (6 - 1585)

எனவும் வழிகாட்டப்பட்டுள்ளது.

7ம் தந்திரமானது யோக நிலைக்குத் தனியிடம் அளித்துள்ளது. ஆறாதாரம், அண்ட, பிண்டலிங்கம், ஆத்மலிங்கம், ஞானலிங்கம்,

சதாசிவலிங்கம், சிவலிங்கமென ஆறுலிங்கமாக சிவனை வழிபடும் தியானமுறை கூறப்படுகின்றது. அதனால் மானுடயாக்கைவடிவு சிவலிங்கம், என ஒரேவரியில் கூறியது *(7-1726)* 'அகிலம், சக்தி, சிவம், விளையாட்டு' என்ற திருமந்திரக்கருத்து திருவாசகத்திலும் 'காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி' எனக் குறிப்பிட்டது. சிவனது உருவலட்சணங்கள் பற்றிய இடத்து 'உருவும் அருவும் உருவோடருவும் மருவு பரமசிவன் என்ற *(7-1763)* திருமந்திரக் கோட்பாடானது 'அருவும் உருவும் அறிஞர்கறிவாம் உருவும் உடையான் உளன்', என்னும் திருவருட்யனில் வரும் குறிப்பினை ஒத்ததாக அமைந்துள்ளது.

## உயிரிரக்கக் கோட்பாடு :

பசுவிலக்கணம் பற்றியும் திருமந்திரம் வகுத்துத் தந்துள்ளது. பிராணன், புருடன், சீவன், பசு,போதன் என்ற வகையிலே ஆத்மனை இனம் கண்டு தன்னை உணர்பவன் தத்துவஞானி எனக் காட்டுமிடம் ஆழமாகச் சிந்திக்கத் தக்கது. இதோபதேசம், கூடா ஒழுக்கம், இந்திரியமடக்கல் என்பனவற்றினால் அறநெறிப்பட்ட ஒருவன் பசுத்துவம் நீங்கப் பெறுவான். ஆதலால் திருமந்திரம் சிவனடியார் பூசையின் உயர்வையும் அதன் உட்பொருளையும் விளக்கியது. அடியார் பூசையாவது சிவனது உயிர்கள் அனைத் தினையும் சிவனாகவே கொண்டு போஷிப்பது ஆகும். 'நடமாடக் கோயில் நம்பர்க் கொன்றீயில்.... படமாடக் கோயில் பகவற்க தாமே' என்ற பாடலில் சிவனடியார் மட்டுமல்ல - அனைத்துயர்க ளையும் சிவன் எனக் கருதித்தொண்டு செய்ய வேண்டும் என வலியுறுத்தவே 'ஒன்றே குலம் ஒருவனே தேவன் - நன்றே நினை மின் *(7-2104)*' எனக் வேண்டுகோள்விடுத்தது. சீவர்கள் யாவரும் சிவனது அம்சமாதலால் சிவனுக்குத் தனியானகோயில் என்பதனை விட மனித உடலே சிறந்தகோயில் எனவும் காட்டியதுடன் ''சீவன் சிவனெனவேறில்லை

*''சீவனார் சிவனாரை அறிந்தபின் சீவனார்*
*சிவனாயிட்டிருப்பர் ''* *(7-2017)*

என்பதில் அப்படிப்பட்டவர்களிடமே தெய்வம் குடியிருக்கும் எனத் திருமந்திரம் கூறியுள்ளது.

இவ்வாறான உயிரக்க கோட்பாடு சித்தாந்தத்தில் நடைமுறை யில் இருக்கின்றதா என்ற சந்தேகம் தற்கால வாழ்வியல் நோக்கிலே



எழாமலில்லை: படிப்பது தேவாரம் இடிப்பது சிவன் கோயில் என்றிராது சைவ சித்தாந்தம் பேசும் சமுகமானது திருமத்திரத்தின் உயிரக்கக் கொள்கையினை வாழ்வியலாகப் பரிணமிக்கச் செய்வ தவசியமாகும். பசுக்கள் மேல் கொண்ட பேரிரக்கத்தால் சுந்தரமுனி வர் திருமூலரானார் என்பதை அறிகிறோம் போற்றுகிறோம் - சித்தாந்தப் பேருண்மை எனச் சிறப்பிக்கின்றோம். இறைவன் கூடப்பன்றிக்குட்டிகட்குத் தாயாகி வந்து பாலூட்டிய கருணை கதையாகச் சொல்லப்படுகின்றது. ஆனால் நடைமுறையில் பசுக்க ளாகிய சாதுவான மக்கள் மேல் கருணை கொண்டு உதவிக்கரம் நீட்டும் சித்தாந்த சிந்தனையாளர்களை சைவ உலகம் காண முடிந் தால் அதுவே சித்தாந்தத்தின் பயன்பாடு - ஆனந்த நிலை - அன்பு நிலை எனலாம். எல்லா உயிர்கள் மேலும் - ஆதரவற்ற மக்கள் மேலும் இரக்கமற்றவர்களை சைவசித்தாந்திகள் என்று சொல்வது பொருத்தமோ என்ற ஐயப்பாட்டினை மேற்குறித்த திருமந்திர சிந்தனை எழுப்புகின்றது.

சகிப்புத் தன்மை, அன்பு, இரக்கம் உள்ள ஒருவராக மனிதர் மாறாதவரை சாதாரண வாழ்வியலே பிரச்சனைக் குரியதாகிவிடும். சமுதாய அமைதியும் சிக்கலடையும். ஆதலால் அன்பு நெறியே - சேவை நெறியே - சித்தாந்த நெறி என்பதே திருமந்திர சமயாதீத சைவசித்தாந்தமாகக் காணப்படுகின்றது. அதனையே திருமந்திரம் 'அன்பு சிவமும் இரண்டென்பர் அறிவிலர் - அன்பே சிவமாவது ஆரும் அறிகிலர் *(1-270)* எனச் சைவமக்களின் அறியாமையினையும் திருமந்திரம் எடுத்துக்காட்டியது அன்பு என்பதற்குப் பதில் 'ஆணவம்' என்ற இயல்பே பெரும்பாலும் ஆலய நடைமுறைகள் முதல் கல்வி நடைமுறைகள் வரை அனைத்திலும் விருத்தி பண் ணப்படுவது போன்றதொரு தோற்றம் தெரிகிறது. அதனாற் போலும் சித்தாந்தம் அனைத்திற்கும் மூலமலம் ஆணவம் என்றும் அது முத்தி நிலையிலும் வலு விழத்தல் கடினம் எனவும் கூறியிருக்க வேண்டும். தருமம் என்பது புகழக்காகச் செய்வதல்ல - உயிர்கள் மேல் கொண்ட அன்பினால் ஆற்றுவது என்னும் கருத்தினை திருமந்திரமானது ''யாவர்க்குமாம் இறைவற்கொருபச்சிலை, பசுவிற்கொருவாயுறை, உண்ணும் போதொருகைப் பிடி.... அதுவுமில்லையானால் பிறர்க்கு இன்னுரையாவது ''வழங்குங்கள் எனக் கேட்கின்றது அன்றாடம் உணவுக்காகச் சமைக்கும் அரிசியில் ஒரு பிடி சேமித்தாலே மாத முடிவில் பல வயிறுகள் பசிநீக்கம்

பெறும் என்ற பிடியரிசித்திட்டத்தை - அன்னதானச் சிறப்பினை என்றோ திருமந்திரம் இவ்வாறு அறிமுகப்படுத்தியிருப்பது சைவத்தின் அடிப்படை அன்புணர்வைப் புலப்படுத்தும் நடைமுறையாகும்.

அடுத்து முதலாம் தந்திரத்தில் முப்பொருளுண்மை பற்றி ஆரம்பித்த திருமந்திரம் ஐந்தாம் தந்திரத்தில் அவற்றின் இலக்கண நடைமுறை வரம்புகளை அத்திவாரப் படுத்தி - எட்டாம் தந்திரத்தில் அவற்றின் உயர் விழுமியங்களை அணைத்துக் கொடுத்திருக்கின்ற தெனக் கருதலாம். 508 பாடல்களும் 33 பிரிவுகளையும் கொண்ட இப்பகுதியிலே சித்தாந்தம் பற்றிய மேலதிக கருத்துக்கள் பதி,பசு, பாச விளக்கங்கள், மகா வாக்கியத்தின் உட்பொருள், தத்துவ விளக்கம் அவத்தைகள் வினைப்பயன்கள் தூல சூக்கும பஞ்சாட்சாரங்கள், என்று இன்னோரன்ன பல வகைக் கொள்கை பற்றியும் விளக்கமளித்திருக்கின்றது.

## அறிவுக்கொள்கை

எட்டாம் தந்திரம் 14 ம் பகுதியிலே இடம் பெறும் 'அறிவுதயம்' என்ற பகுதி சித்தாந்த அறிவாராய்ச்சி முறைமை பற்றி அறியவிரும்புவோருக்கு அரிய விருந்தாகும். 'மெய்யறிவு' என்பது 'மெய்ப்பொருளைக் காணவிழையும் அறிவு என்ற விளக்கம் இப்பகுதியில் இடம்பெறும், பதினைந்து பாடல்களின் பொருளாக உள்ள தெனக் கூறலாம். ''எல்லாம் அறியும் அறிவுதனை விட்டு, எல்லாம் அறிந்தும் இலாப மங்கில்லை, எல்லாம் அறிந்த அறிவினை நானெனில், என்னையும் அறியும் எல்லாமறிந்தது இறை என லாம்'' (8-2596) என்ற பாடலில் இறைவன் அறிவே சொருபமான வன் எனப்படுவதலால் அவன் அறிவுடையான் அருமறையுளே செறிவுடையான்....... புலனைந்தும் கடந்த குறியுடையானொடும் கூடுவனே (8-2638)'' என்றிங்ஙனம் புலனறிவிற்குமப்பாற்பட்டது இறையறிவு பேரறிவு என்று விளக்கப்பட்டுள்ளது. இதிலிருந்து புலனனுபவத்துடன் கூடியது விஞ்ஞான அறிவு (Science of knowledge) என்பதும் இறையறிவு மெய்ஞான அறிவு என்பதனையும் உணரலாம். (Absolute Knowledge).

சைவசித்தாந்தம் அறிவினைப் பாசஞானம், பசு ஞானம் எனவகுத்து இவை உலகியல் சார்ந்த விஞ்ஞானம் அல்லது பௌதீகம் சார்ந்த புலனறிவுக்குட்பட்டவை என்றும், பதிஞானம்



அல்லது சிவஞானம் என்பது புலனனுபவம் கடந்த ஆத்மானுபவத்திற்குட்பட்ட தெனவும் விளக்கும். சாதாரண புலன் அறிவினால் இறைமையை அறிய முடியாதென்பதனை 'கற்றும் சிவஞானமில்லாக் கலதிகள் சுற்றமும் விடார் துரிசறார் மூடர்கள்' என மெய்ஞான உணர்வில்லாக் கற்றறிவாளரை திருமந்திரம் சாடியுள்ளது. 'அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவாளன்' இறைவன் என்றார் மணிவாசகர். 'அறிவறிவென்றங்கரற்றும் உலகம் - அறிவறியாமை யாருமறியார்'' (8-2362) எனவும் மெய்யறிவானது

''அறிவுடையார் நெஞ்சகலிடமாவது அறிவுடையார்
நெஞ்சம் அரும்தவமாவது அறிவுடையார் நெஞ்சொடு
ஆதிப்பிரானும் அறிவுடையார் நெஞ்சம் தங்கிநின்றார்''
(8-2364)

என விளக்கியது. ஆதலால் அகக்காட்சியினால் யோகக்காட்சியினால் - ஞானக் காட்சியிலே விரியும் ஞானாநந்த நிலையே பேரானந்தமான அறிவுச் சோதி என்பதனால்

''முகத்திற் கண் கொண்டு காண்கின்ற மூடர்காள்
அகத்திற் கண் கொண்டு காண்பதே ஆனந்தம்'' (9-2944)

என இத்தகைய அனுபூதிஞானத்தினை திருமந்திரம் மேலும் விளக்கியது. திருமூலர் சிவசித்தர் சிவயோகியாதலால் புலன் கடந்த பேரறிவின் தொடர்ச்சியான அனுபூதிஞானத்திற்கே முக்கியத்துவமளிப்பது போல் காணப்படுகின்றது.

அளவையியல் பற்றிய சிந்தனைகளில் மெய்யறிவுக் கொள்கைக்கு திருமந்திரம் சிறப்பிடம் அளித்தாலும் காட்சி, அனுமானம் பற்றிய குறிப்புக்கள் ஒரு சில இடங்களைத் தவிர அருகியே உள்ளன. ஆனால் ஆப்தவாக்கியப் பிரமாணத்திற்கே அதிகளவு முக்கியத்துவமளித்துள்ளார். 'வேதமோடாகமம் மெய்யாம் இறைவன் நூல் (8-2397)' என்ற பாடல் இதனை மெய்ப்பிக்கும். திருமூலர் ஒரு சித்தபுருசன் ஆகையால் அனுபூதிமார்க்கத்திற்கு அவர் உயர்ந்த இடத்தினை வழங்கி இருக்க வேண்டும். சமயதத்துவாதீதங்களைக் கடந்த 'ஆத்மானந்த நிலை எதுவோ அதுவே மதவெறி கடந்த மதாதீதப் பொருளாகும் என்பதே திருமந்திரத்தின் உட்பொருளாக அமைந்துள்ளது எனவும் குறிப்பிடலாம்.

## முப்பத்தியாறு தத்துவங்கள்

எட்டாம்தந்திரம் விளக்கும் இன்னோர் விடயம் சைவசித்தாந்தம் கூறும் முப்பத்தியாறு தத்துவங்கட்கும் அதிக சிறப்பு அளித்திருப்பதெனலாம். திருமந்திரம் சைவசித்தாந்தம் கூறும் முப்பத்தியாறு தத்துவங்களையும் பகுத்துக் கூறுகின்றது, வைணவத்தில் 24, சாங்கியத்தில் 25, வேதாந்தத்தில் 28, சைவசித்தாந்தத்திற்கு 36, தத்துவங்கள் உள்ளன என அறியப்படுகின்றது. அவையாவன ஆன்மதத்துவம் இருபத்தினாலு, வித்யா தத்துவம் ஏழு, எனவும் சிவதத்துவம் ஐந்து எனவும் வகுத்துக் காட்டியது. வேதாந்தம் கூறும் இருபத்தியெட்டுத் தத்துவ ஒழிபினால் தன் முனைப்பு ஒழிவதில்லை. முப்பத்தியாறு தத்துவங்களையும் அறியும் போது நான் என்னும் முனைப்புடன் சகலதும் ஒழிந்து விடுகின்றது.

''ஆறாறுக்கப்பால் அறிவார் அறிபவன் ஆறாறுக்கப்பால்
அறிவாம் அவர் கேட்க ஆறாறுக்கப்பால் அரனினிதாமே''
(8-2071)

என்பதிலே 36 தத்துவத்தையும் கடந்த சீவன் தத்துவாதீத நிலையில் தனித்த சீவனும் சிவனுமாய் உடலும் உயிரும் போலக் கலந்திருக்கும் 'அவனே தானேயாகிய அந்நெறி'என மெய்கண்டார் நூல் கூறுவதும் இந்நிலையே எனலாம்.

இறைவனானவன் முப்பத்தியாறு தத்துவங்களையும் கடந்தவனாதலால் ''தத்துவம் எங்குண்டோ தத்துவன் அங்கில்லை - தத்துவன் எங்குண்டோ தத்துவம் அங்கில்லை'' எனத்திருமந்திரம் எடுத்துக்காட்டியது. இத் தத்துவாதீத நிலையானது

''ஆறாறின் தன்மை அறியாதிருந்தேனுக்கு - ஆறாறின்
தன்மை அறிவித்தோன் பேர் நந்தி, ஆறாறின் தன்மை
அருளால் அறிந்தபின் ஆறாறுக்கப்புறமாகி நின்றானே''

என்ற படி முப்பத்தாறு தத்துவங்களையும் அறிந்து அதனின்றும் நீங்கி இறைவனடி இணைவதே உண்மையான பேரானந்தப் பெருநிலை எனற சித்தாந்தக் கருத்தினை இங்கும் காண முடிகின்றது. 'அறிவொன்று மில்லாத ஐயேழும் ஒன்றும் அறிக்கின்ற என்னை அறியாதிருந்தேன்... அருள் செய்தான் நந்தி அறிகின்ற நான் என அறிந்து கொண்டேனே' என்ற பாடலில் (8-2181) சத், அசத் என்பவற்றின் வேறுபாடும் காட்டப்பட்டது. அறிவொன்றுமில்லாத 36 ம் சடப்பொருள் அசத் எனவும், அறிகின்ற நான் - சத்துப் பொருள் எனவும் அறிவிக்கும் நந்தீஸ்வரன் - சித்துப் பொருள் எனவும் இவ்வுண்மை குறிப்பிட்டுள்ளது.

## கருமக் கொள்கை

ஒன்பதாம் தந்திரமானது சைவ சித்தாந்த சாதனைகளின் பயன்களையும் சிவானந்த கூத்துப்பற்றியும் அதே சமயம் ஊழ்வலி வினையறுத்தல், ஆசைவிடல், தூல, சூக்கும, அதிகசூக்கும பஞ்சாட்சர மகிமைகளையும் விளக்குவதாயுள்ளது. ஊழ்பற்றி விளக்கும் போது அவரவர் செய்தவினைகளே அடுத்த பிறவியில் அவரது வாழ்க்கையாகும் என்பதனைத்

''தான் முன்னம் செய்த விதிவழி தானல்லாமல் - வான்
முன்னம் செய்து வைத்ததோர் மாட்டில்லை - நான்
முன்னம் செய்ததே நன்னிலமானதே'' *(9-2848)*

என்றவாறு முன்னம் செய்த வினைகளே பிறவிக்குவித்தாகும் எனப்பட்டது. ஆதலால் பக்தி செய்து பற்றறுப்பதே விடுதலைக்கு வழி என்பதனையும் பத்திப்பட்டடோர்க்குப் பணி ஒன்றுமில்லை *(8-2629)* எனவும் "முத்திக்குவித்து முதல்வன்பாதம் – பத்திக்கு வித்துப் பணிந்து பற்றலே'' *(8-2506)* எனவும் கூறுவதால் ''தன்னை அறிந்த தத்துவ ஞானிகள் முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பர்'' *(8-2611)* என்பதனாலும் பற்றுவிடுதலே வினைகளின்றும் நீங்கும் வழி எனக் கூறப்பட்டது அத்துடன்

''ஆசையறுமின் ஆசை அறுமின் - ஈசனோடாயினும்
ஆசையனுமின் - ஆசை விட விட ஆனந்தமாமே''

என ஆசையற்றவர்கட்கு இவ்வுலகமே ஆனந்தமானது எனச் சித்தர் நிலையில் நின்றும் விளக்கியிருக்கின்றது.

## பஞ்சாட்சர ஜெபம்

இதற்குப் பஞ்சாட்சர ஜெபம் நல்ல நாமகரண முறை என்பதனை 9 ம் தந்திரத்தில் ''அனைத்துவேதங்களும் அனைத்தாகமங்களும் - ஐம்பத்தேழு அட்சரங்களும் தூல பஞ்சாரமாகிய அஞ்செழுத்தால் அடங்கிடும்'' (9-2698) அது நமசிவாய என்னும் மந்திரமாகும். ''நமசிவாயக் குளிகையிட்டுப் பொன்னாக்குவன்

கூட்டையே'' (9-2709) எனவும் 'சிவ சிவ என்னச் சிவகதி எனவும் (9-2716) சூக்கும் பஞ்சாட்சரத்தை விளக்கியது திருமந்திரம். 'சிவாய சிவசிவ என்றே சிந்தை அவாயம் கெட நிற்றல் ஆனந்தமாமே' (9-2718) என அதி சூக்கும் பஞ்சாட்சர ஜெபமும் திருமந்திரத்திலே உணர்த்தப்பட்டது.

## வேதாந்த சித்தாந்த சமரச நிலை

அடுத்துத் திருமந்திரம் எட்டாம் தந்திரத்தில் சிறப்பித்துப் பேசும் கொள்கை வேதாந்த சித்தாந்தச்சமரச நிலை எனலாம். 'ஆறந்தம்' எனப்படும் பதினைந்தாம் பகுதியில் இது பற்றிய கருத்துக்கள் நிறைய இடம் பெற்றுள்ளன திருமூலர் தம் காலத்து வழக்கிலிருந்த அனைத்துதத்துவ சித்தனைகட்கும் தமது நூலிலே இடமளித்துள்ளார். வேதாந்தம் என்ற சொல்லினை நாற்பத்தியிரண்டு இடங்களில் திருமந்திரம் உபயோகித்துள்ளது. நால் வேதங்களின் முடிபே சாம வேதவசனமான தத்துவமஸி என்பதனையும் 'பரந்த வேதப்பரப்பெலாம் இன்று சொல் நூலாய் எடுத்துரைத்தேன்' என்பதில் வேத நெறியின் சிறப்பினையும் வலியுறுத்தினார். வேதத்தின் அந்தமான உபநிடத சிந்தனையே திருமூலரின் வேதாந்தமெனலாம். திருமூலரின் வேதஞானத்தினை வேதச்சிறப்பென்னும் பகுதி அறிவிக்கும். வேதமும் ஆகமமும் ஒன்றினையொன்று தழுவியவை என்பதனாலேயே வேதம் மந்திரம் - ஆகமம் தந்திரம் எனத் தமது நூலிற்கிட்ட பெயர்மூலம் தெளிவுபடுத்தினார்.

இங்ஙனமாக சாயுச்சியம் எனப்படும் 'தான் அவனாகும் நிலையின் தொடக்கம் வேதாந்தம் அதன் முடிவு சித்தாந்தம்; ஆகையினால் இவற்றுக்கிடையிலே உயர்வு தாழ்வுகிடையது எனத் திருமந்திரம் உணர்த்தியது. இவ்வாறு வேதாந்த சித்தாந்த சமரச நிலையினையும் கூறியதனால் அனைத்துத் தத்துவங்களையும் கடந்த உயர் நிலை விழுமியம் சார்ந்த ஆன்மீக நோக்கு திருமந்திரத்தில் விளக்கப்பட்டுள்ளதெனலாம். ''வேதாந்த சித்தாந்தச் சமரசநிலை கண்ட வித்தகச்சித்தர் கணம்'' என இதனைத் தாயுமானாரும் சிறப்பித்தார் வேதாகமத் தொடர்பானது 'வேதம்பசு அதன் பால் மெய்யாகமம்' எனவும்

''தேவர் குறளும் திருநான்மறை முடிவும் மூவர்தமிழும்
முனிமொழியும் - கோவை திருவாசகமும் திருமூலர்
சொல்லும் ஒருவாசகம் என்றுணர்''



எனவும் 'வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத்துறை விளங்க' எனவும் இதனை பின்வந்த மெய்யடியார் பலராலும் எடுத்து விளக்கப்பட்டமை இவ்வுண்மையினை வலியுறுத்துவதாகும். இவ்வாறாக வேதவேதாந்தத்தினையறிவதே சித்தாந்தத்தை அறியும் முதற்படி என்பதனை திருமந்திரம் புலப்படுத்துகின்றது.

## வேதாந்தத் தெளிவு சிந்தாந்தம்

'வேதக்காட்சிக்கும் உபநிடத்துச்சியில் விரித்த போதக் காட்சிக்கும் காணலன், புதியரிற் புதியன் ஆதிக்காதியான்' எனவேத வேதாந்தம் கடந்தவனாக இறைவனைக் கந்தபுராணமும் சித்தரித்தது[17] 'தானான வேதாந்தம் தத்துவமஸி எனவும், தான் என்னும் சித்தாந்தம் சிவோகம் பாவனை நிலையது' எனவும் இதனை (8-2372) திருமந்திரம் விரிவாக விளக்கியது. ஆறந்தங்களையும் கூறவந்த திருமூலர் அவற்றுள் வேதத்தின் அந்தமிக்க சித்தாந்தம் ஒன்றே ஆறந்தங்களின் முடிவான பொருள் எனவும் கருதினார் (8-2370) இக்கருத்தோட்டத்தினை

''வேதசிரப்பொருளை மிகத் தெளிந்து சென்றார் சைவத்
திறத்தடைவர்..... பின்ஞானத்தால் சிவனடியைச் சேர்வர்''

என்ற சித்தியார் வாக்காலும் உணரலாம். இக்கருத்தானது 'சிவமாதல் வேதாந்த (8-2393) சித்தாந்தமாகும் நவமான வேதாந்த ஞான சித்தாந்தம்' இது என விளக்கியதுடன் இறுதியாகப் 'பதியான ஈசன் பகர்த்தது இரண்டு.... வேதமுறையாலமைந்த......வேதாந்த சித்தாந்தமே (8.2404) என்று கூறியதனாலும் வேதாந்தம் தொடக்க நிலை சித்தாந்தம் முடிந்தமுடிபான நிலை என்பதும் புலப்படும். இதனை அடியொற்றியே

''புறச்சமயத்தவர்க்கிருளாய் அகச்சமயத்தவர்கொளியாய்....
அறத்தினால் விளைவதாய் அத்துவிதமாகும் சிறப்பினதாய்
வேதாந்தத்தெளிவாம் சைவசித்தாந்தத்திறன் தெரிக்கலுற்றாம்''

எனச் சிவப்பிரகாசமும் இந்நிலைப்பாட்டினை அங்கிகரித்துள்ளதெனல் பொருந்தும். அதனால் 'சைவமாம் சமயம் சாரும் ஊழ் பெறலரிது' எனப் பின் வந்த மெய்யடியார்களும் பாடினர். அத்துடன் உலகதத்துவங்களிலேயே திருமந்திரம் மிகச்சிறந்ததென ஜே.எம். நல்லா சாமிப் பிள்ளை பாராட்டுவதற்கும் அதன் உள்ளடக்கமே காரணமாயிற்று.[18]

## சமயாதீதப் பரம்பொருட் கொள்கை:

இதுவரை கூறியவற்றால் சைவசித்தாந்தத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் யாவும் திருமந்திர காலத்திலேயே முழுமையான வளர்ச்சிபெற்றுள்ளதனை ஒருவாறு அறியலாம். ஆகையினால் கி.பி. 6 ம் நூற்றாண்டிலிருந்தே தமிழகத்தில் சைவசித்தாந்த எழுச்சி ஆரம்பமான முறையினைத் திருமந்திரம் நன்கு அறிமுகப்படுத்தியிருக்கின்றதெனக் கருதமுடியும். அடுத்துவந்த 7 ம் நூற்றாண்டு முதல் 10 ம் நூற்றாண்டு வரையுள்ள காலப்பகுதியிலே சித்தாந்தத்தினுடைய வளர்ச்சியும் எழுச்சியும் செயல் வழியாக மக்கள் மத்தியில் அனுபவத்திற்குக கொண்டு வரப்பட்டு சாதனை வழி நிலை நிறுத்தப்பட்டது.[19] பக்திமார்க்கம் இதனைச் சாதிப்பதற்குச் சிறந்த வழியாக அமைந்தது அது மட்டுமன்றிக் கி.பி. 9 ம் நூற்றாண்டிலிருந்து வட நாட்டிலும் மத்திய இந்தியப்பகுதிகளில் சத்யோஜோதி என்பாரால் சிவாகம வழிவந்த சைவசிந்தாந்தக் கோட்பாடுகள் அறிமுகம் செய்யப்பட்டிருந்தன.[20]

சத்தியோஜோதி சிவாச்சாரியாரைத் தொடர்ந்து 1 ம் ராமகண்டர், சிறிகண்டர், நாரயணகண்டர் 2ம் ராமகண்டர் என்பவர்களாலும் போஜ மன்னன் போன்றோராலும் கி.பி. 11 ம் நூற்றாண்டு வரை வடமொழிச் சைவசித்தாந்தம் பெருவளர்ச்சி கண்டதை 'அஷ்டப்பிரகரணம்' என்ற நூற் தொகுதிப்பின் மூலம் அறியமுடியும். தமிழ் நாட்டிலும் திருமுறைத் தொகுப்பினையடுத்து கி.பி. 12 ம் நூற்றாண்டிலே வாசீசமுனிவர் என்பவரால் 'ஞானாமிர்தம்' என்னும் சித்தாந்த நூல் எழுதப்பட்டது.[21] அதனையடுத்து திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் என்ற சித்தாந்த சாத்திர நூல்களும் எழுந்தன. இவ்வாறாகச் சித்தநிலையிலே விரிவடைந்து வளர்ந்த சித்தாந்தக் கோட்பாடானது கி.பி 13 ம் நூற்றாண்டிலே மெய்கண்ட தேவநாயனர் என்பவரால் திட்ட மயப்படுத்தப்பட்ட கோட்பாடுகளுடன் கூடிய முறைப்படுத்தப்பட்டதத்துவமாக உருவாக்கம் பெறுவதற்கு வழிகோலப்பட்டது.

திருமந்திரத்தில் இடம் பெற்ற சித்தாந்தக்கோட்பாடுகளை அவதானிக்கும் போது ஆங்கு அவை முறையியல் படுத்தப்படாத தன்மை காணப்படினும் அவற்றின் முழுமையான - நிறைவான கொள்கைகள் அனைத்தையும் திருமந்திரமானது தன்னகத்தே கொண்டுள்ளதாகக் காணப்படுகின்றதெனக் கூறினால் மிகையாகாது. சமயாதீதமே திருமந்திரத்தின் மெய்யியற் கொள்கையாக விளங்குகின்றது. ''ஆகமக் கருத்துக்கள், பெயர்கள் திருமந்திரத்தில் காணப்பட்டபோதும் சைவசித்தாந்தம் ஓர் முழுமையான மெய்யியற் கொள்கையாக திருமந்திரத்தில் காணப்படவில்லை''[22] என்று கூறுவதற்குப் பதில் முறைப்படுத்தப்பட்ட சிந்தனையாக அமையவில்லை எனக் கூறுவது பொருத்தமானதாகும். ஆதலால் மெய்கண்டாருக்கு முற்பட்ட சைவசித்தாந்த வளர்ச்சியானது தமிழகத்தில் கி.பி. 6 ம் நூற்றாண்டிலிருந்தே ஆரம்பமாகி சிறப்பான வளர்ச்சியினை எட்டியிருந்தது என்பதனை இங்ஙனம் அறிய முடியும்.



திருமந்திரம் இன்றுள்ள சாத்திர நூல்கள் யாவற்றிற்கும் மூலமாக நின்ற முதல் சாத்திர நூல் என்பது மேற் கண்டவிடயங்களிலிருந்து புலப்படும் உண்மை எனலாம். திருமந்திரத்தை மூல நூலாகக் கொண்டே மெய்கண்டசாத்திர நூல்கள் தமது கொள்கையினை உருவாக்கின என்பதனை வெள்ளைவாரணார் என்பாரும் கூறுமிடத்து

> ''திருமந்திரப் பகுதிகளைக் கூர்ந்து நோக்குமிடத்து சிவஞானபோதம், சித்தியார் முதலிய சைவசித்தாந்த சாத்திரங்களாகிய மெய்கண்ட நூல்கள் அனைத்திற்கும் சைவத்திருமுறைகள் பன்னிரண்டிலும் பத்தாம் திருமுறையாக விளங்கும் திருமந்திரமே முதல் நூலாகத்திகழும் சிறப்புடையது''[23]

எனக் குறிப்பிட்டுள்ளார்.

## ஆன்மநேய ஒருமைப்பாடு :

திருமூலர் ஓர் சித்தமகாபுருஷராகவும் திகழ்பவர். அவர் தமது காலத்துச் சமயங்கள், தத்துவங்கள் அனைத்தையும் விளக்கி அவற்றினைத் தாமுணர்ந்தவாறு திருமந்திரத்தில் உணர்த்தியுள்ளார். சமயப் பிரிவுகள் என்று தோன்றினவோ அன்றே சமயப் பூசல்களும் தோன்றிவிட்டன. சமயங்கள் என்று சொல்லப்படுபவை சடங்குகள், கிரியைகள், கேளிக்கைகள் என்னும் உலகியற் கொண்டாட்டங்களுடன் மட்டுமே நின்று சண்டையிடுவனவாகத் தோன்றுகின்றன.

எனவே சமயமும் ஒரு போதைப் பொருள் என்பதனை 'மயக்கும் சமயம் மலமற்றுமூடர் (316)'[24] என அவற்றினைக் திருமூலர் கண்டிக்கின்றார். இவற்றிலே மயக்குண்டு கிடக்கும் சமயங்கள் யாவும் மக்களைத் தம்பக்கம் இழுத்து பெரும்பான்மை, சிறுபான் மை அரசியல்லாபம் தேடுவதற்கொப்பாகக் காணப்படுகின்றனவே தவிர - அன்புணர்வுடன் ஒன்றிய மனிதநேயம், இரக்கம், கருணை, நம்பிக்கை விஸ்வாசத்துடன் கூடிய 'ஆன்மநேய ஒருமைப்பாட் டினை' மக்களிடையே நிலைபெறச் செய்யும் போது தான் அவை உண்மையான சமய இலக்கினை அடைந்ததாகக் கொள்ள முடியும்.

சமய சமரச நிலை மக்களிடையே இன்று மலர்ந்து, வருவதும் ஓரளவு உண்மையே. சைவசித்தாந்த நான்கு மார்க்கங்களில் சரியை, கிரியை முறைகளை அனுட்டிப்போர் பலரும் சமயாபிமானத்துடன் நின்று விடுகின்றனர். சரியையில் ஞானம், கிரியையில் ஞானம், யோகத்தில் ஞானம், ஞானத்தில் ஞானம் என முப்பத்தியாறு பயிற்சிக் களங்களைச் சித்தாந்தம் பேசும். அவற்றினை அனுஷ்டித்து பிறவாநிலை அடைந்த சமய அடியார்களைப் பற்றிப் பெரிய புரா ணம் விதந்துகூறும் ஆயினும், மக்களிற் பலருக்கும் ஞானமார்க் கத்தைப் பற்றிச் சிந்திப்பது சிரமமான காரியமாக இருக்கின்றது. ஞானச் செல்வியாவது எல்லையற்ற பெரும் கருணைத்திறம். சகல ஜீவராசிகளையும் சமபார்வையில் நோக்குவது. இந்தப் பண்பு மாத்திரம் நிலைத்துவிட்டால் அதுவே சமயாதீதமான ஆன்மநேய ஒருமைப்பாடு நிலைபெற வழிவகுத்துவிடும்.

அப்போதுதான் சமயாதீதமான பரம்பொருளைக் காண முடியும் என்பது சைவசித்தாந்த இலட்சியமாகும். இத்தகைய ஞான சாதனை பற்றித் தாயுமானார் சிந்தனைச் செவ்வியை நோக்கினால்

> ''சைவசமயமே சமயம் - சமயாதீதப் பழம் பொருளைக் -
> கைவந்திடவே மன்றுள் வெளி காட்டும்...... சேரவாரும்
> செகத்தீரே''

என்ற பாடலில் தாயுமான சுவாமிகள் தன் அனுபவஞானத்தை எடுத்துக்கூறி சமயங்களையும் கடந்த ஆன்ம நேயமே சைவத்தின் உயர் விழுமியமாகக் கருதினார். சைவசித்தாந்தக் கோட்பாட்டு வளர்ச்சியில் திருமந்திரமானது ஏனைய தத்துவக் கோட்பாடுக ளைவிடச் சைவசித்தாந்தத்திற்கே அதிகளவு முன்னுரிமை வழங்கி யிருக்கின்றதென்பதில் ஐயமில்லை. ஆனால் 'திருமந்திரம் ஓர் சைவசித்தாந்த நூல்'' எனக் கூற விரும்பினால் திருமந்திரத்தைப் போல சைவசித்தாந்தமும் ஓர் ''சமயாதீதமான மெய்ப்பொரு



ளியல்'' என்பதைப் புரிந்து கொள்ளவேண்டும். திருமந்திரம் ஓர் சைவசித்தாந்த நூலெனக் கூறுவது முக்கியமல்ல - அந்த இலக்கியம் சைவசித்தாந்தத்தை எத்தகைய உயர்வான நிலையில் வைத்துப் பேணியுள்ளதென்பதையும் முக்கிய கவனத்திற் கொள்ள வேண்டும்.

## அடிக்குறிப்புக்கள்

1. மாணிக்கவாசகம், டாக்டர், இரா; திருமந்திர ஆராய்ச்சி (கலாநிதிப்பட்ட ஆய்விற் காக சமர்ப்பிக்கப்பட்டது) அனனை அபிராமி வெளி யீடு, சென்னை, 1982, பக். 73 - 76, 88.
2. மாணிக்கவாசகம்; டாக்டர், இரா, நம்நாட்டுச் சித்தர்கள், அன்னை அபிராமி அருள், சென்னை, 1982, பக்; 231 - 234
3. இராசமாணிக்கனார், மா; சைவசமயவளர்ச்சி, பாரி நிலையம், சென்னை, 1972, பக் : 57

   கலைவாணி இராமநாதன்; வேதபாரம் பரியமும் சைவசித்தாந்தாந்தமும், ஸ்ரீ ரெங்கா பிறின்டர்ஸ், மதுரை, 1992, பக் : 7 - 8

   சுப்பிரமணியபிள்ளை, கா; தமிழ் இலக்கியவரலாறு, இரண்டாம் பாகம், ஆசி ரிய நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1949, பக். 299

   Collected Lectures on Saivasiddhanta, 1963 - 1973., Annamalai University, 1978, P. 308

   Siddha Lingaiah, Dr. T.B; Origin and Davelopment of Saivasiddhanta up to 13th century, Nepoleon press, Madurai, 1979, PP : 12 - 13

திருமந்திரம்; — பதிப்பாசிரியர், T.M. குமர குருபிள்ளை, திருப்பனந் தாள் காசிமட வெளியீடு, ஸ்ரீ வைகுண்டம், 1968, பக். 25

4. மேற்படி; — பாடல் : 1533 : 1535

5. கலைவாணி இராமநாதன்; — மு. கு. நூ; பக். 19

6. அருணைவடிவேல் முதலியார். சி., — சைவசமயம் தமிழர்நெறி; சைவசித்தாந்தப் பொன் விழாமலர், சைவசித்தாந்த மகாசமாச வெளியீடு, சென்னை, 1955, பக் : 148

7. இரத்தினசபாபதி. வை; — திருமுறைத் தெளிவே சிவ ஞான போதம், இராதாக்கி ருஸ்ணன் மெய்யுணர்வு மேனிலைக்கல்வி நிறுவ னம், சென்னைப் பல்க லைக்கழகம், 1979, பக் : 178.

8. Rohan, A. Dunuwila; — Saivasiddhanta Theology, Motilal Banarsidas, 1985 P : 60

மாணிக்கவாசகம், டாக்டர், இரா: — திருமந்திர ஆராய்ச்சி பக் : 270

9. சிவப்பிரகாசம், — திருவிளங்கம் புத்துரை, கூட்டுறவுத் தமிழ் நூற் பதிப்புக்கழகம், யாழ்ப் பாணம், 1974, பாடல் : 13

10. கந்தையா, பண்டிதர், மு., — இந்துதர்மம், மாத இதழ், ஐப்பசி - கார்த்திகை, 1994, பக் : 40

11. வச்சிரவேல் முதலியார், க., — சித்தாந்த சைவத்தின் முதற்பொருளும் அணை யுநெறியும், சைவசித்தாந் தப் பொன்விழா மலர், சென்னை, 1955, பக் : 169.



12. Siddhalingagaiah, T. B ; — Op-cit, PP. 52 - 54.

13. சிவஞான போதச் சிற்றுரை, — ஆறுமுகநாவலர் பதிப்பு, சூ : 2. 2. 2.

14. திருமந்திரம், — திருப்பனந்தாள் காசிமட வெளியீடு, திருமூலர் வர லாறு, பக் : 14.

15. வேதநாதன், மா, — சித்தர் சமயதத்துவம் - ஓர் ஆய்வு அமரர், இரத்தின சபாபதி பாக்கியநாதன் நினைவுச் சொற்பொழிவு 2. 5. 1995, (பிரசுரிக்கப்ப டாதது) பக் : 10 - 16

16. இராசமாணிக்கனார், டாக்டர், மா ; — மு. கு. நூ. பக். 79
சிவப்பிரகாசம், பக். 13-15

17. சிவபாத சுந்தரனார், எஸ்., — கந்தபுராண விளக்கம், பக் . 27

18. Nallasamypillai, J. M.; — St. Sekkilar's Periya puranam, P. 70.

19. Rohan. A. Dunwilla; — Op cit, P. 46.
Rohan. A. Dunwilla; — Op cit, P. 61.

21. சுப்பிரமணியபிள்ளை. கா., — இலக்கிய வரலாறு முத லாம் பாகம், சென்னை, 1949, பக் : 299.

22. கிருஷ்ணராஜா, கலாநிதி. சோ; — மெய்கண்டசாத்திரங்கட்கு முற்பட்ட சைவசித்தாந் தம், பண்டிதமணி நினை வுச் சொற்பொழிவு, 27. 3. 95 (கைப்பிரதி) பக். 1.

23. வெள்ளைவாரணனார், வித்துவான், — பன்னிருதிருமுறை வர லாறு, பகுதி 1, அண்ணா மலைப்பல்கலைக்கழகம், பக் : 479 - 507.

24. கலைவாணி இராமநாதன்; — இந்துதர்மமும் வர்ண தர்ம மும், ஸ்ரீ ரங்காப் பிறின் டர்ஸ், மதுரை, 1992, பக். 55.

# அஷ்டப்பிரகரணமும் சைவசித்தாந்தமும்

## - ஒரு அறிமுகம்

சைவசமயத்தின் அதி நுட்பமான உள்பொருட்களை விளக்கும் அதியுயர்ந்த தத்துவம் சைவசித்தாந்தமாகும். 20 ம் நூற்றாண்டின் ஆரம்பத்திலே வேதாந்ததத்துவத்திலே ஒரு விழிப்புணர்ச்சி மேற்கு நாடுகளிலும் ஏற்பட்டமை போல சைவசித்தாந்த எழுச்சியானது தற்காலத்தில் மேற்குல நாடுகளையும் ஆக்கிரமித்து வருவது சைவசித்தாந்த மெய்யியலில் மீண்டும் ஒரு மலர்ச்சியை உணர்த்தி நிற்கின்றது. 'தென்னாட்டு மக்களின் பேரறிவின் பெரும் தத்துவம் சைவசித்தாந்தம்' என்றார் ஜி.யு. போப், சைவசித்தாந்தம் பதி,பசு, பாசம் எனப்படும் கடவுள், உயிர், உலகம் என்னும் முப்பொருட் தத்துவங்களின் அடிப்படைகளை ஆராய்ந்து தெளிவதில் வெற்றி கண்ட அரும் பெரும் மெய்யியற் சிந்தனையாகும்.

இத்தகைய சைவசித்தாந்த மெய்யியலை விளக்குவதற்குத் தமிழிலே 'மெய்கண்ட சாத்திரங்கள்' எனப்படும் பதினான்கு நூல்கள் அடிப்படை அதிகார நூல்களாக அமைந்துள்ளன. அவற்றுள் மெய்கண்டாரது சிவஞான போதம் சைவசித்தாந்த 'மணிமுடி' எனப்போற்றப்படும் தலைசிறந்த நூலாகும். இந்நூல் கி.பி. 13 ம் நூற்றாண்டைச்சேர்ந்தது. சைவசித்தாந்தம் வேதம் பொது நூல் எனவும் ஆகமம் சிறப்பு நூலெனவும் ஏற்றுக்கொள்ளும் 'வேத மோடாகமம் மெய்யாம் இறைவன் நூல் ஓதும் பொதுவும் சிறப்பு மென்றுணர்க' என இதனைத் திருமந்திரம் குறிப்பிட்டது. சைவசித்தாந்தம் பற்றி விளக்கும் காலத்தால் முற்பட்ட முதற் தமிழ் நூலாகிய திருமந்திரம் கி.பி. 6 ம் 7 ம் நூற்றாண்டைச் சேர்ந்த தெனக்கருதப்படும்.[1]

### அறிமுகம்

சைவசித்தாந்த சாஸ்திரங்களும் இக்கொள்கையினையேற்று 'பல்கலையாகம வேதம் யாவினும் கருத்துப்பதி பசுபாசம் தெரித்தலாம்' எனவும், 'சுருதி சிவாகமம் ஒழியச் சொல்லுவதொன் றில்லை' எனவும் குறிப்பிட்டுள்ளன.[2] ஆகையினால் சைவசித்தாந் தப் பொருளை இனிது விளக்கும் நூல்களில் சிவாகமங்கள் பெரும் சிறப்பினைப் பெற்றுள்ளன. அக்காரணம் பற்றியே ''சிவாகமங்கள் சித்தாந்தமாகும்'' எனச் சிவஞான சித்தியாரும் எடுத்து விளக்கியது[3] இவ்வாறாகச் சிவாகமங்கள் சித்தாந்த முதல் நூல்களில் காலத்தால் முற்பட்ட இலக்கியங்களாக இடம் பெற்றுள்ளன. காமிகம் முதல் வாதுளமீறாகச் சிவாகமங்கள் இருபத்தியெட்டாகும். இவை சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பாதங்களையுடையன, அவற்றிலே பதிபசு பாச முப்பொருட் தத்துவங்களையும் அவற்றின் இலக்கணங்களையும் பசுவானது பாசத்தினின்றும் நீங்கிப் பதிப் பொருளையடையச் செய்வதற்கான சாதனங்களையும் சாதனங்கள் முற்றுப் பெற்ற பின் நிகழும் முத்தி நிலையினையும் தர்க்கமுறையில் செவ்வனே விளக்குவது ஞானபாதமாகும். ஞானபாதமானது மிக விரித்த நுட்பமான உட் பொருள் கொண்டது. அவற்றினை உள்ள வாறு தொகுத்தும் வகுத்தும் உரைவிளக்கம் செய்து எட்டுப்பிர கரணங்களாக வடமொழி அறிஞர் பலர் ஆக்கித் தந்துள்ளனர் அவற்றின் தொகுப்பே 'அஷ்டப்பிரகரணம்' எனப்படும் வடமொழிச் சைவசித்தாந்த நூல்களாக முறைப்படுத்தப்பட்டுள்ளன.[4]

இவையனைத்தும் வடமொழியிலேயே அமைந்துள்ளன. வடமொழியில் காணப்படும் சைவசித்தாந்த நூல்களில் அஷ்டப் பிரகரண நூல்கள் காலத்தால் மிக முற்பட்டவையாகும். தமிழில் சைவசித்தாந்த தத்துவத்தை மெய்கண்ட சாத்திரங்கள் முறைப்படுத்தி விளக்குவன போன்று-வடமொழியில் அஷ்டப்பிரகரண சாத்திரங் கள் சைவசித்தாந்த மெய்யியற் கொள்கையினை தருக்க முறையில் விளக்கி நிற்கின்றன. பல்வேறு பிரகரணங்கள் எழுந்த போதும் ஞானபாதத் தொடர்பு காரணமாக 'எட்டு நூல்களே' தொன்று தொட்டுச் சிறப்பாக 'அஷ்டப்பிரகரணம்' என வழங்கப்படுகின்றன. தமிழ் நாட்டிலே தேவகோட்டையைச் சேர்ந்த 'சித்தாந்த சிவாகம பரிபாலன சங்கம்' என்ற அமைப்பினைச் சேர்ந்த பெரியவர்களே அந்நூல்களைத் தமிழுலகிற்கு அறிமுகம் செய்து வைக்கும் சீரியபணியினை முதன் முதலாக மேற் கொண்டவர்கள் எனலாம்.

இவ்வெட்டுப் பிரகரணங்களும் வருமாறு:-

1. தத்துவப்பிரகாசிகை
2. தத்துவசங்கிரகம்
3. தத்துவத்திரய நிர்ணயம்

*4. இரத்தினத்திரயம்*

*5. போககாரிகை*

*6. நாதகாரிகை*

*7. மோட்சகாரிகை*

*8. பரமோட்ச நிராச காரிகை*

**என்பன அவற்றின் வரிசைப்படுத்தப்பட்ட** பெயர்களாகும்.[5] **அப்பிரகரணங்களுள் முதற் குறிப்பிட்ட மூன்று நூல்களும் ஒரு தொகுதியாகவும், பின்னுள்ள ஐந்து நூல்களும் இன்னோர் தொகுதியாகவும் மொத்தமாக இரண்டு தொகுதிகளாகத் தமிழிலும், வட மொழியிலும் வெளியிட்டனர். இதன் மூலமாகத் தேவ கோட்டை சித்தாந்த சிவாகம** பரிபாலன சங்கத்தார் தமிழ்ச் **சைவசித்தாந்த உலகிற்கு ஆற்றியபணி அளவிடற் கரியது.** தமிழ **கத்தில் 1980 ம் ஆண்டு வரை இந்நூற் தொகுதிகள் தேடிப்** பெற்றுக் **கொள்ளுமளவிற்கு மறக்கப்பட்டிருந்தன.** வடமொழிப் பேராசிரியர் **டாக்டர், ஜி.சுந்தரமூர்த்தி அவர்களின் பெருமுயற்சியால் இந்நூற் பிரதியொன்று மிகவும் நைந்த நிலையில் சித்தாந்த** சிவாக சங்கத் **தார்க்கு வேண்டியவர்களிடமிருந்து பெறப்பட்டது.** வடமொழியில் **காணப்படும் சைவசித்தாந்த நூல்களை தமிழச்சித்தாந்த உலகிலே அறிமுகப்படுத்துவதில் தணியாத ஆர்வம் கொண்ட** பேராசிரியரால் **'அஷ்டப்பிரகரணம்' என்ற நூல் மீண்டும்** அறிமுகமான தெனில் **மிகையில்லை.[6] வட மொழிச் சிவஞானபோதம், தத்துவப் பிரகா சிகை போன்ற சித்தாந்த நூல்களும் அன்னாரால் வெளியிடப்பட்ட னவாகும்.[7]**

**சிவாகமங்களின் ஞானபாதமாகிய சைவசித்தாந்த** மெய்யியலை **முறைப்படி (System) தர்க்கரீதியாக** நிலை நாட்ட எழுந்த நூல்களில் **சிவஞானபோத முதன்மையை எவராலும் மறுக்க முடியாது. சிவஞான போதத்திற்கும்** சிவாகமங்களில் ஒன்றான ரௌராவாகமத் **திற்குமுள்ள நெருக்கம் பலரும் அறிந்த ஒன்றாகும். அதைப்போன்று அஷ்டப்பிரகரணங்கட்கும்** சிவாகமங்கட்குமுள்ள நேரடித் தொடர்பு **மிகவும் இறுக்கமானது,** உபநிடதங்களின் சாரமாக 'பிரம்மசூத்திரம்' **விளங்குவது போல சிவாகமங்களின் ஞானாபாதசாரமாக** அஷ்டப் **பிரகரண நூற் தொகுப்பும் அமைந்துள்ள தெனலாம்.** அஷ்டப்பிர



கரண நூற்தொகுப்பானது சைவசித்தாந்த மெய்யியலின் மிக விரிந்த அடிப்படைகளை நுணுக்கமாக ஆராய்கின்றதென டாக்டர் தகாரே என்பாரும் தனது நூலில் குறிப்பிட்டுள்ளார்.[8]

## காலம்:

அஷ்டப்பிரகரண நூற்தொகுப்பின் காலமானது கி.பி. 8 ம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 12 ம் நூற்றாண்டு வரையுள்ள காலப்பகுதி யினைக் கொண்டதாக இருக்கின்றன. இக்காலப்பகுதிகளிலே தான் சைவாகமங்களான ரௌரவம், பௌஷ்கரம், சுவாயம்புவம், மிருகேந்திரம் முதலியவற்றிற்கு விருத்தியுரைகள் எழுதப்பட்ட காலம் எனவும் கருதப்படும்.[9] அஷ்டப் பிரகரண நூல்களில் ஐந்து நூல்கள் சத்தியோ ஜோதி சிவாச்சாரியாராலும் ஏனைய மூன்றும் ஸ்ரீகண்டாச்சார்யார், ஸ்ரீபட்டராம கண்டர், போஜதேவர் என்போ ராலும் எழுதப்பட்டனவாகும். இவர்களில் சத்யோஜோதி சிவாச்சாரி யார் பிருகஸ்பதி என்பாருடன் சேர்ந்து சிவாகமஞான பாத சைவசித் தாந்தத்தை முறைப்படுத்தும் சைவசித்தாந்த மெய்யியலின் தொடக் கத்திற்கு கி.பி. 9 ம் நூற்றாண்டிலே வடநாட்டிலே வித்திட்டவர்க ளில் 'முதல்வராக'விளங்குகின்றனர்.[10]

இவர்களைத் தொடர்ந்து சைவசித்தாந்த மெய்யியற் கோட்பாட் டின் பரிணாம வளர்ச்சியில் 1 ம் இராம கண்டர், ஸ்ரீ கண்டர், நாராயணகண்டர், 2 ம் இராம கண்டர், போஜதேவர் ஆகியோர் கி.பி. 10 ம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 12 ம் நூற்றாண்டு வரை அதனைப் பெருவளர்ச்சியடையச் செய்தசான்றோராகக் காணப்படுகின்றனர்.[11] அஷ்டப்பிரகரண நூற்தொகுப்பினை எழுதியவர்களில் சத்தியோ ஜோதி சிவாச்சார்யாரே காலத்தால் மிக முற்பட்டவராவார். மத்திய இந்தியாவிலே காஷ்மீரத்தைச் சேர்ந்தவரான அவ்வாசிரியர் உக்கிர ஜோதி என்பாரைக் குருவாகக் கொண்டு சிவாகம சித்தாந்த செந்நெறி யில் ஆழமான புலமையும் பயிற்சியுமுடையவராயிருந்தார். காஷ்மீரத்தில் வளர்ந்த சித்தாந்த சைவமாகிய சுத்தாத் வைதத்தை பின்னர் வடநாடெங்கணும் பரவச் செய்வதில் சத்யோஜோதி சிவாச்சார்யார் பெரு வெற்றி கண்டமையினால் அவர் சித்தாந்தத் திலே ஓர் 'சுடர் ஒளி' எனவும் போற்றப்பட்டார்.[12] (Sudden Light)

திருமூலரையும் கைலாசத்திலிருந்து வடக்கே வந்தவரென பெரியபுராணம் கூறும் கைலாசத்திற்கு வடகிழக்கேயுள்ள காஷ்மீரில் தான் 'ஆகமாந்தம்' எனப்படும் சித்தாந்த சைவம் தோன்றி - அது காஷ்மீரத்தில் 'பிரத்தியபிக்ஞான தரிசனம்' எனவும் தென்னாட்டில்

'சுத்தாத்து வித சைவசித்தாந்தமாக' வளர்ச்சியடைந்தமையினையும் திருமந்திரம் தரும் செய்திகளிலிருந்தும் அறிகிறோம்.[13] எனவே கி.பி. 6 ம் நூற்றாண்டிலிருந்து தமிழகத்தில் 'சைவசித்தாந்தமாக' வளர்ச்சியடைந்து வந்த மெய்யியலானது கி.பி. 9 ம் நூற்றாண்டிலிருந்து வட நாட்டிலும் அஷ்டப்பிரகரண சைவசித்தாந்தமாக' பெருவளர்ச்சி கண்டதை இவற்றிலிருந்து உணர முடியும். கி.பி. 10 ம் நூற்றாண்டில் 'சிவதிருஷ்டி' என்ற நூலையாக்கிய சோமநாதரும் 'பரமார்த்த சாரம்' என்ற நூலை இயற்றிய அபிநவகுப்தரும் சத்தியோஜோதி என்பார்க்குப் பிற்பட்டவர்களாகவே கருதப்படுகின்றனர்.

அஷ்டப்பிரகரண நூல்கள் சிவாகம சித்தாந்த மரபின் தோற்றுவாயாக விளங்குகின்றன. இப்பிரகரணங்களை ஆக்கியோர் பெயரும் அவ்வப்பிரகரணத்தின் இறுதியில் கூறப்படுவது இவற்றிலே காணப்படும் ஓர் சிறப்பியல்பாகும். ''சித்தாந்த நிர்ணயம் தெரிய விரும்புவோர்க்கும் தமிழிலுள்ள சித்தாந்த சாஸ்திரங்களில் கூறப்பட்டதற்கும் அதிகமாகப் பல அரிய பெரிய விடயங்களையும் இப்பிரகரணங்கள் கூறுவதானது' சைவசித்தாந்தத்தின் புதிய பரிமணாத்தினை மேலும் ஓர் புதிய கோணத்தில் ஆராய எடுத்துக் கொண்ட முயற்சியாகவும் கருதலாம். அடுத்து எட்டுப்பிரகரணங்களிலும் கூறப்பட்ட விடயங்களைச் சுருக்கமாக நோக்கலாம்.

## இரத்தினத்திரயம்:

அஷ்டப்பிரகர்ணத்தில் ஒன்றாகிய இரத்தினத்திரயமானது,

''மங்கலத்தைச் செய்பவனும் சித்தாந்தப் பொருள் விளக்கம் செய்பவனாயுமுள்ள சிவன்'' என்றே தனது நூலின் உரைமங்கலத்தை ஆரம்பிக்கின்றது.

> ''சித்தாந்தம் என்னும் கடலில் இருந்து மார்பிலும் கழுத்திலும் காதிலும் பெரியோர்கள் அணிந்து கொள்ளும் பொருட்டு விந்து, சக்தி, சிவன் என்னும் மூன்று இரத்தினங்களை எடுத்து வாக்குகள் என்னும் நூலால் தொடுத்துக் கட்டுகிறேன்'' (இர.திரயம் சு:2-3)

என அதன் ஆசிரியர் ஸ்ரீ கண்டாச்சாரியார் ஆரம்பத்திலேயே நூற்பொருள் இன்னதென விளக்கியுள்ளார். இவ்வாறாகச் சித்தாந்தம் கூறும் சிவதத்துவங்களில் மூன்று அம்சங்களை இரத்தினத்திரயம்



மிக ஆழமாக ஆராய்கின்றது. 'ஆப்தன்' எனில் உண்மையுரைப் போன்; ஆகவே ஆப்தனாக விளங்குபவன் பரமசிவன்; அவன் வாக்கு சித்தாந்தம்; அதனை

> ''சித்தாந்தம் ஒன்றுதான் சித்தாந்தம்
> சித்தாந்தமே முடிந்த முடிபாகும் மற்றவை
> யெல்லாம் பூர்வ பக்கங்களே சிவன் ஒருவனே
> ஆப்தன்'' (இர. திரயம், சு: 11)

என்றிவ்வாறு சைவசித்தாந்தமே முடிந்த முடிவு, சிவன் ஒருவனே மேலான பதி என அறுதியிட்டுரைக்கும் வட மொழி நூலாக்கங்களில் பெறுமதி மிக்கதாகவும் இந்நூல் விளங்குகின்றது. இதன் கண் 319 சுலோகங்கள் இருக்கின்றன. இதனை '1 ம் இராம கண்டரது மாணவரான ஸ்ரீ கண்டர் என்பார் சுருக்கமான ஆராய்ச்சியாகச் செய்தார்' என நூலின் இறுதிச்சுலோகத்தால் அறியமுடியும்.

> ''இந்த மூன்று இரத்தினங்களும் ஆப்த
> வாக்கியம் என்பதனால் ஆகமங்களாலும்,
> யுக்தி என்பதனால் அனுமானத்தாலும், யோகம்
> என்பதனால் யோகப் பிரத்தியட்சத்தாலும்
> அறியப்படும்'' (இர.திரயம் சு: 9)

என்பதனால் சைவசித்தாந்த அளவைப்பிரமாணங்கள் கூறப்பட்டன. அவற்றிலும் பிரத்தியட்சத்தில் அனுபூதிக்காட்சி மிக உயர்ந்ததெனவும் இங்கு காட்டப்பட்டது. ஆகமங்கள் இறைவெளிப்பாட்டு நூல்கள் (Revealed Litrature) என்பதானது,

> ''உண்மை உரைப்போன், உண்மையுணர்ந்தவன் சிவன் ஆதலால் அவன் வாக்குச் சித்தாந்தம் எனப்படும். அப்பரமசிவன் இருபொருள்களுடன் சம்பந்தப்பட மாட்டான்.'' (இர.திர.சு.10)

என்னும் சுலோகத்தினால் வற்புறுத்தப்பட்டது, அதனால் சிவன் பசு, பாசங்களினின்றும் வேறுபட்டவன் எனவும் உணர்த்திற்று.

உலகமானது பிரகிருதியில் இருந்து தோற்றுவித்து ஒடுக்கப் படும் என்பது போல,

''சுத்தாத்வா எதனிடத்துண்டாகின்றதோ
எதனிடத்து நிலைத்திருக்கின்றதோ எதனிடத்து
ஒடுங்குமோ அது பரநாதம் என்னும்
பெயரையுடைய விந்துவாகும் அதுவே நாதம்
விந்துவர்ணம் என்னுமிவற்றிற்குக் காரணமாகும்''
(இரா.திர.சு 22)

என்பதில் சுத்ததத்துவங்களும் விந்துவில் தோன்றி ஒடுங்கும் எனவும் பரநாதமே பசுக்களது இயல்பு, குணம், தன்மை, நிறம் இவற்றிற்குக் காரணம் என்ற நிலைப்பாட்டையும் இங்கு காணக்கூடியதாகவுள்ளது. வர்ணம் என்பது ஆகாயம், வாயு இவற்றில் ஒன்றாகிய தூலநாதம், எனக் காலோத்தராகமத்திலிருந்தும் விளக்கமளிக்கப்பட்டுள்ளது.[14]

## நாதகாரிகை:

இருபத்தி ஐந்து சுலோகங்களைக் கொண்ட நாதகாரிகை அஷ்டப் பிரகரணத் தொகுப்பில் இடம் பெற்ற நூல்களில் மிகச் சிறியதாகும். சைவசித்தாந்தத்தில் 'நாதம்' என்பது மிக முக்கியமான தனி ஒரு தத்துவமாகும். நாதத்த்துவம் பற்றி விளக்கும் காலத்தால் மிகமுற்பட்ட நூல் இது வெனலாம். திரு மந்திரத்திலும் நாத தத்துவம் பற்றிய செய்திகள்

''தெளித்தெழு நாதங்கள் தாமிவைபத்தும் -
பணிந்தவர்கல்லது பார்க்கவொண்ணாதே''

என தசநாதங்கள் பற்றிய விளக்கங்கள் காணப்படுகின்றன. வேதாகமங்களாகிய சப்தப்பிரமாணங்களை நாத தத்துவத்தின் தூலவடிவம் எனவும் கருதலாம். நாதத்த்துவம் பற்றிய தனி நூல் வரிசையில் நாதகாரிகையின் பங்களிப்பு இன்றியமையாதது. நாதத்திற்கு ஆதாரமான விந்து என்ற தத்துவம் பற்றியும் இந்நூல் சுருக்கமாகக் குறிப்பிடும். தூலநாதம், தூலவிந்து என்பனவற்றை விட உயர்நிலைசார்ந்த பரநாதம், பரவிந்து என்பன பற்றியே இந்நூல் விபரித்துள்ளது. இதனைக்காஷ்மீரில் வாழ்ந்தவரான நாராயண கண்டர் என்பாரின் புதல்வரான ஸ்ரீ பட்டராம கண்டர் என்பார் எழுதினார் எனவும் இதற்குப் 'பரஜன்யை' என்னும் உரையொன்று அகோர சிவாச்சார்யாரால் இயற்றப்பட்டதென்ற செய்திகளும் இந்து நூலின் இறுதிச் சுலோகத்திலே தரப்பட்டுள்ளன.



''புத்தி, அஸ்மித்தன்மை (அகங்காரம்) மனம்,
வித்தை, அராகம், கலை,மாயை, புருடன், சக்தி
என்னும் இவற்றிற்கும் வேறாக நாதம் என்ப
தொன்றுண்டு'' (நாதகாலிகை சு I)

அதுவே இந்நூலின் அடிப்படைக் கோட்பாடாகப் பேசப்பட்டுள்ளது.

சித்தின் தோற்றம் பொருளறிவின் தோற்றம் எனவும், எழுத்துக்கள் என்னும் வாசனையால் பொருளறிவு உண்டாகும்; வாசனைகள் புத்தியில் எவ்வாறு செலுத்தப்பட்டனவோ அவ்வாறே பொருளறிவினளவும் அமையும் என்பது இங்கு புலப்படுத்தப்பட்டுள்ளன. 'பிரத்தியட்சத்தால் அக்கரங்களையும் வாக்கியங்களால் பொருளறிவையும் அனுமானிப்பதால் 'அறிவு' பிரத்தியட்சமாகிய காட்சிப்பிரமாணத்திற்குட்படுவதில்லை. எனவே அறிவிப்பவையாகிய இந்திரியம் முதலிய கரணங்கள் பிரத்தியட்சத்தால் அறியப் படாமல் இருக்கின்றன. எவ்வாறெனில் செயலும் மூளையும் காட்சியால் அறியப்படாது மறைந்து நின்று காரியம் சாதிப்பதுபோல - என அறிய வேண்டும்.[15] என நாத காரிகையானது 'அறிவுத்தத்துவம்' பிரத்தியட்சத்திற்குட்படாதது என்பதனைத் துல்லியமாக விளக்கியிருக்கின்றது.

''உருவம்,ரசம், கந்தம், சப்தம் முதலிய
பொருட்கள் எதனால் ஆராய்ச்சி செய்யும்
தன்மையுடையனவாக இருக்கின்றனவோ
அதுவே உள்ளோசையான நாதமாகச்
சித்தித்தது, விடயத்தன்மையாகச்
சித்திக்கவில்லை'' (நாதகாரிகை சு:1)

என்பதில் ஓசை அல்லது சப்தமே நாதத்தின் உட்பொருள் எனவும் தெளிவுபடுத்தியது.

ஆப்தவசனமும் இவ்வாறேசப்தப்பிரமாணமாயின என்பது சைவசித்தாந்த நூல்களின் தாற்பரியமாகும். மெய்யடியார்களும் இறைவனை நாத வடிவினனாகத் துதித்துள்ளனர். 'ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே' என்றார் அப்பர் சுவாமிகள். அருணகிரிநாதரும் 'நாத விந்து கலாதீ நமோ நம' என சுத்த தத்துவங்கட்கும் அப்பாற்பட்ட இறைமை ஒன்றினைச் சுட்டிக்காட்டினார். ''உள்ளோ

சை வடிவமான நாதத்தின் காரியமாகவே விந்துவின் வடிவம் இருக்கின்றது. அவ்வாறு நாதம் ஆராய்ச்சியறிவிற்குக் காரணமா யிருந்து கொண்டு வாசகமாகச் சித்தித்தது, சொல்பவனிடத்துள்ள நாதம் கேட்பவனிடத்து தூலசத்தங்களால் உள்நாதம் தோற்று விக்கப்பட்டு அவனுக்குப் பொருளறிவினை உண்டுபண்ணு மென்பது''[16] இந்நூலின் முடிபாகவுள்ளது. எனவே பரநாதம் என் பது தூலவடிவில் பரமசிவனாகவும் பரவிந்து என்னும் மகாமாயை யானது பராசக்தியாகவும் சைவசித்தாந்தத்தில் உணரப்பட்டது.

## தத்துவப் பிரகாசம்

எழுபத்தியாறு சுலோகங்களைக் கொண்ட 'தத்துவப்பிரகாசம்' என்னும் இப்பிரகரணம் போஜதேவர் என்பாரால் சிவாகமங்களின் சாரமாக இயற்றப்பட்ட செய்தியானது இந்நூலின் முடிவாயுள்ள சுலோகம் வாயிலாக அறியப்படும். இந்நூலே அஷ்டப்பிரகரணத் தொகுப்பிலே முதலாவதாக இடம் பெற்றுள்ளது இதன் ஆசிரியரான போஜமன்னன் கி.பி. 11 ம் நூற்றாண்டிலே *(1018-1060)* ராஷ்ர கூடத்தை யாண்ட பரமாரவம்சத்தைச் சேர்ந்த மன்னனாகக் கருதப்படு கின்றான்.[17] இந்நூலிற்கு அகோர சிவாச்சார்யார், ஸ்ரீ குமாரர் என்னும் இருவர் உரைகள் உள்ளன. இவற்றினைத் தழுவி பேராசிரி யர் சுந்தரமூர்த்தியவர்கள் இந்நூலிற்கு உரை கண்டுள்ளார்.''

> ''தத்துவங்களின் ஒளி அல்லது ஞானம் என்பதனை
> அறிவிப்பதனால் இது தத்துவப் பிரகாசம்
> என்னும் பெயரைப் பெற்றது'' (தத்.பிர.சு:75)

அத்துடன்,

> ''சிவாகமங்களில் கூறப்பட்ட பதி பசு பாசம்
> என்ற மூன்று பொருட்களுமே முக்கியமானவை
> ''இதில் பதியைச் சிவம் என்கிறோம், பசுக்கள்
> என்பன ஆன்மாக்கள், பாசங்கள் அர்த்த
> பஞ்சகம் எனப்படும் ஐந்து பொருட்கள்'' (தத் பிர: சு:5)

என்றிவ்வாறு சைவசித்தாந்த முப்பொருட்தத்துவத்தை இப்பிர கரணம் சிவாகம சாரமாக அறிவிக்கின்றது.

அத்துடன் இறைவனின் ஐந்தொழில்கள், மூவகையான்மாக்கள் ஆணவம், கன்மம், அசுத்த மாயை, சுத்தமாயை, திரோதானம்



என்னும் ஐவகைப்பாசங்கள், முப்பத்தாறு தத்துவங்கள் பற்றிய விரிவுகள் இங்கு விபரிக்கப்பட்டுள்ளன' கன்மம், மறு பிறவியும் அதோடு தொடர்புடைய தருமம், அதர்மம் பற்றிய குறிக்கோள்க ளையும் கூட இந்நூலிலே பரக்கக்காணலாம்.

> ''போகத்தால் கன்மத்தை நாசம் செய்து தீட்சை
> என்னும் பெயரையுடைய தனது சக்தியால்
> கருணைக்கடலான பரமசிவன் எல்லா உயிர்
> களையும் விடுவிக்கின்றான்'' (தத் பிர: 72)

என்பதனால் முத்தியைத் தரும் நிர்வாண தீட்சை கூடும் போது பிராரப்தகன்மமும் நாச மடையும் என இங்கு சித்தாந்தக் கோட்பா டானது மீண்டும் அறிவுறுத்தப்பட்டுள்ளது. தத்துவப் பிரகாசிகை யானது அனைத்துத் தத்துவங்களின் தோற்ற ஒடுக்கம் பற்றிய கொள்கைகளைச் சுருக்கமாகக் கூறும் ஒரு நூலெனலாம்.

## தத்துவசங்கிரகம்:

அடுத்துவரும் ஐந்து பிரகரணங்களும் சத்யோஜோதி சிவார்ச்சார் யாரால் இயற்றப்பட்டவையாகும். தத்துவசங்கிரகத்தில் ஐம்பத் தெட்டு சுலோகங்கள் இருக்கின்றன. இந் நூலாசிரியரால் ஏற்கனவே 'ரௌரவாகம விருத்தியுரை' செய்யப்பட்டமையும் ஐந்து பிரகரணங் களிலும் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. தத்துவ சங்கிரகமும் இவ்விருத் தியுரையினை அனுசரித்துத் தத்துவங்களின் இலக்கணங்களைக் கூறுவதனால் தத்துவசங்கிரம் எனப் பெயர் பெற்றது.

> ''மதங்கம் முதலிய ஆகமங்களிற் கூறப்படும்
> தத்துவ இலக்கணமானது மிகவும் விரிவாயிருத்தலால்
> அவற்றைக் கொண்டு தத்துவங்களின்
> இலக்கணங்களைச் சிற்றறிவுடையோரால் அறிய முடியாது
> ஆதலின், அவர்கட்கு நிச்சயம் உண்டாதற்
> பொருட்டு இந்நூல் செய்யப்பட்டது''[18]

என அதன் உரையாசிரியர் குறிப்பிடுவதிலிருந்து இப்பிரகரணம் செய்யப்பட்டதன் நோக்கம் தெளிவாகும். அத்துடன் சுவாயம்புவம் முதலிய ஆகமங்கள் பிருது விதத்துவங்கட்கு (தீட்சையில்) ஒடுக்கக் கிரமமுறையில் சுத்தி என்று அறிவிப்பதனால் தத்துவசங்கிரகமும் ஒடுக்கக்கிரமமுறையிலேயே பஞ்சபூதக் கோட்பாட்டினை விளக்கி

யுள்ளது. போககாரிகையில் பஞ்சபூதக் கொள்கை உற்பத்திக் கிரமத்தில் விளக்கப்படுவதிலிருந்து இரண்டு பக்கங்களிலிருந்தும் இந்நூலாசிரியர் தனது பணியினைச் செவ்வனே ஆற்றியுள்ளமை இங்கு குறிப்பிடதக்கது.

மேலும் போககாரிகை ஆன்மதத்துவங்கட்கு முதன்மையளிக்கும். தத்துவசங்கிரகம் முப்பொருட்தத்துவங்கட்கும் முதன்மைளிப்பது அதன் தனித்துவமெனலாம். பசுக்களின் அநாதிக் கொள்கையும் (தத்.சங்.28) மூவகை மலங்களின் இலக்கணங்கள் பற்றியும் (தத்.சங்.35-36) தீட்சையின் மகிமையும் அதனால் ஏற்படும் கன்மநாசமும் (தத்.சங்.37-40) சுவாயம்புவம் தீட்சையால் கன்மவிமோசனம் பற்றிக் கூறும் கருத்துக்களும் இப்பிரகரணத்தால் இனிது விளங்கும்.[19] இறைவனின் திருவருட்சத்தியானது குருவடிவாக வந்து சிவசக்தியினால் மலம் முதலிய பாசக் கூட்டத்தை நாசம் செய்யும் முறைமையினால் சைவசித்தாந்தம் கூறும் குருதத்துவம் பற்றியும் இங்ஙனம் கூறப்பட்டது. எனவே ஞானக்கிரியாசக்திகளுடன் கூடிய ஆத்மன் சுத்தான்மா எனப் பெயர் பெறுவதாக ரௌரவத்தாலும் அறியப்பட்டது. அதன்படி குருதத்துவம் ஞானமுறைமையால் ஆன்மாக்கட்கு முத்திகிட்டும்படி செய்விக்கின்றது. இதனை ''இன்னருட்சக்தி குருவென வந்து குணம் பலநீக்கி'' எனத் திருமந்திர நூலும் மெய்ப்பிக்கும்.

இறைவனுடைய ஐந்து விதமான சக்திகள் படைத்தல் முதலிய ஐந்தொழிலாற்றுவன எனச் சித்தாந்தம் கூறும் (தத்.சங்.42) இக்கோட்பாடும் ரௌரவாகமத்தில் முன் மொழியப்பட்டதாகும். இறைவனது ஆற்றலினால் இத்தொழில்களை வித்தியேஸ்வரர், மந்திரேஸ்வரர் எனப் பெயர் பெறும் மகேஸ்வராகளாற்றுவர். இவர்களைப் புராண நூல்கள் பிரமா, விஷ்ணு, ருத்திரர், சதாசிவர், மகேஸ்வரர் முதலிய கடவுளர்களாகக் குறிப்பிடும். இவர்கட்குப் பரமுத்தியின்மையினால் இவர்கள் இறைவன் ஏவலால் இத்தொழில்களை ஆற்றுவோராகச் சித்தாந்தம் கருதும். ஆதலால் சிவனுக்கு ஐந்து முகம் பதினைந்து கண்கள் எனக் கூறப்படுவதெல்லாம் -இச் சரீரவேறுபாடுகள் பக்தர்களின் தியானத்தின் பொருட்டும் உலகின் அசைவியக்கத்தின் பொருட்டும் கூறப்பட்டவை என பௌஷ்கராகமமும் கூறும்.[20]



## தத்துவத்திரய நிர்ணயம்

சத்யோஜோதியாருடைய இந்தப் பிரகரணமும் முப்பத்திரண்டு சுலோகங்களையுடைய ஓர் சிறிய நூலாகும். கடுகு போல இருப்பினும் காரமிக்கதான இப்பிரகரணம் ஏனைய நூல்களில் இந்நூலாசிரியராற் கூறப்பட்ட கோட்பாடுகள் அனைத்தையும் இரத்தினச் சுருக்கமாக தொகுத்தளிப்பதாகவுள்ளது.

> ''சுவாயம்புவாகம சம்பந்தமான பொருளை
> அறியாதிருப்போர்க்கு அவ்வறியாமையை
> நீக்கும் பொருட்டு சத்யோஜோதிசிவாச்சார்
> யரால் இப்பிரகரணம் செய்யப்பட்டதென'' (தத். திர நிர்ணயம், சு:32)

நூலின் கடைசிச் சுலோகம் கூறும். இவ்வாசிரியர் தனது ஐந்து பிரகரணங்களிலும் ரௌரவம், சுவாயம்புவம், மதங்கம் முதலிய ஆகமங்களது ஞானாபாதப்பொருளை விளக்கியெழுதி சைவசித்தாந்தத்தைக் கோட்பாட்டு ரீதியாக உருவாக்கம் செய்த பெருமையுடையவர். இப்பிரகரணத்திற்கும் அகோரசிவரின் விருத்தியுரை ஒன்றுண்டு.

சிற்சில இடங்களில் உரையாசிரியர் உரைகளில் முரண்படும் செய்திகளும் வருகின்றன ஒன்றை மட்டும் இங்கு குறிப்பிடலாம். தத்துவசங்கிரக உரையில் அப்பிரகரணம் மதங்காகமத்தின் வழி செய்யப்பட்ட தெனவும், தத்துவ திரயநிர்ணய உரையிலே அப்பிரகரணம் ரௌரவாகம வழி செய்யப்பட்டதெனவும் குறித்துள்ளமை ஆய்வுக்குரியது.[21] ஆயினும் இரு பிரகரணங்களும் சிவாகம ஞானாபாதப் பொருளை விளக்குவன என்பதில் சந்தேகமில்லை, சைவசித்தாந்த முப்பொருட்கள் இவையென இப்பிரகரணம் பின்வருமாறு நிர்ணயம் செய்யும்.

> ''சம்பு என்னும் பரமசிவமும், உயிரும், மாயையும்
> ஆகிய மூன்றும் நித்தமாய் வியாபகமாய்
> கருத்திருசக்தியுடன் கூடினதாயிருக்கின்றன இம்
> மூன்று தத்துவங்கள் மாத்திரம் விகாரமான
> காரியங்கள் ஒடுங்கும் காலத்தும் (ஒடுங்காது)
> நிலை பெறுகின்றன'' (தத் திர. நிர் : 3)

எனவரும் சுலோகமானது முப்பொருட்களும் அநாதியானவை, நிலைத்தவை, செயற்திறன் படைத்தவை எனக் கூறப்பட்டுள்ளன. ஆயினும் மூன்று பொருட்களிலும் சிவம் ஒன்றே செயற் சுதந்திர முடையது, ஏனைய இரண்டும் மலபந்தங்களாற் கட்டப்பட்டவை யென்பதும் முன்னரே கூறப்பட்டது. சிவனும் உயிர்களும் பரிணா மம் அற்றவை, அறிவுடன் கூடியவை; மாயாதத்துவமோ மாறுதல் என்னும் பரிணாமத்துடன் கூடியது என அவற்றிற்கிடையேயுள்ள வேறுபாடும் விளக்கப்பட்டது. *(தத். நிர். 4)*

சைவசித்தாந்த முத்திக் கோட்பாட்டு நிலையினைத் தத்துவத் திரய நிர்ணயம் நன்கு தெளிவுபடுத்தியிருக்கின்றது. தற்கால சில சிந்தனையாளர்களின் ஐயப்பாட்டிற்குப் பதில் கூறுவதுபோல பதமுத்தி, பரமுத்தி வேறுபாடுகள் ஏன் நிகழ்கின்றன என்பதற்கு இப்பிரகரணம் விடை பகாந்திருக்கின்றது.

> ''ஆன்மாக்கட்குக் காலபேதம், குணபேதம்
> என்னும் சாதன வேறுபாட்டால் முத்தி
> வேறுபாடுகள் காணப்படுகின்றன. வேறு
> காரணத்தாலில்லை, ஈஸ்வரனிடத்து ஒரு
> காலத்தும் முத்திவேறுபாடு சம்பவிக்காது'' *(தத். நிர்; 13)*

மதங்கம் முதலிய ஆகமங்களில் கூறப்பட்ட ஏழு விதமான முத்தி கள் சாதன வேறுபாட்டாலும், மலபரிபாக தாரதம் மியங்களினாலும் நிகழ்வனவே தவிர ஈஸ்வரனால் இவ்வித முத்தி வேறுபாடுகள் உண்டாக்கப்படுவனவல்லவாம். இவ்வாறு கொள்வதே தெய்வீகத்திற் கும், பெரும் தன்மைக்கும், நடுநிலைமைக்கும் நீதிக்கும், அறநோக்கிற் கும் முரண்பாட்டினைச் தோற்றுவிக்கும், அதனால் ஈஸ்வரத்தன்மை என்னும் இறைமைக்கே பங்கம் ஏற்படும்.[22] பாரபட்சமுள்ள இறைமை மெய்யியல் தருமத்திற்கும் முரணானதாகும். விடுதலை நெறியும் சாத்தியமற்றதாய்விடும். தத்துவத்திரய நிர்ணயம் இதனைச் செம்மை யாக எடுத்தியம்புவது-சைவ சித்தாந்தக் கொள்கையில் மனிதநேயச் சமநிலை' நிலை பெறுமாற்றினை வலியுறுத்துவதாவுள்ளது.

இனிச்சாதன வேறுபாடுகள் மலபரிபாகத்தின் நிமித்தம் அவர வர் பக்குவம், அறிவு நிலை என்பவற்றிற்கேற்ப வேறுபடும் என்ப தனால் சித்தாந்தம் கூறும் சாதனங்களான நால்வகை நெறிகள், எழுவகைத் தீட்சைகள், குரு, லிங்கம், சங்கம வழிபாடு, மந்திரம், ஜெபம், தியானம், அறவழிச்சாதனை முதலிய உபாயங்கள் அனைத்



தும் மிருகேந்திரம், சுவாயம்புவம் ஆகியவற்றில் ஆங்காங்கு கூறிய வாறு விரித்துரைக்கப்படுகின்றன. பிரபஞ்சகருத்தாவாயுள்ள சிவதத் துவம் பற்றியும், அசுத்தத்தைச் செய்யும் ஆணவம் அதன் பல்வேறு சக்திகள் பற்றியும் இப்பிரகரணம் மேலும் பல செய்திகளைத் தந்து ள்ளது. தனது நூற்பெயரைப் போன்றே முப்பொருளை நிர்ணயம் செய்வதில் இந்நூல் தன்னிகரற்றது எனலாம்.

## போககாரிகை:

முன்னூற்று நாற்பத்தாறு சுலோகங்களைக் கொண்ட இப்பிர கரணமே அஷ்டப் பிரகரணத் தொகுப்பிலிடம் பெற்ற மிகப் பெரிய நூலாகும். இதனை அடுத்து இரத்தினத்திரயம் அதிக சுலோகங்க ளையுடைய பெரும் நூலாகவுள்ளது. ஏனையவையாவும் அமைப் பிலே சிறியவை. சத்தியோஜோதியாரின் போககாரிகையானது ஆன்மாக்கட்குப் போகமாவது சுகம் முதலியவற்றின் அறிவு எனவும் அதற்குச்சாதனம் பிருதுவி முதலிய தத்துவக் கூட்டங்கள் எனவும் உறுதிபடக் கூறும். சித்தாந்தம் கூறும் இருபத்திநான்கு ஆன்ம தத்துவங்கள் பற்றி ஏனைய பிரகரணங்களை விட இந்நூலே ஆகம அடிப்படைகளூடாக நன்கு ஆராய்ந்து நிறுவுகின்றது. மெய்கண்ட சாத்திரங்கள் இருபத்தியெட்டு ஆகமங்களின் ஞானபாத சாராம்சமெ னலாம், அஷ்டப்பிரகரணங்களிற் பெரும் பாலானவை தனித்தனி ஆகமங்களது ஞானபாதம் கூறும் சித்தாந்தக் கோட்பாட்டை சுருக்கமாக எடுத்துரைப்பதில் விசேடமானவையாகும். அதற்க மைய.

> ''பரமசிவனை நமஸ்கரித்துச் சாதகர்கள்
> அறிந்து கொள்ளும் பொருட்டு யுக்தியால்
> நிர்ணயிக்கப்பட்டனவாயும்,
> ரௌரவாகமத்தினால் சித்தித்தவையாயும்,
> உள்ள போக மோட்சங்களை ரௌரவாக
> மத்தை அனுசரித்தே சிறிது கூறுகிறேன்''
> *(போககாரிகை 1-2)*

என்றிவ்வாறு நூலின் நோக்கம் குறிக்கோள் என்பன நூலாரம் பத்திலேயே சொல்லப்படுகின்றன.

போக சாதனங்களிலும் உலகப்பற்றுக்களிலும் மக்கள் உழன்று படும் இன்பதுன்பங்கட்கு கன்மவினைகள், மலபந்தங்கள் என்பன

காரணமாகவே அவற்றில் ஆசையுண்டாகின்றது, ஆன்மா நிர்மல னாக இருப்பின் போகத்தில் ஆசை உண்டாவதில்லை ஆன்மாக்கட்கு ஆசையினையூட்டுவது அராகம் என்னும் தத்துவமெனப்படும் புருடர்கட்கு மலமில்லையாயின் போகத்தில் ஆசை நிகழ்கிறதெனில் அராகமே அதற்குக் காரணமாகையால் மலமுள்ளவனுக்கே ஆசையுமுண்டாகும். என சுவாயம்புவாகமத்தினாலும் உறுதிப்படுத் தப்பட்டுள்ளது.[23]

இவ்வாறாக மலம் காரணமாக ஆசையும், ஆசை காரணமாக இன்பதுன்பமாகிய இருவினைகளும் அதன் விளைவாக ஏற்படும் கன்மமல பந்தமும் உலகிலே மக்களை ஆட்டிப்படைக்கும் கருவிகளிற் பலம் வாய்ந்தவை என்பது போககாரிகையாற் பெறப் படுகின்றது. ஆணவமே அனைத்துக்கும் மூலமலம் என்ற கருத்தும் இங்கு பேசப்படுகின்றது. இதனை 'இருண்மலம்' என்ற திருவருட் பயன் வர்ணிக்கும் 'பசு மலம் அன்றோ பசுவின் மலத்தைப் போக்கு வது' எனத் திருக்களிற்றுப் படியார் போன்ற சித்தாந்த சாஸ்திரங் களும் இம்மலம் பற்றி அதிகமாகவே கூறியுள்ளன. 'பிறவிக் குணம் போகாது' என மனிதர்கள் பிறரை சாதாரண வகையில் விமர்ச்சிப் பதும் இக்குண இயல்பினையே எனலாம்.

போககாரிகையானது சித்தாந்த உலக உற்பத்திக் கொள்கை யினை யுக்தி, அனுபவம், ஆப்சவசனமாகிய சிவாகமங்களின் வாயிலாகவும் நன்கு தெளிவுபடக்கூறும் தகைமையது. ஆன்மக் கொள்கையிலும் விடயங்களின் அறிவு ரூபமான அனுபவமே போகமாகையால் -இவற்றினை அளவைப் பிரமாணங்களின் வாயிலாக மதிப்பீடு செய்கின்றது. பிரமாணங்கள் பற்றி மதங்கம் முதலிய ஆகமங்களின் துணை கொண்டு பிரத்தியட்சம், அனுமானம் பற்றியும் இந் நூலின் கண் சிறிதளவு ஆராயப்பட்டுள்ளது.[24] மேலும் பஞ்சபூதங்கள், தன்மாத்திரைகள், கன்மேந்திரியங்கள், ஞானேந்திரி யங்கள், அந்தக் கரணங்கள், குணபேதங்கள் என்பன பற்றிய சித் தாந்த மெய்யியலின் ஆன்மதத்துவ நியமங்கள் முழுவதனையும் ஒரு ங்கு திரட்டித் தந்துள்ளது. இவற்றிலே கூறப்பட்ட சித்தாந்தக் கொள்கைகளை சிவஞான சித்தியாரும் ''மாயை, மாயேய இலக்க ணங்கள்'' என்னும் பகுதியிலே சுருக்கமாக விளக்கியுள்ளது[25] போக காரிகை உலக வாழ்வை வாழ்ந்து அனுபவிக்க வேண்டுமெனப் போதிக்கின்றது. சைவசித்தாந்தம் யதார்த்தமான வாழ்வியல் தத்துவம் என்பதற்கு (Realistic Philosophy) போககாரிகை சிறந்ததொன்றாகவுள்ள தெனலாம்.



**சைவசித்தாந்தத்தின் சமூகவியல் நோக்கினையாராயும் வகை யில் தற்கால விமர்சனவியல் வளர்ந்து வருகின்றது.[26] சமூகவியற் சிந்தனைகளில் சமுதாய நடை முறைகளில் பெரும் தாக்கத்தையும் பல்வேறுவிதமான விமர்சனங்கட்கிடமாயுள்ள வருண அமைப்புப் பற்றியும் போககாரிகையில் சில சிந்தனைகள் இடம் பெற்றுள்ளன.**

''சென்மாந்திரத்தில் செய்யப்பட்ட கன்ம
மானது சாதி முதலிய பலன்களைக் கொடுக்கக்
கூடியது. புருடனுக்குக் கற்பிக்கப்பட்ட
மலமானது அக் கன்மமிருக்கும் போது
அதிகரிக்கப்படும்'' *(போககாரிகை,125)*

எனவருமடிகளில் 'சாதி' என்பது ஒருமனிதனின் புண்ணிய பாவங்களின் விளைவாக ஏற்படும் இதன் வழியில் அது பிறப்படிப் படையில் அமையும் மென்றும் வாழ்வினைத் தலை விதி என்பதா கவும் ஒரு மாயத்தோற்றம் அளிக்கப்பட்டுள்ளது. ஆணவமலத்தின் காரணமாக மனிதர்களது செயல்களே அவர்களது ஏற்றத் தாழ்வுகளை நிர்ணயிப்பதனை எளிதில் உணர முடியும். 'இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்' என்பது ஔவை மொழி.

''நாட்டிய நற்குலத்தினில் வந்து அவதரித்துக் குருவால்
ஞான நிட்டை அடைவர்'' *(சித்தியார் 8:2.276)*

எனவே வர்ணப்பிரிவு குலங்களை அடிப்படையாகக் கொண்ட வர்ணப் பிரிவுகளைச் சுட்டியிருக்க வேண்டும். ஆனால் ஞானநிட் டைகைக் கூடிவர்க்கு 'கோலமில்லை குணமில்லைக் குறியில்லை குலமுமில்லை' *(8,3,274)* என்றும் சித்தியார் கூறும். இதனை 'முக்குணகர்ம விபாக' எனக்கீதையும் 'சாதி ஆயுள் போகம் அவரவர் கன்மத்தால் விளையும்' *(பாடல் 29)* எனச் சிவப்பிரகாமும் கூறுவதும் மேலும் 'ஆராயத்தக்கதாம்.[27]

ஆயினும் இவற்றின் பொருள் விளக்கம் பற்றி ஆசிரியர் பர மோட்ச நிராசகாரிகை, மோட்சகாரிகை போன்றவற்றிலே தனது நிலைப்பாட்டினைச் சுட்டியுள்ளார்.

''பசுத் தன்மையைச் சாதியாகக் கொள்ளாது சாதீயமாகக்
கொள்பவர் பற்றிக் கவனமெடுக்கத் தேவையில்லை'[28]

எனக் கூறுவதனால் மலச்சேர் கையினால்தான் பசுத்தன்மையுண் டாகும் - மலநீக்கமடையும் போது சாதிப்பண்பும் நீங்கும் என்பது

ஒருவகை விளக்கமாகும், சாதி என்பது பண்பு, இனம் பொருளின் தன்மை குணபேதம், என சித்தியாரில் அதன் உரையாசிரியர் குறிப் பிட்டுள்ளார்.[29] சைவசமயத்தின் வரலாற்றுத் தொன்மையுடன் இணைந்து வளர்ந்து வந்ததொரு அறிவியக்கமாகவே சைவசித்தாந் தம் விளங்குகின்றது. சித்தாந்தம் சமூகப் பிரக்ஞையுடன் கூடிய அசைவியக்கம் எனவும் சிறப்பிக்கப்படும்.[30]

இத்தகைய அசைவியக்கப் பண்பு கொண்ட அறிவியக்கத்திலே வர்ணதர்மம் பெரும் சிக்கலை ஏற்படுத்தியிருப்பதும், அதன் பரிணா மம் குறிப்பிட்டதொரு சமூகப் பிரஞ்ஞையாக இருப்பது பற்றியும் பல்வேறு தரப்பட்ட சிந்தனைகள் வளர்ந்து வந்துள்ளன. சைவ சித்தாந்தம் அடிப்படைக் கொள்கைகளிலே இறுக்கமாக இருக்கும் அதேவேளையில், சமூகவியற் சிந்தனைகளில் தேவையேற்படு மிடத்து புதிய கருத்துக்களையும், மாற்றங்களையும் ஜீரணித்தே வளர்ந்துள்ளது. இதனைப் பல்லவர் கால பக்தி இயக்க நடைமுறை களிலும், சோழர்கால சமூக இசைவாக்கங்களிலும் காணலாம். பெரியபுராண அடியார் வரலாறு இதற்கு நல்லதோர் சான்றாகும். அதனாலேயே இன்றும் சைவசித்தாந்தம், ஓர் அசைவியக்கமுள்ள தத்துவமாக நிலை பெற்றிருக்கின்றது. சிவாகமங்களையும், சிவசாத் திரங்களையும், மெய்கண்ட நூல்களையும், பக்தி இலக்கியங்க ளையும் நுணுக்கமாக ஆராய்வோருக்கு இவ்வுண்மை புலனாகாமற் போகாது. அவற்றினை உள்ளபடி உய்த்துணரும் ஆற்றல் வாய்க்கப்ப பெற்றால் எத்தகைய பேதவாதங்களும் மறைந்து விடும் 'சாதி இல்லை' எனக் கூறிக் கொண்டு முத்தி நிலையிலும் அதனைக் கற்பித் துக் கொண்டிருப்போமானால் மேலும் 'சாதிமுறையினை' வலுப்ப டுத்திய பாவத்திற்கேயாளாகலாம். 'ஆன்மநேயம்' ஒன்றுதான் சைவசித்தாந்த சாத்திரங்களின் அடிப்படை இலட்சியம் என்பதனை ஞானானுபவத்தினால் உணராதவரை இத்தகைய சமூகப்பிரதிவா தங்கள் எழுவதும் தவிர்க்க முடியாது 'முத்தி நிலையிலும் வேற்று மையினைக் கற்பிக்கும்' ஒரு மெய்யியல் இருக்குமானால் - அதனை' மெய்மை' உணர்த்தும் அறிவியல் தத்துவம் எனக் கொள்வது எங்ஙனம் பொருத்தமாகும்?

ஆன்மக் கோட்பாட்டிலும் சித்தாந்தக் கருத்தின் அழுத்தம் போககாரிகையில் காணப்படுகின்றது.

''பசு, காளை முதலியன போல இவன்
கட்டுப்பட்டவனாயிருப்பதனால் இப்புருட



னுக்கு சர்வகருத்திருத்தன்மை கிடை
யாது கலை முதலியவற்றின் உதவி
கொண்டே போகத்தில் கருத்திருத்தன்மை
இவனுக்கு இருக்கின்றது'' (போககாரிகை 103)

ஆதலால் ஆன்மாக்கள் பாசங்களால் கட்டப்பட்டுள்ளதால் பசுத்தன்மையடைந்து இயல்பாகவேயுள்ளன செயற்சுதந்திரத்தையும் இழந்துள்ள தென்பது சித்தாந்த விளக்கமாகும். மலக்கட்டு மனிதனின் அறிவுக்குறைவுக்கும் அஞ்ஞானத்திற்கும் மூலகாரணம் எனச்சித்தாந்தம் அழுத்திக்கூறும். 'பாசம் பசுத்துவமாகும்' என்றே மெய்கண்ட சாத்திரங்களும் விளக்கும்.

இத்தகைய மூலமலமே ஒவ்வொருவரிடத்தும் விபரீத ஞானத்தையும் மகா மோகத்தையும் உண்டாக்குவதனால் அவர்களி டத்து இயல்பாகவேயுள்ள ஆன்மநேயமானது மறக்கப்பட்டு மனித இதயமானது வெற்றிடமாகவே போய்விடுகின்றது. புத்திதத்துவத் தால் தூண்டப்பட்ட அகங்காரத்தினால் நான், எனது என்னும் மாயைக்குட்பட்டு நில்லாதனவற்றை நிலையானவை என உணரும் விபரீத அறிவினையே சுயநலம் மேலோங்கிய மனிதன் உண்மை என நம்பி விடுகின்றான்'. அதன் விளைவாகத் தனது பணம், பதவி, பட்டம், புகழ், பொருள்' என்னும் இறுமாப்புக் கொண்டு இத்த னைகட்டுக்களாலும் தூண்டப்பட்ட மயக்க அறிவினால் உந்தப்பட் டுக் காரியமாற்றும் போது எப்படி ஒருவன் சுதந்திரமாகச் செயலாற்ற முடியும் என்ற வினா இயல்பாகவே எழுகின்றது. அங்குதான் சைவசித்தாந்தம் அதற்கு ஆணவமலம் என்னும் தற்செருக்கும் தன் முனைப்பும் காரணம் எனக் கற்பிக்கின்றது.

இத்தகைய விபரீதபுத்தியினாலே மானிடர் பிறப்பினால் சாதிமுதலிய ஏற்றத்தாழ்வுகளைக் கற்பிப்பதும் அதனை 'அறிவியல்' எனப்போற்றுவதும் சகஜமாகிப் போனது போலும் இத்தகைய மனிதர்கள் தாம் தாம் செய்யும் தவறுகளைத் தருமமாகிய மெய்யியற் சிந்தனையில் போட்டுவிட்டுத் தத்துவங்களில் தான் தவறு என பிதற்றிக் கொண்டு தாம் தாம் தப்பித்ததாகக் கூறிக் கொள்வதும் இன்றய நாகரிகமாகிவிட்டது. ''சரீரம் பரிணாமத் தன்மை அடை வதனை ஆன்மபரிணாமம் அடைவதெனக்கருதுவதே[32] சித்தாந்த மெய்யியலின்படி தவறாகும் 'சாதி என்பது உடலுக்கன்றி ஆன்மவிற் கல்லவாம்' எனக்கிரணாகமம் கூறும், நியமும் இதனால் புலனாகும்.

சித்தாந்த வாழ்வியற் தத்துவத்தை நெறிப்படுத்தியதில் இப்பிரகர ணங்களின் பங்களிப்பு மிக உயர்வானதெனக் கருதலாம். அடுத்து வரும் இரு நூல்களிலும் இத்தகைய சிந்தனை யோட்டங்களைக் காணமுடியும்.

## மோட்சகாரிகை:-

இப்பிரகரணத்திலும் சத்யோஜோதி சிவாச்சார்யாரின் குருபற் றியும், அவரது ரௌரவாகம விருத்தியுரைபற்றியும் குறிப்புக்கள் வருகின்றன.[33] ரௌரவாகமத்திலே சித்தித்தாயுள்ள போகங்களைப் போககாரிகையிலும், மோட்சசித்தாந்தங்களை மோட்ச காரிகையி லும், பரமோட்ச நிராசகாரிகையிலும் விரித்துக் கூறியிருக்கின்றார். இவ்விரண்டு நூல்கட்கும் ஸ்ரீபட்ட ராம கண்டரே உரையாசிரியரா கவுள்ளார். இவர் ஒருவரே அஷ்டப் பிரகரணத்தொகுப்பிலே நூலாசிரியராகவும், உரையாசிரியராகவும் விளங்கும் தனிச்சிறப் புடையவராகவும் விளங்குவது இங்கு குறிப்பிடத்தக்கது.

'போகானுபவத்தின் முடிவில் இருவினையொப்பு என்னும் கன்சம்சமநிலையும் அதன் விளைவாக மலபரிபாகமும் உண்டா னதும் உயிர்களை - உடல், உலகு என்னும் மாயாசாதனங்களின்றும் நீக்கி போகமோட்சங்களைத் தரும் கருத்தா சிவன் ஆவன்' என்னும் விடயம் மோட்சகாரிகையில் கூறப்பட்டது. பாசநீக்கமும் சர்வக் ஞத்தன்மையின் விளக்கமுமே மோட்ச நிலையின் அறிகுறியாகும். என்பது இப்பிரகரணத்தில் சிறப்பாக நிர்ணயம் செய்யப்பட்டுள்ளது. அத்துடன் பிறமதத்தார் கூறும் மோட்சங்கள் விடுதலையாகாதென வும் இந்நூல் அறிவிக்கும், மோட்சகாரிகையில் சித்தாந்த முத்திநிலை யினை நிர்ணயம் செய்யும் வகையில் பிறமதங்கள் கூறும் முத்தி நிலை மறுக்கப்படுகின்றது. பரமோட்ச நிராகாரிகையிலே பிற மதங்களின் முத்திக் கொள்கைகள் அனைத்தும் விளக்கப்பட்டு அவைகள் யாவும் பரபக்கமென அளவைப் பிரமாணத்தின் வாயி லாக நிராகரிக்கப்படுகின்றன. இதுவே இவையிரண்டு நூல்கட்கு மிடையே காணப்படும் வேறுபாடு எனலாம்.

சித்தாந்த முத்தியை நிலைநாட்டும் வகையில் பிறர் பக்கத்தை மறுப்பது மோட்சகாரிகையின் குறிக்கோளாகும். பரபக்கமெனப் படும் பிறசமயமுத்திகளை மறுக்கும் முறையிலே சித்தாந்த முத்தியினை நிலைநாட்டுவது பரமோட்ச நிராசகாரிகையின்



இலட்சியமாகும்

> ''மலம் முதலிய பாசங்களின் நாசமும் எல்லா
> ஞானக் கிரியைகளின் தோற்றமும் மோட்ச
> மாகும் அதற்குக் காரணம் ஈஸ்வரன்...
> மோட்சத்தைக் கொடுத்தல் நித்திய
> முத்தனாயிருத்தலால் ஈஸ்வரனாகிய கருத்தாவைச்
> சார்ந்தது'' (மோ.காரிகை: 44-45)

எனக் குறிப்பிட்டிருத்தலால் மோட்சமாகிய விடுதலை மெய்ஞானத் தின் உதயம் என்பதும் - அது இறைவனென்னும் தருமத்தால் தீர்வு காணப்படும் ஒன்றென்பதும் காட்டப்பட்டது அதனால் தருமத்தி னாலும், சேவையினாலும், மெய்யறிவிலும் தலைப்பட்டவர்கட்கே மோட்சம் சாத்தியப்படுமே தவிர - சாதிமான்கட்கும் அறிவாளி கட்கும் மோட்சம் கிட்டுமென சித்தாந்த நூல்கள் எவ்விடத்தும் குறிப்பிட்டதாகச் செய்திகளில்லை.

'தீட்சை, சாதகம் இவற்றிற்கு நான்கு வர்ணத்தவரும் உரித்து டையவர், ஆசிரியத்தன்மையில் சிறந்தவர் அந்தணர்' எனவும் மோட்சகாரிகை தெளிவுபடக்கூறும்[34] தீட்சைமட்டும் பெற்றால் போதாது-எல்லாவற்றுக்கும் அதிகாரத்துவமான தருமத்தை எவர் அறிவரோ அவரே, ஆசிரியத்தன்மையால் ஏவப்பட்ட அந்தணரா வார்' (மோ.கா.100) என்பதில் பிராமணத்துவம் எனப்படும் குருதத்துவம் தான் தருமத்தின் இலட்சிய நோக்கு எனப்பட்டது.

> ''அன்பில்லாதவனும் அறிவில்லாதவனும்
> மயக்கமுள்ளவனும் ஐயமுள்ளவனும்
> தத்துவஞானமில்லாதவனும் கிரியா
> மார்க்கத்திலே பயிற்சியில்லாதவனும்
> ஆசிரியராக - (அந்தணராக) ஏற்றுக்
> கொள்ளப்படமாட்டான்''[35]

என்றிவ்வாறு இப்பிரகரணத்திற்குரை செய்த அகோர சிவரும் 'அந்தணத்துவம்' யாது என்பதனை ஆணித்தரமாக உரைத்துள்ளார். இங்னமாக வர்ணதருமம் சாதியமுறைமைகளின்றும் வேறுபடு மாற்றை இவர்கள் விளக்குவதற்குத் தவறவில்லை.

உலகிலே ஆதிவாசிகள் வாழ்விலும் தமிழர் சமுதாயத்திலும் கூடக் குலங்கள் அல்லது 'குழுக்கள்' (Tribes) முக்கியத்துவம் பெற்றி

ருந்தன. 'சாதி இரண்டொழிய வேறில்லை' எனப்பாடிய ஔவை யார் 'குலத்தளவேயாகும் குணம்' என ஒப்புக் கொண்டார். 'சாதிகள் இல்லையடி பாப்பா குலத் தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்' எனப் பாடியபாரதியார் 'நாலுகுலம் படைத்தனர் அதை நாசமுறச் செய்தனர் மூடர்' எனக் குறிப்பிட்டதிலிருந்தும் வர்ணவேறுபாடுகள் மனித சமூகத்திலே ஆதியில் தொழில் வயிற்பிரிவுகளாக அதனை மேம்படுத்தும் பொருட்டு ஏற்படுத்தப்பட்டமை புலனாகும். அதனைக் குறித்தே 'வர்ணப் பிரிவென்பது 'ஓர் ஆன்மீகபொருளியற் சட்டம்' எனவும் அதுவே மனித குலத்தை இழிவுபடுத்துமானால் அதனைத் தூக்கியெறியவும் தயங்கமாட்டேன்' என காந்திஜியும் வாதிட்டார். சைவசித்தாந்தத்திலும் நான்குவித முத்திநிலைகளில் முதல் மூன்று வகை முத்தி நிலையும் இம்மை மறுமைக்கான மோட்ச நிலைகளைக் குறிக்கும் பதமுத்தி எனவும், பரமுத்திநிலை யென்பது என்றுமே சிவசாமியத்துடன் கூடிய பிறப்பிறப்பற்ற நிலையாகிய சிவ சாயுச்சிய மோட்சம் எனவும் குறிப்பிட்டது.

வேறு வகையில் கூறினால் சைவசித்தாந்தம் என்பது உயர் மனித விழுமியங்களை அடிப்படையாகக் கொண்ட உலகம் தழுவிய -அனைவருக்கும் அன்பினில் அறநெறியில் தோய்ந்த சைவநீதியைக் கற்பிக்கும் சிந்தனை எனக் கூறுவதே பொருத்தமாகும். 'கங்கைவார் சடைக் கரந்தார்ச் கன்பராகில் அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவு ளாரே' என இறைமை என்பது இறவா அன்பு நிலை - அந்த அன்பில் யாவரும் சமம் என்னும் சமூகசமநிலைக்கோட்பாடே பக்தி நெறியால் ஏற்படுத்தப்படும் சமயசீர்திருத்த நடவடிக்கை என்றும் கூறலாம்.[36] பெரிய புராணத்திலே நந்தனாருக்கு நந்திவிலகிய நிகழ்வுகூட இத்தகைய அடிப்படையில் நோக்கினால்' 'அனைவர்க் கும் ஆலயக் கதவுகள் திறக்கப்பட வேண்டும்' என்னும் அறவழிப் போராட்ட வடிவத்தின் ஒரு வெளிப்பாடு எனவும் கருதமுடியும் ஆதலால் சைவசித்தாந்த மெய்யியல் என்பது ஒரு குறுகியவட்டத் தில் சிந்திக்கப்பட்ட சிந்தனை வடிவமல்ல என்பதனைச் சித்தாந்த சிந்தனையாளர்கள் உணர்ந்து வெளிப்படுத்துவதசியமாகும்' அஷ்டப்பிரகரண நூல்கள் யாவும் இத்தகைய தொரு சிந்தனையின் பரிமாணத்தைக் கொண்டவை எனக் கூறலாம்.

அடுத்து ஆப்த வாக்கியப் பிரமாணங்களின் இன்றியமையாத தன்மையினை அஷ்டப்பிரகரண நூல்கள் பல்வேறிடங்களில் எடுத்துக் கூறுகின்றன.



''சைவ சாத்திரத்தால் ஏனைய மதங்கள் நீக்கப்
படுவதில்லை, ஆனால் பாசரூபமான அம்மதங்களில்
உள்பொருள்களை இவ்வாறன்று என
ஞானத்தால் மறுக்கும் இந்தச் சைவசாத்திரம்
ஞானத்தைக் கொடுக்கும் பிரமாணத்
தன்மையை விடுவதில்லை'' *(மோ.கா: 144)*

ஆகையால் சைவசாத்திரத்தால் எல்லா விடயங்களும் அனும திக்கப்பட்டு ஞானசாதனத்தால் பிரமாணம் காட்டி நிராகரிக்கப்படு கின்றன. 'பௌத்தம் புத்திதத்துவத்திலும் சமணம் குணதத்துவத்தி லும் ஆழ்ந்திருப்பதனால் அது அதற்கு மேலுள்ள ஈஸ்வரஞானத் திற்கு விடயமாவதில்லை[37] அதனால் சைவ சித்தாந்த மோட்சமாவது ஞானசாதனையினால் விடுதலை என்பதனையே மோட்சகாரிகை அழுத்தமாக கூறியுள்ளது. இத்தகைய போக மோட்சக் கோட்பாடுகள் ஆத்ரேய மகரிஷயின் பொருட்டு 'ருரு' மகரிஷக்கு அறிவிக்கப்பட்ட தால் அந்த ஆகமம் 'ரௌரவம்' எனப்பெயர் பெற்றவாற்றையும் இப்பிரகரணம் தெரிவித்துள்ளது.

## பரமோட்ச நிராச காரிகை:-

ரௌரவாகமத்தின் இரண்டரைச் சூத்திரங்களில் கூறப்பட்ட செய்திகள் பரமோட்சநிராச காரிகையில் சத்யோஜோதி என்பாரால் ஐம்பத்தொன்பது சுலோகங்களாக விரித்துரைக்கப்பட்டுள்ளது. சிவாகமங்களிலும் அளவையியலிலும் இந்நூலாசிரியர் நன்கு புலமையுடையவர் என்பதற்கு இந்நூல் தக்க தொரு உதாரணமாகும். 'சாங்கியர்கள் பிரகிருதிமயக்கத்திலிருந்து விடுபடுதல் முத்தி எனவும் பாஞ்சாரத்திரிகர், பதஞ்சலியோகர் முத்தனிடத்துக் கருத்திருத்தன்மை பற்றி வருவது முத்தி என்போரும், ஆதித்தன் அக்கினிதேவனது சாமியம் முத்தி என்போரும், மலநிர்வர்த்தி மோட்சம் என்போரும், குணங்கட்கு சங்கிராந்தி கூறும் கருத்திருத்தன்மை முத்தி எனவும் மற்றும் அனேகமோட்சவாதிகளும் எதனை முத்தி என்கின்றனரோ அவை முத்தியாகாவாம் எனப் புறச்சமய, அகச்சமய முத்திக் கோட்பாடுகளை பொருத்தமற்றதென மறுத்துரைப்பது பரமோட்ச நிராசகாரிகையின் சிறப்பிலக்கணம் எனலாம்.

''உற்பத்தியற்றது நாசமற்றது' அதனால் முப்பொருட்களும்
அநாதி'' *(பர.மோ.28)*

என்னும் கருத்தானது 'ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தி யில்லை' எனும் சிவஞான போதக்கருத்துடன் ஒப்பு நோக்கலாம் கன்மம் மறுபிறவிபற்றிய கொள்கையிலும்

> ''பிறப்பு இறப்புக்கு நடுவில் ஆன்மா நிலைத்த பொருளாய் இருக்கின்றான்'' (பர.மோ.43)

எனவும் பிறப்பிற்கு முன்னரும் அறிவின் இருப்பு ஆன்மாவிடத்திருத் தலால் உண்பதற்குரிய பாலைக்குறித்துக்குழந்தையானது தொடர் வது முன் நினைவுத் தொடர்ச்சியை குறிக்கும் எனவும் (பர.கா.44) இவ்வாறாகப் பிறப்பு வரிசை ஆன்மாக்கட்கு அநாதியானது -அதனால் அநாதியான பொருள் நாசமடையாது - ஆகவே ஆன்மா வும் அநாதி என தனித்தனியாகவும் பிரமாணம் காட்டியதுடன் 'அறிவினை இயல்பாகவுடையது ஆன்மா' எனவும் காட்டப்பட்டது.

மறதி, அறிவின்மை என்பன மலமறைப்புக் காரணமாகவே உண்டாகின்ற தென்பதும் இதன் தாற்பரியமெனலாம். இருவினை கள் காரணமாகப் பல்வேறு பிறவிகள் உண்டென்பதும் அனுமானப் பிரமாண மூலம் நிச்சயிக்க முயன்றுள்ளது. இவ்வாறு கூறுவதானது பூவுலகிலே மக்களது ஒழுக்கத்தையும் அறவாழ்வையும் வலியுறுத் தும் பொருட்டு இன்றியமையாது வேண்டப்படும் ஒரு சிந்தனைத் தூண்டுகோலெனலாம். உலகிலே நல்லவரின் துன்பங்கட்கும்-தீமை புரிந்தவர்களின் இன்பங்கட்கும் அவரவர் பல பிறவிகளில் செய்த செயல்களே காரணம் என்பதனை அறிவினால்-அனுபவத்தினால் -யுத்தியினால் அனுமானித்துணரலாம் என்பதே சைவசித்தாந்தத்துணி பாகும்.

இத்தகைய ஒரு அறிவுரையானது மக்கள் வாழ்வில் ஒழுக்கவி யல் அறநியமங்கட்கும் சித்தாந்தம் வழங்கும் உறுதிப்பாட்டை அறிவுறுத்துவதாகவும் அமையும் எனலாம். சிவாகமங்களில் இடம் பெற்றுள்ள 'நியதிதத்துவம்' இவற்றின் வாழ்வியல் நோக்கினை நன்கு தெளிவுபடுத்துகின்றது. நாயன்மார்களது பரரோபகாரச் செயல்களும், மெய்யடியார்களது கருணைநோக்கும் அவர்களாற்றும் அற்புதங்களும் மக்களை நல் ஆற்றுப்படுத்தும் ஒரு தூண்டுதலாகும் எனலாம். ஆனால் பற்றற்ற கருமமே தருமத்திற்கு அத்திவாரமா கின்றது. அத்துடன் 'ஈசனோடாயினும்' ஆசை அறுமின்' எனத் திருமந்திரம் இதனை மேலும் ஒருபடி அதிகமாகக் கூறியது, பலன் கருதியாற்றும் செயல்கள் புண்ணிய பாவங்கட்குபட்டதாகி



**இம்மைக்கும் மறுமைக்கும் இட்டுச் செல்லும் பதமுத்தித் தானங் களை அடைவிககும் அதனால் பிற மதத்தவர்கள் மாயையைக் கடவாமையால் பத முத்தி உலகங்களிலேயிருக்கின்றனர் எனவும் சிவசாரூப்பியம் ஒன்றே விடுதலை என உணர்ந்தவர் சைவ சித் தாந்தத்தில் பரமுத்தித்தானத்தை அடைவரென்பதும் இப்பிரகரணத் தால் விளக்கப்பட்டது.[39] முத்தி நிலைபற்றிய இப்பிரகரணத்தின் சிந்தனைகள் மேலும் ஆய்வுக்குரியவை, மோட்சம் பற்றிய எண் ணக்கருவினால் நித்தியானந்த நிலை ஒன்றினை அவை நிலைநாட்ட முற்படுகின்றன எனலாம்.**

## உரையாசிரியர்பங்கு

**அஷ்டப்பிரகரணம் பற்றிக் கூறுமிடத்து இவற்றிலே ஆறுபிரக ரணங்கட்கு விருத்தியுரை செய்த அகோர சிவாச்சார்யார் பற்றி அவசியம் குறிப்பிட்டாக வேண்டும். இரண்டு பிரகரணங்கட்கு ஸ்ரீ பட்டராமகண்டர் விருத்தியுரை செய்திருக்கின்றார். அகோரசிவர் தமிழ் நாட்டைச் சேர்ந்தவர் எனவும் 1 ம் குலோத்துங்கன் காலத்திலே (கி.பி. 1103-1150) வாழ்ந்தவராகவும் கம்பர் சேக்கிழார் போன்றவர்கட்குச் சமகாலத்தவராகவும் கருதப்படுவதனால்; இவரது காலம் கி.பி. 12 ம் நூற்றாண்டாகலாம் எனப் பொதுவாகக் கருதப் படும். சைவ சித்தாந்தக் கோட்பாட்டு வளர்ச்சியினைத் தமிழ் நாட் டிலே முன்னெடுத்த சான்றோர்களில் அகோர சிவாச்சாரியாரும் ஒருவராக விளங்குகிறார். இவரது கோயிற் கிரியைகள் பற்றிய பத்ததி நூல்களும் இந்துக் கோவில்களில் பிரசித்தி பெற்றவையெனலாம். தனது விருத்தியுரைகள் அனைத்திலும் பல்வேறு சிவாகமங்களி லிருந்து மேற்கோள் காட்டி உரைசெய்த வித்துவத்தால் அன்னாரது சிவாகமப்பயிற்சியையும் புலமை என்பனவற்றையும் அவரது உரைநூல்கள் உட்பட அனைத்தும் பறைசாற்றுவனவாக அமைந்துள் ளன.**

## முடிவுரை

**அஷ்டப்பிரகரண சைவசித்தாந்த நூல்களும் வேத சிவாகம உண்மைகளை வலியுறுத்துவதனால் மெய் கண்டசாத்திரங்கள் போன்று வைதிக சுத்தாத்துவித சைவ சித்தாந்ததையே பெரிதும் விளம்பி நிற்கின்றன, சைவசித்தாந்தத்தை முதன்மைப்படுத்தும்**

திருமந்திரமும் 'வேதத்தை விட்ட அறமில்லை' எனப்பகர்ந்துள்ளது' மோட்சகாரிகையிலும்,

> ''சைவ சாத்திரத்திலுள்ள பொருட்கள் ஏனைய
> பிரமாணங்களால் மறுக்கப்படவில்லை இவை
> சைவவைதிகர்களால் இன்றியமையாது
> கிரகிக்கப்பட வேண்டும்.'' *(மோ.கா.146)*

என்னும் சத்தியோஜோதி சிவாச்சார்யாரின் கருத்தும் இதனை ஆமோதிக்கும். சிறப்பாக யாழ்ப்பாணத்தில் சைவம் வளர்த்த சான்றோர்களும் இத்தகைய சிந்தனையோட்டமுள்ளவர்களாக விளங்கியமையினைக் குறிப்பிடலாம்.

> ''நாவலர் சரித்திரம் வைதிக சைவசரித்திரம், வைதிகம் தூய அறிவு நெறி அது சிவசம்பந்தம் உறும் போது சைவம் எனப்படும்''

என்று நாவலர் சரிதம் பற்றிப் பண்டிதமணி விளக்கினார். பண்டித மணியின் கந்தபுராணம்'' வைதிகசைவ பொக்கிஷம்' எனச் சிந்த னைக்களஞ்சியத்திலும் சிறப்பிக்கப்பட்டது, மேலும் நமது சைவம் வைதிகசைவம்; வைதிகம் வேதசம்பந்தம்; வேதம் சிவசம்பந்தம்; வைதிகம் உடல்-சைவம் உயிர்; எனப் பண்டிதமணி அவர்கள் வைதிகசைவத் தொடர்பினை தெளிவாகக் காட்டியுள்ளார். தற்கால நவீன சிந்தனையாளராகக் கருதப்படும் விஞ்ஞானக் கல்விவழிவந்த மெய்ஞானியான பொ. கைலாசபதி என்பார் கூட மேற்குறித்தவற் றினை அங்கீகரிப்பது போன்று;

> ''காரியம் என்ன என்று அறியும் மார்க்கம்
> வைதிகம் - அறித்தபின் விடுதல் சைவம்;
> வேதத்திற்கு வேதாந்தம் போல சமயத்துறையின்
> பூரணம் சித்தாந்தம்''[41]

என்று சைவசித்தாந்தம் சகல சமயத்துறைகளினதும் முடிந்த முடிவு என்பதனை ஆழ்ந்த சிந்தனை வாயிலாகக் வெளிப்படுத்தினார். ஆதலால் சிவாகமசாரமான சைவசித்தாந்தத்தின் அடிப்படைக் கோட்பாடுகளை வெளிப்படுத்தும் காலத்தால் முற்பட்ட சாத்திர நூல்களாக 'அஷ்டப் பிரகரண' நூல்கள் விளங்குவதனால் அவையா வும் 'சிவாகமங்களின் சார்பு நூல்கள்'[42] எனச் சிறப்பிக்கப்படும்



பெற்றி வாய்ந்தனவாகவுமுள்ளன எனலாம். 'வைதிகம் அறிந்தபின் விடுதல் சைவம்' என்பதிலிருநுது சமாயமசாரங்களை வென்றசமயா தீதநிலை சைவசித்தாந்தமா என்னும் பொருட்குறிப்பு மேலும் விளக்கம் பெறுவது அவசியமாகும்.

## அடிக்குறிப்புக்கள்

1. Rohan A. Dunuwila, Saivasidhanta Theology, Motilal Banasidas, Delhi, 1985,P.56

   இராசமாணிக்கனார், டாக்டர், மா, சைவசமய வளர்ச்சி, பாரி நிலையம், சென்னை, 1992,பக்.57

   கலைவாணி இராமநாதன் திருமதி, வேதபாரம்பரியமும் சைவசித்தாந்தமும், ஸ்ரீ ரெங்காபிறின்ரஸ், மதுரை, 1992, பக்.7-8

   மாணிக்கவாசகம், டாக்டர், இரா.திருமந்திர ஆராய்ச்சி, அன்னை அபிராமி அருள் வெளியீடு, சென்னை, 1982, பக்.73-76; 88 :, (இந்நூலின் இரண்டாம் கட்டுரையிலும் இது பற்றிக் காணலாம்.)

2. சிவஞான சித்தியார், திருவிளங்கம்புத்துரை, கூட்டுறவுத் தமிழ் நூற்பதிப்பு விற்பனைக்கழகம், யாழ்ப்பாணம், 1971,

   சூ : 8.2, 266

   வேதம் பொது ஆகமம் சிறப்பு என்பதன் விளக்கங்களையும் 449-454 வரையுள்ள பக்கங்களில் காண்க.

   சிவப்பிரகாசம், திருவிளங்கம் புத்துரை, மேற்படி, 1974, பதியிலக்கணம் பாடல் 13

3. சிவஞான சித்தியார் சூ; 8.2.267

4. Astapraharana, Edited by: N. Krishna Sastri and K.M. Subramania sastri, Devakottai South India, Saivasiddhata paripalana Sangam, 1928

5. அஷ்டப் பிரகரணம், பகுதி - II, போககாரிகை, இரத்தினத் திரயம், நாதகாரிகை, மோட்ச காரிகை பரமோட்ச நிராசகா ரிகை மூலமும் விருத்தியுரையும், தமிழில் நா. கிருஷ்ண சாஸ்திரிகள் மு.சுப்பிரமணியசாஸ்திரிகள், தேவகோட்டை சிவாகம சித்தாந்த பரிபாலன சங்கம், காரைக்குடி 1927 முன்னுரை,பக்.2

6. எமது கலாநிதிப்பட்ட ஆய்வுக்கென இந்நூலானது பேராசிரியர் கோ. சுந்தரமூர்த்தி அவர்களால் மதுரைப் பல்கலைக்கழகத்தில் எமக்குத் தரப்பட்டது அத்தலைப்பு யாழ் பல்கலைக் கழகத்திற்கு 1990 ம் ஆண்டில் தெரிவிக்கப்பட்ட பின்னர் யாழ்ப்பாண அறிஞர் மத்தியிலும் 'அஷ்டப் பிரகரணம்' என்ற இப்பிரகரணம் பற்றி அறியும் ஆவலும் விழிப்புணர்ச்சியும் பலரிடையே மேலோங்குவதற்கும் பேராசிரியர் சுந்தரமூர்த்தியவர்களே முதற்காரணமும் மூலகாரணமும் ஆவார் எனில் மிகையில்லை. அதன் பின்னரே யாழ்ப்பாணத்திலும் சில பெரியார்களிடையே அப்பிரதிகள் சில இருப்பதனை அறியும் வாய்ப்புமேற்பட்டது.

7. சுந்தரமூர்த்தி, பேராசிரியர், கோ,வடமொழி நூல்களில் சைவசித்தாந்தம்; பகுதி I தத்துவப்பிரகாசமும், அதன் இரு உரைகளும், சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை 1979

   'வடமொழிச் சிவஞான போதமும் அதற்கு தட்சணா மூர்த்தி ஞானதேவர் அருளிய விருத்தியும், சர்வோதய இலக்கியப் பண்ணை, 1977

8. தகாரே, டாக்டர், க.வா; சைவதத்துவம், (மராட்டி மூலம்) தமிழில்; கா.ஸ்ரீ. ஸ்ரீனிவாசாச்சார்யார், அல்லயன்ஸ் கொம்பனி, சென்னை, 1990 என்னும் நூலில் காண்க.

9. Saivasiddhata Theology, P.61.

10. Op . cit

    Pandey, K.C. Abinavagipta, Chowkamba Sanskritseris, Varnasi, 1963, PP. 170-180

11. Saivasiddhanta Theology, PP.62-64

12. தகாரே, மு.கு.நூ. பக். 202, Saivasiddhata, Theology, P.62.

13. இராசமாணிக்கனார், மா., மு. கு. நூ. பக். 76

14. அஷ்டப்பிரகரணம், (தமிழ் மூலம்) இரத்தினத்திரயம், பக்.15

15. அஷ்டப்பிரகரணம் (தமிழ் மூலம்) நாதகாரிகை பக்.232

16. மேற்படி, பக்.236

17. Saivasiddhata Theology, PP.64-65

18. அஷ்டப்பிரகரணம் (தமிழில்) பகுதி I, தத்துவ சங்கிரகம், சிவாகமசித்தாந்த பரிபாலன சங்கம், 1927, பக். 72-73



19. மேற்படி, பக்.108

20. மேற்படி பக். 121-126, 142-144

21. அஷ்டப்பிரகரணம், பகுதி I தத்துவசங்கிரகம், பக்.82; தத்துவத்திரய நிர்ணயம், பக் 129

22. அஷ்டப்பிரகரணம் பகுதி I தத்துவத்திரய நிர்ணயம் பக்: 149-150

23. அஷ்டப்பிரகரணம், போககாரிகை பக்.141

24. மேற்படி, பக். 178-180

25. சிவஞான சித்தியார், சூ;2, பக் 231-268

26. Buton Stein, The state and peasant Society in medival South India,PP.230-243.

27. கலைவாணி இராமநாதன் திருமதி; இந்துதர்மமும் வர்ணதர்மமும், ஸ்ரீ ரெங்கா பிறின்ரஸ், மதுரை, 1992, பக். 16-50

28. அஷ்டப்பிரகரணம், பரமோட்ச நிராசகாரிகை பக்.361-362

29. சிவஞான சித்தியார், அளவையிலக்கணம், பக்.23

30. சிவத்தம்பி பேராசிரியர், கா, தமிழ் இலக்கியத்தில் மதமும் மானிடமும், பக் 106-107.

31. மேற்படி பக். 126.

32. போக காரிகை, சு: 89; பக். 189.

33. மோட்சகாரிகை, பக் 325, பரமோட்ச நிராச காரிகை, பக் 333

34. மேற்படி, சு, 97, 98, 99; பக்; 296.

35. மேற்படி, பக் 297.

36. தமிழ் இலக்கியத்தில் மதமும் மானிடமும், பக் 106.

37. மோட்ச நிராசகாரிகை பக்,322-23.

38. பரமோட்ச காரிகை பக். 410-415.

39. மேற்படி, சு; 57.பக் 417-418.

40. Saivasiddthanta Theology; P. 68, வடமொழி நூல்களில் சைவசித்தாந்தம், முன்னுரை பார்க்க.

41. பொ. கைலாசபதியின் சிந்தனைகள், பதிப்பாசிரியர்கள், எஸ். சுசீந்திரராசா, எஸ்.சபாரட்ணம், யாழ் பல்கலைக்கழக வெளியீடு, 1993, பக்.34-38

42. சிவஞான சித்தியார், பக்-453

# ஆய்வு நூற்பட்டியல் *Bibliography*


**தமிழ் மூல நூல்கள்**

சிவஞானபோதம், மெய்கண்டதேவர் பொழிப்புரையும். சிவஞானசுவாமிகள் சிற்றுரையும் ஆறுமுக நாவலர் பதிப்பு, சென்னை சர்வதாரிவருடம்.

சிவஞான சித்தியார்; மு. திருவிளங்கம் புத்துரை, கூட்டுறவுத் தமிழ் நூற் பதிப்பு விற்பனைக்கழகம், யாழ்ப்பாணம், 1971.

சிவப்பிரகாசம், மு. திரு விளங்கம் உரை, கூட்டுறவுத் தமிழ் நூற்பதிப்பு விற்பனைக் கழகம், யாழ்ப்பாணம், 1974.

சிவஞான மாபாடியம், சிவஞானசுவாமிகள் உரை, சைவ சித்தந்த நூற்பதிப்புக்கழகம வெளியீடு, சென்னை, 1968.

திருக்களிற்றுப்படியார், திருக்கடவூர் உய்யவந்ததேவநாயனார், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு, சென்னை.

திருவருட் பயன், சு. சிவபாத சுந்தரனார் உரை, யாழ்ப்பாணம், எட்டாம்பதிப்பு, மன்மத் வருடம்.

திருமந்திரம், திருப்பனந்தாள் காசிமடவெளியீடு ஸ்ரீவைகுண்டம், 1968.

திருவாசகம், பகுதி 1 அருளம்பலவனார் உரை, யாழ்ப்பாணம், இலங்கை.

திருக்குறள், வள்ளுவர் வாய்மொழி, லிப்கோ வெளியீடு, சென்னை 1991

தொல்காப்பியம், பொருளதிகார ஆராய்ச்சி, மு. இராகவையங்கார், மானாமதுரை, 1960.

பன்னிருதிருமுறைப் பெரும் திரட்டு, ப. இராமநாத பிள்ளை, தொகுப்பாசிரியர், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1961.

**வடமொழி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள்.**

அஷ்டப்பிரகரணம், தமிழில், மூலமும் விருத்தியுரையும், நா. கிருஷ்ண சாஸ்திரிகள், மு. சுப்பிரமணிய சாஸ்திரிகள், சிவாகம சித்தாந்த பரிபாலன சங்கம், தேவகோட்டை, 1927.

சர்வஞானோதராகமம் ஞானாபாதம் தமிழ் மூலமும் விருத்தியுரையும், தமிழில் பொ. முத்தையா பிள்ளை கும்பகோணம், 1923.

பௌஷ்கராகமம், தமிழில்: சண்முகசுந்தர முதலியார் சென்னை, 1881.

வட மொழிச் சிவஞான போதமும் அதற்குத் தட்ச ஞானதேவர் அருளிய விருத்தியுரையும், தமிழில்: டாக்டர். கோ. சுந்தரமூர்த்தி, சர்வோதய இலக்கியப்பண்ணை மதுரை, 1977.

வடமொழி நூல்களில் சைவசித்தாந்தம், பகுதி 1, தத்துவப்பிரகாசமும் அதன் இரு உரைகளும், தமிழில் டாக்டர் கோ.சுந்தரமூர்த்தி, சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை, 1979.

**ஆங்கிலத்தில்**

Matanga paramehwaragama, Vidyapada, Edited by : N.R.Bhatt, French Institute Indology, Pondicheri, 1961.

Mrgendragama
Vidya and yogapada, Sivagama siddhanta paripalana sanagam, Devakottai, 1928.

## ஏனைய தமிழ் நூல்கள்

அருணைவடிவேல் முதலியார், எஸ், சித்தாந்தத் தெளிவியல், தருமபுர ஆதீனம், தமிழ் நாடு, 1968.

இரத்தினசபாபதி, டாக்டர், வை, திருமுறைத் தெளிவே சைவசித்தாந்தம், டாக்டர். இராதாக்கிருஷ்ணன் மெய்யுணர்வு மேனிலைக் கல்வி நிறுவனம், சென்னைப் பல்கலைக்கழகம், 1979.

இராசமாணிக்கனார், டாக்டர், மா, சைவசமய வளர்ச்சி, பாரி நிலையம், சென்னை 1972.

இராமலிங்கம்,டாக்டர், எஸ், கீழை மேலைநாடுகளில் மெய்ப்பொருளியல் வரலாறு பகுதி 1, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1970.

கந்தையா, பண்டிதர் மு, சித்தாந்த வித்யாபீடம், யாழ்ப்பாணம், 1978.

குப்புசாமி முதலியார், டாக்டர், எஸ் சித்த மருத்துவம், தமிழ்ப்பாட நூல் நிறுவனம், சென்னை.

கலைவாணி இராமநாதன், திருமதி வேத பாரம்பரியமும் சைவசித்தாந்தமும், ஸ்ரீ ரெங்கா பிறின்டர்ஸ், மதுரை, 1992.

கலைவாணி இராமநாதன், திருமதி, இந்துதர்மமும் வர்ணதர்மமும் ஸ்ரீ. ரெங்காபிறின்ட்ர்ஸ், மதுரை 1992.

சிவத்தம்பி, பேராசிரியர்,கா. தமிழ் இலக்கியத்தில் மதமும்மானிடமும், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1967.

சிவபாதசுந்தரனார், எஸ், கந்தபுராண விளக்கம், சென்னை, பவவருடம்.



சுப்பிரமணியபிள்ளை, கா., தமிழ் இலக்கியவரலாறு, பகுதி II, சென்னை, 1949.

சுசீந்திரராஜா, பேராசிரியர், எஸ்.
சபாரட்ணம், எஸ், (பதிப்பாசிரியர்கள்), பொ.கைலசபதியின் சிந்தனைகள், யாழ்ப்பாணப்பல்கலைக்கழகம், 1993.

செந்திநாதையர் காசிவாசி, சி, கந்தபுராண நவநீதம், சென்னை 1986.

தக்காரே, டாக்டர், க.வா, சைவதத்துவம், (மராட்டி மூலம் தமிழில்: கா. ஸ்ரீ. ஸ்ரீனிவாஸாச்சாரியார், சென்னை, 1990.

துரைசாமிப்பிள்ளை, ஔவை., சிவஞானபோதச் செம்பொருள், திருப்பனந்தாள் காசிமட வெளியீடு, ஸ்ரீவைகுண்டம், 1958.

மாணிக்கவாசகம், டாக்டர், மா., திருமந்திர ஆராய்ச்சி, அன்னை அபிராமி வெளியீடு, சென்னை, 1982.

மாணிக்கவாசகம், டாக்டர், மா., நம் நாட்டுச் சித்தர்கள், அன்னை அபிராமி அருள், சென்னை 1982.

வெள்ளைவாரணனார், வித்துவான், பன்னிருதிருமுறை வரலாறு, பகுதி 1 அண்ணாமலைப்பல்கலைக்கழகம்,

## ஆய்வுக்கட்டுரைகள்

கிருஷ்ணராஜா, கலாநிதி சோ, மெய் கண்ட சாத்திரங்கட்கு முற்பட்ட சைவசித்தாந்தம், பண்டித மணி நினைவுக் கட்டுரை, யாழ்ப்பாணப்பல்கலைக்கழகம், 1993.

வேதநாதன்,மா., சித்தர் சமயதத்துவம் - ஓர் ஆய்வு அமரர். இரத்தின சபாபதி பாக்கிய நாதன் நினைவுக் கட்டுரை, 1995.

**மலர்கள் :**

அருணைவடிவேல் முதலியார். சி. சைவசமயம் தமிழர் நெறி, சைவசித்தாந்தப் பொன் விழாமலர், சைவசித்தாந்த மகா சமாஜ வெளியீடு, சென்னை, 1955.

வச்சிரவேல் முதலியார்,க. சித்தாந்த சைவத்தின் முதற் பொருளும் அணையு நெறியும், சைவசித்தாந்தப் பொன்விழா மலர், சென்னை, 1955.

**ஆங்கில நூல்கள்**

AL bert schweitzer, Indian Thought and its development, Bombay, 1960.

Balasubramaniam K.M.,(Edited) Collected Lectures on Saiva siddhanta, 1963-1973 Annamalai university, 1949.

Subramaniya pillai. K., Metaphysics and saiva siddhanta, Madras, 1965.

Siddha lingaiah T.B., Origin and development of Saiva siddhanta up to 13th centary, Nepoleon Press, Madurai, 1979.

Rohan. Dunuwila, A., Saivasiddhanta Theology, Motilal, Banasidas, Delhi, 1985.

Dictationary., Dictationary of Margret Stutaleya Hinduism, United Kingdom.



## நூலாசிரியர் பற்றி......

பரந்துபட்ட விடயங்களை உள்ளடக்கிய சைவசித்தாந்தம் பற்றிய ஒரு பரிமாணத்தை அறிந்து கொள்வதற்குத் திருமதி. கலைவாணி இராமநாதனின் இந்நூல் துணைபுரிகின்றது. பாடசாலைகளில் உயர் வகுப்புக்களில் பயிலும் மாணவர்களும் பல்கலைக்கழகத்தில் பயிலும் மாணவர்களும் சைவசித்தாந்தம் பற்றிய விடயங்களை எளிதில் விளங்கும் வண்ணம் ஆசிரியர் விடயங்களைக் கூறுகின்றார்.

பேராசிரியர், கலாநிதி.
**ப. கோபாலகிருஷ்ணன்,**
தலைவர்/இந்து நாகரிகத்துறை,
யாழ்ப்பாணப்பல்கலைக்கழகம்.

யாழ்ப்பாணப்பல்கலைக்கழக இந்து நாகரிகத் துறையில் சிரேஷ்ட விரிவுரையாளராக இருக்கும் திருமதி கலைவாணி இராமநாதன் ''சைவசித்தாந்த மெய்ப் பொருளியல்'' என்னும் நூலை எழுதிவெளியிட்டிருப்பது பற்றி மிகுந்த மகிழ்ச்சியடைகிறேன். திருமதி. இராமநாதன் இந்து நாகரிகக் கற்கை நெறியை இருபது வருடங்கட்கு மேலாகப்பல்கலைக்கழகத்தில் கற்பித்து வருகிறார். அண்மைக்காலத்தில் சைவசித்தாந்தத்தில் ஆய்வுகள் மேற்கொண்டும், எழுதியும், பேசியும் வருகின்றார். இக் கற்கை நெறியை விஞ்ஞானரீதியில் புதிய பரிமாணத்தில் விருத்தி செய்வதற்கு இவர் பெரும்பங்காற்றியும் வருகின்றார்.

பேராசியர் கலாநிதி.
**பொ.பாலசுந்தரம்பிள்ளை,**
துணைவேந்தர்,
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்.

Printed by
Kaarthigeyan (Pvt) Ltd, 501/2 Galle Road, Colombo 06
Tel : 595875, Fax : 595454